# பத்துப்பாட்டு வசனம்

சங்க நூல்களுள் பத்துப்பாட்டுத் தலைமை பெற்றது. அதன்கண் தமிழ் வேந்தரின் பேரொழுக்கம், வீரம், கொடை முதலியனவும், அக்கால மக்களின் தொழில், வாழ்க்கை முறை, பழக்க வழக்கம் ஆகியனவும் துலக்க முறக் கூறப்பட்டுள்ளன. சுருங்கக் கூறுமிடத்து பத்துப் பாட்டு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்க ளது உண்மைச் சரித்திரமாகும். அதனைப் பண்டைத் தமிழகத்தின் களங்கமற்ற நிழற்படம் எனக் கூறினும் மிகையாகாது.

அந்நூல் பற்றுள்ளமின்றி உள்ளதை உள்ளவாறே கூறுகின்றமையின் ஒப்புயர்வில்லாதது. ஆனமைபற்றியே,

"பத்துப்பாட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையு மிலக்கணமில் கற்பனையே"

என ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் கூறுவாராயினர்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் அந்நூற் குரை கண்டில ரேல் அதன்கண் காணப்படும் வியத்தகு பொருள்களை யாம் கண்டு மகிழ்தல் அரிதாகும். அந்நூல் உரையுடன் மிளிரி னும் அதனைக் கற்று விளங்குதல் சாதாரண கல்வியாளர்க்கு எளிதன்று. இக்குறையை நீக்குவதற்கு எழுந்ததே இந் நூலென்க.

வசன நடையில் அமைந்துள்ள இந்நூல் மாணவர்க் கும் பிறர்க்கும் பெரும் பயனளிக்குமென்பது திண்ணம்.

விலை ரூ. 1 0 0

றுமை ஆபீஸ்
டை : சென்னை

# தமிழ்நாட்டு மூவேந்தர்

ஆக்கியவர்

ம. க. ஜயராம் நாயுடு அவர்கள்

தமிழாசிரியர்

Approved for class use by the Text Book Committee, Madras
Vide, Fort St. George Gazette, Part I-B ; Page 186 ; Dated
9th April 1929

ஒற்றுமை ஆபீஸ்
சைதாப்பேட்டை, சென்னை

 [பன்னிரண்டணா

## உள்ளுறை

பகுதி | | பக்கம்



## நெடுஞ்சேரலாதன்

# அணிந்துரை

ஒரு நாட்டினுடைய அருமை பெருமை நாகரிகம் முதலியவற்றை, அது படைத்த நூல்களைக் கொண்டும், அந்நூல்கள் வாயிலாகக் காணப்படும் மேதாவிகளுடைய அரிய செயல்களைக் கொண்டும் நன்கு அறியலாகும். பண்டைக் காலத்தில் தமிழ் நாடு எத்துணைச் சிறப்புற்றிருந்த தென்பது, பண்டைத் தமிழ் நூல்களை உற்று நோக்கு மவர்க்குப் புலப்படாமற் போகாது. முன்னோர் கருந் தனமாக வைத்துச் சென்ற அந்நூல்களிற் காணும் அரிய செய்திகளை யுணர்ந்து ஒழுகுவ ராயின், தமிழ் மக்கள் பெரும் பயனையும் முன்னேற்றத்தையு மடைவர் என்பதில் ஐயமும் உளதோ?

பண்டைத் தமிழ் மக்களுடைய பழக்க வழக்கங்களையும், மற்றும் பலவற்றையும் உணர்த்தும் முன்னூல்களிற் பொதிந்துள்ள வரலாறுகளைத் தமிழ் நாட்டு மாணவர் அறிதல் இன்றியமையாத தாகு மென்பதை அறிஞர் அனைவரும் ஒப்புக்கொள்வர் ஒரு நாட்டினுடைய பழைய நிலைமையையும், அது படைத்திருந்த பழக்க வழக்கங்களையும் அந்நாட்டு மக்கள் முதலிற் படித்தறிதல் வேண்டு மென்னும் உயர்ந்த கொள்கையை, அறிவுடையார் எவரும் மறுக்க மாட்டார். அங்ஙனம் படித் தறிந்தவரே, உண்மைக் கல்வி யறிவைப் பெற்றவ ராவர். அதை யுட்கொண்டே சங்க நூல்களையும், அறிஞர் சிலருடைய ஆராய்ச்சி உரைகளையும் தழுவி, மாணவரும் மற்றையோரும் எளிதில் உணரும்

வண்ணம் இந்நூலை யாம் ஆக்கினேம். காலத்தையும் தொன்மையையும் நோக்கிப் பாண்டிய மன்னருள் மாகீர்த்தி, சோழ வரசருள் முதற் கரிகாலன், சேர வேந்தருள் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆகிய மூவருடைய வரலாறு களையும் முறையே யாம் அறிந்த வரை இந்நூலிற் சுருங்க வெளியிட்டுள்ளேம். அம்மன்னருடைய வரலாறுகளுடன், அன்னோர் காலத்தில் தமிழ் நாடு படைத்திருந்த கல்வி, அறிவு, ஒழுக்கம், செல்வம், வீரம், அறம், அரசியல் முறை முதலியவற்றையும், அரிய நீதிகள் பலவற்றையும், இந் நூலில் விளங்கக் காணலாம்.

இந்நூல், கல்லூரிகளில் தமிழ் மொழி பயிலும் மாண வர்க்குப் பெரிதும் பயன்படக் கூடியவாறு அமைந்து கிடக் கின்ற தென்பதை, இதைப் படிக்கும் ஒவ்வொருவரும் உள்ளங்கை நெல்லிக்கனி யென உணர்வர். இதை யேற்றுக் கல்லூரிகளிற் பாட புத்தகமாக அமைத்து அன்புடன் நம் மவர் ஆதரிப்ப ராயின், இதைப் போன்ற பல நூல்களை வெளியிட ஊக்கங் கொண்டு உழைத்து வரும் எம்முடைய முயற்சி முட்டின்றி முடியும். நாட்டினுடைய நன்மையைக் கருதி அறிஞர் அனைவரும் இப்புத்தகத்தை அன்புடன் வரவேற்பர் என்று நம்பு கிறேம்.

குற்றங் குறைக ளிருப்பின் உலகம் பொறுத்தருள வேண்டுகின்றேம்.

சென்னை, பேரியமேட்
4-4-1927

இங்ஙனம்
ம. க. ஜயராம் நாயுடு

# முன்னுரை

சில காலமாக நம் நாட்டில் தாய்மொழி வளர்ச்சியைக் கருதி அறிஞர் பலர், பேரூக்கஞ் செலுத்திவருகின்றனர். அன்னோர், பல்வேறு வழிகளில் முயல்கின்றனர். அவர்கள் முயலும் வழி பலவேனும் எல்லோருடைய கருத்து முடிவில் ஒன்றாகவே இருக்கின்றது.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்கத் தொகை நூற்களிற் காணப்படும் சிலபல குறிப்புக்களை உதவியாகக் கொண்டு, பண்டைத் தமிழருடைய வீரதீரச் செயல்களும், தெய்வ வழிபாடும், தாய்மொழியினுடைய ஆர்வமும், அரசியலுரிமையும், பிறவும் இளைஞர் மனத்தில் நன்கு பதியும் வண்ணம் எளிய நடையில் உரைநூல்கள் எழுதி அறிஞர் சிலர் வெளியிட்டு வருகின்றனர்.

அத்தகைய நூல்களைப் படிப்பதால் பழையகாலச் செய்திகள் பலவற்றை மாணவர் அறிந்து, மேல்நாட்டுப் பழக்க வழக்கங்களோடு ஒப்பிட்டுப் பார்த்து உண்மை யறிய இடம் ஏற்படும் என்பது அவர்கள் கருத்தாகும். மொழி வளர்ச்சியை நாடுவோருள் ஒரு சாரார் கொள்கை இதுவே யாகும்.

இக்கொள்கையை மேற்கொண்டு திருவல்லிக்கேணி, கெல்லெட் ஹைஸ்கூல் தமிழாசிரியரும், என் நண்பருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ ம. க. ஜயராம் நாயுடு அவர்கள் எழுதி வெளி

யிட்டிருக்கும் இந்நூல், தமிழ்நாட்டு மாணவர் ப ம படித்து இன்புறற்கு ஏற்ற முறையில் எழுதப்பட்டதாகும்.

பல்வேறிடங்களிலும் உள்ள அறிஞர்கள் இவர்கள் முயற்சியைப் பாராட்டி இதுபோன்ற உரைநூல்கள் பல வெளிவர ஆதரவளிப்பார்களென்று நம்புகிறேன்.

இதற்கு முன்னமே வெளிவந்துள்ள இவர்கள் நூல்களால் தமிழறிஞர் இவர்கள் திறமையை நன்கு அறிவர். ஆதலால், அதிகமாக எழுதுவதை நிறுத்திக்கொள்கிறேன்.

(Sd.) வே. துரைசாமி ஐயர்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
பி. எஸ். ஹைஸ்கூல்

மயிலை
15-4-27

# தமிழ்நாட்டு மூவேந்தர்

—:o:—

# ஜயமாகீர்த்தி

## முதற் பகுதி

### ஜயமாகிர்த்தி அரசியல்

பூவுலகெங்கணும் மிக்க புகழ்படைத்து விளங்குவதாகும் நாம் வாழும் இப்பாரத நாடு. பல்லாயிரமாண்டுகளுக்கு முன்னரே இந்நாட்டிலிருந்த மக்கள், கல்வி அறிவு ஒழுக்கம் செல்வம் கடவுள்வழிபாடு முதலியவற்றில் மிகச் சிறந்து உயர்ந்த நிலைமையிலிருந்தனர் என்பது நமக்குப் பலவகையானும் செவ்வனே புலப்படுகின்றது. அங்ஙனம் ஒப்புயர்வின்றி முன்னேற்றமடைந்திருந்த இந்நாட்டை, எந்நாட்டினரும் நன்கு மதித்துப் புகழ்ந்து பேசுதல் இயல்பேயன்றோ? பல வளங்களையும் ஒருங்கே படைத்துத் திருவுற்றிருந்த நம் நாடு முழுவதையும் எண்ணிறந்த செங்கோல் மன்னர், ஒற்றை வெண்கொற்றக் குடை நிழலிலிருந்து, மன்னுயிரைத் தம்முயிராக மதித்து, அறநெறிக்குச் சிறிதும் மாறுபாடின்றிச் செங்கோலோச்சிச், சீரும் சிறப்புமெய்தி, அந்தமில் இன்பத்து அறிவன் தாளிணைக்கு ஆளாயினர். அவ்வாறு அரசாண்டு பெரும்புகழ்படைத்துத் திகழ்ந்த மன்னருட் சிலர், காய்கதிர்ச் செல்வன் வழித் தோன்றிய தோன்றல்களாவர்; சிலர், திங்கள் குலத்துதித்த செம்மல்களாவர்.

அம்மன்னர்க ளெல்லாரும், அற மேற்கொண்டு மறங் கடிந்து, தங்கள் ஆளுகைக் குட்பட்ட குடிகளுக்கு யாதொரு குறைவும் நேரா வண்ணம் மிக்க திறமையுடன் நாட்டைப் பாதுகாத்தார்கள். அந்த அரசர்களுடைய கல்வி, அறிவு, வாய்மை, வீரம், கொடை, அரசாங்கமுறை முதலியவற்றைப் பற்றிப் படிக்கும்பொழுது நமக்கு அளவற்ற வியப்பும் விருப் பும் உண்டாகு மென்பதிற் சிறிதேனும் ஐய மிலது. அத் தகைய அறிவிற் சிறந்த அண்ணல்கள் முற்காலத்தில் இந் நாட்டி லிருந்தார்களே! அவர்களுடைய பிற்காலத்துத் தோன்றிய நாம், தற்போது இந்த நாட்டில் எவ்வாறு இருக் கின்றோம் என்பதைக் குறித்து ஆராய்ந்து பார்ப்போ மாயின், முன்னேற மடைதற் குரிய அறிவு நமக்கு உண் டாகு மன்றோ? ஆதலால், நம் நாட்டை யரசாண்ட பண்டை அரசர்களுடைய வரலாறுகளைப் பற்றி நாம் படித் தறிவதால், மிக்க நன்மை யடைவோம் என்பது நன்றாய் விளங்குகின்ற தன்றோ?

நாம் பாரத நாட்டுத் தென்கோடியி லிருக்கின்றோம். நாம் வாழும் இந்நிலப் பகுதி தமிழ் நாடு என்றும், தென் னாடு என்றும் சொல்லப்படும். தமிழ் நாட்டை யாண்ட மன்னர்களுடைய வரலாறுகளை முதலில் நாம் அறிதலே நேர்மைத் தாகும். அமுதினும் இனிய தமிழ்மொழி வழங் கும் தென்னாடு, கன்னி நாடு, பொன்னி நாடு, குடகொங்கு நாடு என்னும் முதன்மையான மூன்று நாடுகளைத் தன் னகத்துக் கொண்டிருக்கின்றது. அம்மூன்று நாடுகளையும் முறையே பாண்டியர், சோழர், சேரர் என்னும் முடியுடை மூவேந்தர், செவ்வனே ஆண்டு சிறக்க வாழ்ந்திருந்தனர்.

குமரிக்குக் கன்னி என்னும் பெயர் ஒன்றுளது. கும ரியை யுடைய நாடாதலால், பாண்டிய நாடு கன்னி நாடு எனப்படும். தடாதகைப் பிராட்டியார் கன்னிப் பருவத்

தாண்ட நாடாதலால், பாண்டிய நாட்டைக் கன்னி நாடு எனக் கூறுவாரும் உளர். காவிரி நதிக்குள்ள பெயர்களிற் பொன்னி என்பதும் ஒன்று. அந்நதி பாவிப் பாயும் நாடாதலால், சோணாடு பொன்னி நாடென்றுஞ் சொல்லப் படும். சேரர், கொங்கர்கோ வென்றுங், குடவர்கோ வென்றும் அழைக்கப் படுகின்றனர்; ஆதலால், சேர நாட்டுக்குக் குடகொங்கு நாடு என்றும் பெயராயிற்று.

தமிழ் நாட்டை யாண்ட முடியுடை வேந்தர் மூவருள் ஒருவனுஞ், சோழர் குலத்துத் தோன்றியவனுமாகிய நெடு முடிக்கிள்ளி என்பான், தமிழ் நாட்டுக்கு வட கிழக்கில் ஒரு நாட்டை யுண்டாக்கி, அதைத் தன்னுடைய மைந்தனாகிய தொண்டைமான் இளந்திரையனுக்கு உரிமை யாக்கினான். அதனால், அந்நாட்டைத் தொண்டைமண்டலம் என்றும் தொண்டை நாடு என்றும் அனைவருஞ் சொல்ல லாயினர். அத்தொண்டை நாடு, சோழ நாட்டில் ஒரு பகுதியே யாகும். ஆதலின், அந்நாடும் தமிழ் மொழி பயிலும் தமிழ் நாட்டில் உள்ளடங்கியதே யாம். கிழக்கே கீழ்கடலும், தெற்கே கன்னியா குமரியும், மேற்கே மேற்கடலும், வடக்கே திருவேங்கட மலையு மாகிய நான்கும், தமிழ் நாட்டு நாற்புறத்து எல்லைகளாம்.

இன்பம் பயக்கும் தமிழ் மொழி பயிலும் நாடுகளுள் மிகச் சிறந்தது பாண்டிய நாடாகும் என்று பலரும் சொல்லுவர். ஏனெனில், செந்தமிழ்ச் செல்விக்குத் தாய் நாடானது அப்பாண்டிய நாடே யாதலால். தமிழ்மாது, தலை இடை கடை என்னும் முச்சங்கங்களிலும் மிக்க அழகுடன் வீற்றிருந்து பெருமை பெற இடந் தந்தது அந்நாடே யாகும். முச்சங்கங்களையும் நிலை நிறுத்தித் தமிழ் மொழியை யாதினும் அரிதாய்க் கருதி, இரவு பகல் என்னும் வேறுபா டின்றி, அம்மொழி தலைசிறந்து விளங்க

நாடெங்கும் பரவச் செய்தவர்கள், பாண்டிய மன்னர்களே யாவார்கள். பாண்டியர் மரபி லுதித்த அரசர்க ளெல்லாரும் அரச செல்வத்துடன் ஒப்புயர் வற்ற கல்விச் செல்வத்தையும் பெற்று என்றும் அழியாப் புகழுடன் விளங்கினார்கள். அத்தன்மைத்தாய உயர்ந்த பாண்டிய மன்னர்களுடைய பெருமையை எதற்கு ஒப்பிட்டுச் சொல்லலாம்?

நம்மை யடியார்களாக வுடைய தேவிற் சிறந்த திருநாரணராம் முழுமுதற்கடவுளுடைய இதயமாகியபெருமை பெற்ற தாமரை மலரினின்று முன்னொரு கற்பத்திற்பிறந்து நிகரற்ற தண்ணொளியுடன் உலகத்தை யோம்பும் திங்கள் வழித் தோன்றி, இசையுடன் சிறந்து விளங்கிய பாண்டிய மன்னர் பல ராவர். அவ்வரசருள் ஜயமாகீர்த்தி என்பானும் ஒருவ னாவான்.

முதலூழியினுடைய இறுதிக் காலத்திற் கன்னி நாட்டை யாண்ட முடியுடை வேந்தன் ஒருவற்கு மைந்தனாகப் பிறந்த மாகீர்த்தி, இளமையிலேயே தக்க நல்லாசிரிய ரிடம் தமிழ்மொழியை நன்கு கற்றான்; இலக்கிய இலக்கண நூற்களிலும், மக்களாகப் பிறந்தார் அடைதற்குரிய உறுதிப் பொருள்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்பவைகளைப்பற்றிக் கூறும் மற்றைய நூல்களிலும் நிகரற்ற தேர்ச்சி பெற்று விளங்கினான். பின்னர் அவன், அரசர் கற்றற் குரிய தேர் ஊர்ந்து சண்டை செய்தல், யானைமீ தேறி யமராற்றல், குதிரை யிவர்ந்து கொடுஞ் சமர் இழைத்தல், பூமியில் நின்று மற்போர் புரிதல் முதலியவற்றையும் நன்றாய்க் கற்றுக் கைதேர்ந்த வீரனானான். அம் மாகீர்த்தியிடம் அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி நடுநிலைமை நகை முதலிய நற்குணங்கள் ஒருங்கே அமைந்திருந்தன. அவ்விளவரசனுடைய புத்திக்கூர்மை சொல்வன்மை அழகு முதலியவற்றைப் பற்றி அக்காலத்து மக்கள் பலரும், மிக மெச்சிக்

கொண்டாடலாயினர். நாடெங்கும் அவனுடைய புகழ், யாதினும் பெரிதாய்ப் பரவி நிரம்பியது.

அரசியலை மேற்றற் குரிய வயதை படைந்ததும் அமைச்சர், சிற்றரசர், சேனைத் தலைவர், பண்டிதர், அறிஞர், குடிகள் முதலிய பல திறத்து மக்களும் கண்டு களிக்கப் பெரியார் பலர் ஒன்றுசேர்ந்து மாகீர்த்திக்கு, மணிமுடி சூட்டினர். ஐந்தரு நிழற்ற ஆணிப்பொன் மணிகளாலாய அழகிற் சிறந்த அரியணையின்மீது அமர்ந்து, அறநெறிக் கிணங்க அரசாளும் அமரர்கோனை யொப்பச் சிங்கங்கள், சுமந்த செழுமணித் தவிசிற் சிறக்க வீற்றிருந்து செங்கோல் கைக்கொண்ட மாகீர்த்தி மன்னன், சிறந்த கல்வி யறிவும், பரந்தநோக்கமும், எளியார்பால் பரிந்துருகும் அருமைத் தாய மன நிலைமையும் பொருந்தி, நூலறிவோடு உலகியல் அறிவும் சாலப் படைத்து, ஒப்புயர் வற்ற தோள்வன்மை யுடன் விளங்கிப், பாண்டியர் பெருமை உலகங்கள்தோறும் பரவ நாட்டைப்பாதுகாத்து, அநீதி அறிவின்மை பஞ்சம் முதலிய கொடிய நிகழ்ச்சிகள் தன்னுடைய நாட்டில் தலை காட்டா வண்ணஞ் செய்து, பகைவரும் அஞ்சி நடுங்கி வியந்து புகழ அரசு நடாத்தி வந்தான்.

அவ்வரசன் அமைச்சு நாடு அரண் பொருள் படை நட்பு என்னும் ஆறு அங்கங்களையும் குறைவின்றிப் படைத்துச் சிறந்து விளங்கினன்; அரசருக்கு இயல்பாக இருக்க வேண்டிய அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் என் னும் நான்கு குணங்களுடன் விரை வுடைமையும், கல்வி யுடைமையும், ஆண்மை யுடைமையுமாகிய மூன்று குணங் களையும் ஒருங்கே பெற்றுத் தனக் கோதிய அறத்தினின்று தவறாம லொழுகித் தியனவற்றை யொழித்து, வீரத்திற் குறையாமல் பெரும் புகழுடன் விளங்கிக், காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல் ஈதல் மறுத்தல் ஆகிய

கொடிய செயல்கள் தன்னாட்டில் யாண்டும் நிகழா வண்ணம் கடிந்து, எத்தகைய இடர் வரினும் செங்கோல் முறைக்கு மாறுபடாமல் நடந்து, ஊக்கமும் குடிகளிடம் கண்ணோட்டமும் உடையவனா யிருந்து, தன் னுயிரைப்போல் மன்னுயிரைக் காத்துப், பல சிற்றரசர்கள் போற்ற மிக்க மகிழ்ச்சியுடன் பாரிலம் புரந்து வந்தான்.

## பகுதி - ௨

## தலைச்சங்கமும் சயமாகீர்த்தியும்

சயமாகீர்த்தி மன்னன் தமிழ்மொழியை யாதரித்து வளர்த்தான் என்று சொல்லுதற்கு முன்னர் தலைத் தமிழ்ச் சங்கத்தினுடைய வரலாற்றை ஓர் அளவு நாம் அறிதலே நல்லதாகும். தமிழ்மாதை யோம்பிய தேவரனைய புலவர் பெருமக்கள் பலருள்ளும் காலத்தால் முந்தியவரும், இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழுக்கும் சிறந்ததோர் இலக்கணம் செய்தருளியவரும், தமிழ்ச் சங்கங்கள் நிறுவியவரும், நன் மாணாக்கர் பலர்க்கும் நூலறிவுறுத்தித் தமிழ் மொழியைப் போற்றி வளம்படச் செய்து பெரும் புகழ் படைத்தவரும் ஆசிரியர் அகத்தியனாரே யாவர். அவர் வடநாட்டினின்று தென்னாடு போந்தார் எனப் பல நூற்கள் கூறுகின்றன. குற்றமற்ற அக்குறு முனிவர் தென்னாட்டினரே யாவர் என ஒரு சாரார் கூறுவர். சிலர், அறிவிற் சிறந்த அம்முனிவர் தென்னாட்டி லிருந்து வடநாடு சென்று, மீண்டும் தென்னாட்டை யடைந்தார் என்று சொல்லுகின்றனர். அகத்தியனாரைப் பற்றி யார் எங்ஙனம்

சொல்லினும் சொல்லுக. ஆனைப் புலமை படைத்த அருந் தவத்தினராய அப்பெரியார் இன்ன நாட்டினர், இன்ன குலத்தினர் என்பவற்றைப் பற்றி யாம் இப்பொழுது நன்றாய் ஆராய்ந்து முடிவு செய்யத் துணிந்திலேம். ஆயினும், அவருக்கும் தமிழ் மொழிக்குமுள்ள இயைபு காட்டிப், பெரியார் பலரும் கூறியுள்ளவற்றைக் கொண்டு தலைத் தமிழ்ச் சங்கத்தினுடைய வரலாற்றை ஒருவாறு உரைப்பதற்கே யாம் விரும்புகின்றேம்.

முதலூழியினுடைய இறுதியில் வடநாட்டி லிருந்த மேருமாமலையின்கண் தேவர் பலர் சென்று ஒன்றுகூடி யிருந்தனர். அங்ஙனம் விண்ணவர் பலர் ஓரிடத்திற் சேரவிருந்த தால், பொறை யாற்றுதற் கின்றி வடபுவி தாழத் தென்னாடு உயரத் தொடங்கிற்று. அதைக் கண்டு வானவர், மனக் கலக்க மடைந்து, புவி துலை யொத்திருக்க யாது செயற்பால தென ஆராய்வ ராயினர். அகத்தியர் தென்றிசைப் போந் திருப்பா ராயின், நிலம் பிறழ்ச்சியின்றி யிருக்கு மென அன்னவர் தேர்ந்து, அகத்தியனாரிடம் நண்ணிப் பணிந்து அவரை நோக்கி, "அருந்தவச் செல்வரே! நீர் தென் திசைக்கண் சென்று உலகினைக் காத்தருள வேண்டும்," என்று இறைஞ்சி நின்றனர். விண்ணாட்டினர் வேண்டு கோளுக்குக் குறு முனிவரும் உடன்பட்டார்.

தென்னாடு செல்ல எண்ணங் கொண்ட அகத்தியனார், கங்கையாறுழைச் சென்று காவிரியாறைத் தம்முடைய கரகத்தில் வாங்கிக்கொண்டு, யமதங்கி முனிவரை யணுகி, அவரை நோக்கி, "யான் தென்திசைக்குச் செல்ல விருப்பங் கொண்டேன். உம்முடைய மைந்தருள் ஒருவரை என்னோடு அனுப்பக் கூடுமோ?" என்று கேட்டார். அதற்கு அம்முனிவர், "நீர் தேவர்களுடைய விருப்பத்திற் கிணங்கத் தென்திசைக்குப் போகின்றீர்; ஆதலால், உமக்கு உதவி

செய்ய யான் கடமைப்பட்டுள்ளேன். நீர் இச்சித்தவாறே என்னுடைய மைந்தருள் ஒருவனாய திரணதூமாக்கினி என்பானை உம்முடன் போக்குவேன்," என்று மறுமொழி பகர்ந்து, தம்முடைய புதல்வர் திரணதூமாக்கினியாரை யழைத்து, அவரை அகத்தியனாரிடம் ஒப்புவித்தார்.

திரணதூமாக்கினியாரைத் தம்முடன் அழைத்துக் குறு முனிவர், புலத்தியனாரிடம் சென்று, தாம் தென்னாட்டை நோக்கிப் போதலைத் தெரிவித்தார். அதைக் கேட்ட புலத்தியனார், மன மிகக் களித்து, "பலர்க்கும் பேருதவி செய்தற்பொருட்டு நீர் தென்னாடு செல்லுகின்றீர்; ஆதலால், என்னால் இயன்றவரையில் உமக்கு உதவி புரிய யானும் இச்சிக்கின்றேன். என்னுடன் பிறந்தாளான **உலோபாமுத்திரையை-குமரியாரை** நீர் மணந்து செல்லலாமே," என்று அகத்தியனாரை நோக்கி அன்புடன் கூறினார். குடமுனிவர் மன முவந்து, புலத்தியருடைய கருத்திற் கிசைந்து, அப்புலத்தியனார் நீருடன் கொடுக்கக் குமரியாரை விதிமுறைப்படி மணம் புரிந்தார். திருமணத்தின் பின்னர் புலத்தியரை நோக்கி அகத்தியனார், "அன்புடைப் புனிதரே! நான் முன்பின் அறியாத நாட்டிற்குச் செல்கின்றேன். ஆதலால், அவ்விடத்திற்கு என் மனைவியை இப்பொழுதே அழைத்துச் செல்லுதல் தக்க தன்று. யான் சென்று அந்நாட்டில் இடம் பொருள் ஏவல்களைச் செவ்வி தின் அமைத்துக்கொண்டபின் என் மனையாளை யழைத்துப் போகிறேன். யான் அங்ஙனம் அழைத்துச்செல்லும் நாள் வரையில் என் இல்லக்கிழத்தி உம்மிடத்திலேயே இருக்கக் கடவள்," என்று மொழிந்து, குமரியாரைப் புலத்தியனாரிடம் நிறுத்தி விட்டுத், துவராபதிக் கேகினார். ஆண்டிருந்த நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் வழித் தோன்றிய பதினெண்குடி அரசர்களையும், பதினெண்குடி வேளிர்களையும்,

மற்றும் பல படைத் தலைவர்களையும் தம்முடன் அழைத்துச் சென்று தென்திசையை யடைந்தார் அகத்தியனார்.

அந்நாளில், இராவணன் என்னும் அரக்கர் தலைவன், தன் இராக்கதப் பெரும்படையுடன் தென்னாட்டில்வாழ்ந்து வந்தான். குறுமுனிவரையும், அவருடன் வந்த அரசர் வேளிர் முதலியோரையும் கண்ட இராவணன், அவர்களனைவரும் தன் குலப் பகைவராகிய தேவர் மரபினர் என உட்கொண்டு மிக்க சினங் கொண்டான்; அவர்களை யெதிர்த்துப் போர் தொடக்க முதலில் எண்ணினன்; பின்னர், எதைக் கருதியோ அவ்வெண்ணத்தை விட்டொழித்து, அகத்தியனாரை யணுகி, அற நெறிகளைப்பற்றி யாராய்தற்குச் சென்றவனைப்போலப் பேசத் தொடங்கிக், குடமுனிவரை நோக்கி, "புனித மாதவரே! நெடுங் காலமாக இந்நாட்டை படிப்படுத்தி யான் ஆண்டு வருகின்றேன். இந்நிலத்தைக் கைப்பற்ற அரசர் முதலிய பலருடன் இப்பொழுது நீர் இங்கு வருதல் முறையாமோ," என்று கேட்டான். அகத்தியனார், "நாடு முதலியன வன்மையில் மிக்கார்க்கே உரியன வாகின்றன. ஆதலால், என்னுடைய வன்மையினால் இந்நாட்டைக் கைக்கொள்ளத் துணிந்து வந்துள்ளேன்," என்று இராவணனைப் பார்த்து விடை இறுத்தார்.

அகத்தியருக்குத் துணைவலி மிக்கிருந்ததை யோர்ந்து, போரினால் அவரை வெல்ல வொண்ணாதெனத் தெளிந்து இராவணன், தான் கற்ற இன்னிசையின் வன்மையினால் அம்முனிவரை வென்று துரத்த எண்ணங் கொண்டான். உடனே அவன், குறுமுனிவரை நோக்கி, "தண்ணளி நிறைந்த முனிவரே! நீர் படைக் கருவிகளைக் கைகளால் தொடுதற்கும் விரும்பாத தவத் தொழிலின ராவீர். விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள் வைத்தெண்ணும் ... னை யுடையவனும், அமராற்றும் தொழிலினையே

எந்நேரமும் அணிகலனாகக் கொண்டிருக்கும் வீரனு மாவேன் யான். போர்க் கருவிகளைக் கொண்டு உம்மை யெதிர்த்துச் சண்டை செய்து என்னுடைய தோள் வன்மையைக் காட்டுதல் முறையன்று. நீர் இன்னிசை பாடுதலில் வல்லுநர் என யான் அறிவேன். இன்னிசை பாடுதலில் யானும் சிறிது தேர்ச்சி பெற்றுள்ளேன். நாம் இருவரும் இன்னிசையில் நம்முடைய வன்மையைக் காட்டு வோம். அங்ஙனம் பாடுதலில், வென்றூர் இத்திசையை யாளவும், தோற்றூர் இந்நாட்டைத் துறந்து ஏகவும் உடன் படுவோம்,” என்று மொழிந்தான்.

அரக்கனுடைய வஞ்ச நெஞ்சத்தை யறிந்து அகத்திய ஞர், மிக்க உவகை கொண்டார்; அவனுடைய கருத்திற் கிசைந்தார்; அவனையே முதலிற் பாடச் சொன்னூர். கையில் யாழ் கொண்டு இராவணன், தான் கற்ற இசை யறிவை முற்றும் பயன் படுத்திப் பாடினுன். அப்பாடலைக் கேட்டுப் பறவைகள், விலங்குகள் முதலிய உயிர்க ளெல்லாம் அசைவற்று நின்றன. இராவணனுடைய பாடற் றிறமையைக் கண்டு புன்முறுவல் கொண்டு, கையில் யாழ்பற்றிக் கந்தருவ இசை பாடினூர் அகத்தியஞர். அப் பொழுது, எல்லா உயிர்களும் மதி மயங்கிச் சோர்ந்து இயங்குத லற்றன. காய்ந்துபட்ட புல், மரம் முதலியன தளிர்க்கத் தொடங்கின. கல், மலை முதலியனவும் கரைந் துருக லாயின. அப்பாடலைக் கேட்டு இராவணனும் அறி விழந்து சோர்ந்தான். முனிவர் பாடி முடித்த பின்னர் இராவணன், அப்பெரியாரைப் பணிந்து நோக்கி, “தெய் வப் புலவரே! உம்முடைய பெருமையை யறியாமல், என் னுடைய செருக்கால் உம்மைச் சோதிக்க யான் துணிந் தேன்; பெரும் பிழை யிழைத்தேன்; சிறியேன் செய்த சிறிய பிழையைப் பொருட் படுத்தாமல் என்னை மன்னித்

தருள வேண்டுகின்றேன். இன்னிசையில் வெற்றி யடைந்த நீர் கட்டளையிடும் வண்ணம் நடக்க யான் காத்திருக்கின்றேன்," என்றான். "அரக்கர் தலைவ! முன்னர் கூறிய வண்ணம் உன்னுடைய குலத்தினருடன் நீ இந்நிலப் பகுதியை விட்டு அப்புறம் போதல் வேண்டும்," என்று முனிவர், இராவணனைப் பார்த்துச் சொல்ல, அவனும் அவ்வாறே நடப்பதாய்க் கூறி, அப்புற மகன்றான்.

இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, அரக்கர் எல்லாரையும் தென்னாட்டில் இலங்கா வண்ணம் துரத்திய பின்னர் குறுமுனிவர், அந்நிலத்தில் மண்டிக் கிடந்த பெருங் காடுகளை யழித்து, நாடு நகரங்களை யுண்டாக்கித் தம்முடன் வந்த அரசர் பதினெண் குடியினரையும், பதினெண் குடி வேளிர்களையும் ஆங்குக் குடி யேற்றினார். தாமிருந்து தவஞ் செய்தற்குத் தக்க தோர் இடம் வேண்டி யாராய்ந்து பார்த்து அம்முனிவர் பெருமானார், பொதியில் மலையே தாமிருத்தற்குத் தக்க தெனக் கண்டு, ஆண்டடைந்து ஓர் ஆச்சிரமம் ஏற் படுத்தி, இறைவனைத் தொழு திருக்கலானார். அக் குடமுனிவர் தென்றிசையை யடைந்தவுடன் புவியும் பிறழ்ச்சியின்றித் துலைபோத் திருக்க லாயிற்று. பொதியில் மலையின்கண் திரணதூமாக்கினியார், பனம் பாரனார், காக்கை பாடினியார், சிகண்டியார், அதங்கோட்டாசிரியர் முதலிய பல நன் மாணக்கர்களுக்கு அகத்திய முனிவர், தமிழ் மொழியைச் செவ்வனே கற்பித்து, அம்மாணக்கர் களை ஒப்புயர்வற்ற பெருந் தமிழ்ப் புலவர்களாகச் செய்தருளினார். தமிழ் மொழியை நன்கு ஓதியுணர்ந்து இணையற்ற புலமை பெற்ற பின் திரணதூமாக்கினியார், தொல்காப்பியனார் என்னும் சிறந்த பெயரைப் பெற்றார்.

தென்னாட்டை யடைந்து மிக்க பெருமை படைத்த பின்னர் குறுமுனிவர், தம்முடைய மாணக்கருள் முதன்

மையரான தொல்காப்பியனாரை யழைத்து, அவரை நோக்கி, "பண்பிற் சிறந்த மாணவ! நீ வடநாடு சென்று புலத்தியனாருக்கு என்னுடைய நல்வாழ்வை யறிவித்து, அவருடன் பிறந்தாளான என் இல்லக்கிழத்தி குமரியாரை இங்கு அழைத்து வருவாயாக," என்று சொன்னார். அம்மொழியைக் கேட்ட தொல்காப்பியனார், "என் ஆருயிருக் குற்ற அருமருந் தன்ன ஆசிரியரே! தங்கள் மனைவியாராய எம் பெருமாட்டியை யான் எவ்வாறு தனியே அழைத்து வருவேன்," என்று தமிழ் முனிவரைப் பார்த்துப் பணிவுடன் வினவ, அம்முனிவர் பெருமானார், "உனக்கும் என் மனையாளுக்கும் முன்னாலேயோ, பின்னாலேயா, பக்கமாகவோ நாற்கோல் தூர மிருக்கும்படியாகச் செய்துகொண்டு, அவளை நீ அழைத்து வருவாயாக," என்று கூறிக் கட்டளையிட் டனுப்பினார்.

தம ஆசிரியருடைய ஆணையைத் தலைமேற் கொண்டு தொல்காப்பியனார், தென்திசையி லிருந்து புறப்பட்டுப் பல நாடுகள், காடுகள், மலைகள், ஆறுகள் முதலியவற்றைக் கடந்து சென்று, சில நாட்களுக்குள் வட நாட்டை யடைந்து, ஆண்டிருந்த புலத்தியனாரை பணிந்துத் தொழுது, அவரிடம் அகத்தியனாருடைய கட்டளையைத் தெரிவித்தார். யமதங்கி மைந்தரைப் பார்த்து மிக்க உவகையுடன் புலத்திய முனிவர், "உம்முடைய ஆசிரிய ரிட்ட கட்டளைக் கிணங்க அவருடைய மனைவியைத் தக்க பாதுகாப்புடன் நீர் அழைத்துச் சென்று மாசிலா அப்பெரியாரிடம் விடுவீராக," என்று மொழிந்தார். தம்முடைய ஆசிரியர் உரைத்த வண்ணம் குமரியாரை யழைத்துக் கொண்டு தென்னாட்டை நோக்கி நடந்தார் தொல்காப்பியனார்.

குமரியாரை யழைத்துக் கொண்டு புறப்பட்ட தொல்காப்பியனார், சில நாட்களுக்குள் எல்லா நாடுகளையும்

கடந்து பாண்டிய நாட்டை யடைந்தார். அந்நாட்டில் வையை என்னும் ஆறு ஒன்று பாய்கிறது. குடமுனி வருடைய இல்லாளும், மாணாக்கரும் அவ்வாற்றைக் கடந்து செல்ல வேண்டியவ ராயினர். ஆதலால், அவ்விருவரும் வையையில் இறங்கி, அதன் மறுகரையை நோக்கி நடந்த னர். அங்ஙனம் நடந்தவர் நட்டாற்றை யடைந்தவுடன் வெள்ளம் பெருக் கெடுத் தோடத் தொடங்கியது. அவ் வெள்ளத்தின் கடுவிசையால் குமரியார், நடந்து செல்லத் தடுமாறற மடைந்தார். சிறிது நேரத்திற்குள் அந்நீத்தம், முனிவர் பன்னியைப் புரட்டித் தள்ளி உருட்டி யடித்துச் செல்ல லாயிற்று. ஆசிரியருடைய இல்லாளின் நிலைமை யைக் கண்டு தொல்காப்பியருடைய மனம் பதை பதைத் தது; உடல் துடி துடித்தது. அவர் என்ன செய்வார்? அவருடைய நிலைமை பெருந் துன்பத்திற்குள் ளாயது. குமரியாரைத் தொடாமல் அழைத்துக் கொண்டு வர வேண்டுமென் றன்றோ அகத்தியனார் கட்டளையிட் டிருக் கின்றார்?

தொல்காப்பியனார், தம்முடைய ஆசிரிய ரிட்ட கட் டளையை யெண்ணி யஞ்சினார். குமரியாரைத் துன்பத்தி லிருந்து காப்பாற்றாவிடில், பெண்ணொருத்தியைக் கொலை செய்வதால் நேரும் கொடிய வினை தம்மைச் சூழுமே என்று நினைத்து உள்ளம் பதறி நடுங்கினார். அவவேலை, அறிவிற் சிறந்த அப்புலவர் பெருமானாருக்குச் சடுதியில் ஓர் எண் ணம் மனத்தில் தோன்றியது. உடனே அவர், தமக் கருகி லிருந்த தொரு நீண்ட மூங்கிற்கோலை முறித்து, அதை யெடுத்து விரைந் தோடிக் குமரியாரிடம் நீட்டினார். அம் மூங்கிலின் ஒரு முனையைக் குமரியார் உறுதியாகப் பிடித் துக் கொள்ள, மற்றொரு முனையைத் தொல்காப்பியனார் பற்றி மெல்லென இழுத்து, வெள்ளத்திற் போகா வண்ணம்

அக்குமரியாரைக் காத்துக் கரை யேற்றினார்; கனிப் பென்னுங் கடலுள் ஆழ்ந்தவ ரானார். தமக் குற்ற இடரை யொழித்த கல்விக் கடலாகிய தொல்காப்பியனா ருடைய பேரறிவின் திறத்தை யுன்னி அக மிக மகிழ்ந்தார் குமரியார்.

வையை யாற்றின் மறுகரையி லிருந்து புறப்பட்டு அவ் விருவரும், குறுமுனிவர் இருப்பிடத்தை நாடி நடந்தனர்; அம்முனிவர்பாற் சென்று கீழே விழுந்து, அவருடைய திரு வடிகளை வணங்கி, எழுந்து கைகட்டி நின்றனர். அவ்விரு வரையுங் கண்டு குடமுனிவர், மிக்க உவகை கொண்டார். அவர், தம்முடைய மாணாக்கரை நோக்கி, "நான் உரைத்த வாறே செய்து எம் மனைவியை நீ யழைத்து வந்தனையா?" என்று கேட்டார். "எம் பெருமானாரே! உம்முடைய கட் டளைக் கிணங்க இப்பாண்டிய நாட்டை யடையு மளவும் நடந்தேன். எம் பெருமாட்டியை வையையில் அழைத்து வருங்காலத்தில் தண்ணீர் கடுகி என் அன்னையாரை ஈர்த் துச் சென்றது. அப்பொழுது, ஒரு மூங்கிற்கோலை முறித்து என் தாயாரிடம் யான் தந்தேன். அதைப் பற்றி அவ் வம்மையார் கரை யேறினார். அச்செயல் உம்முடைய கட் டளைக்கு மீறியதே யாகும். ஆயினும், அங்ஙனம் யான் செய்ய வேண்டியவனா யிருந்தேன். உம்முடைய கட்ட ளைக்கு மீறி நடந்தமைக்குப் பொறுத்தருள வேண்டுகின் றேன்," என்று தம் ஆசிரியரைப் பார்த்துத் தொல்காப்பிய னார் பணிவுடன் கூறினார்.

அறிவுடை மாணாக்கர் சொற்களைக் கேட்ட அகத்திய னார், எதைக் கருதியோ மிக்க சினங் கொண்டார். உடனே யமதக்கி மைந்தரை நோக்கி அவர், "ஓ தொல்காப்பிய! நான் உரைத்த தென்ன? நீ செய்த தென்ன? எனக்கு வாழ்க்கைப் பட்ட குமரி, எப்படி பிற னொருவன் நீட்டிய

கோலைப் பற்றி ஆற்றைக் கடந்து கரை யேறி வரக் கூடும்? நீவிர் இருவீரும் பெருங் குற்றம் செய்தீர். அதற்குப் பயனாக நீவிர் இருவீரும் நற்கதிக்குச் செல்லாமல் ஒழிவீராக," என்று வெவ்வுரை கூறினார். அதைக் கேட்டுத் தொல்காப்பியனார், மிக்க வியப்பும் வெறுப்பும் அடைந்தார். தம்முடைய ஆசிரியரைப் பார்த்து அவர், "ஐயோ! யான் குற்ற மொன்றும் செய்திலனே! அறத்தை நோக்கி உற்ற விடத்துச் செய்ய வேண்டிய உதவியைச் செய்து ஓர் உயிரைக் காத்தேன். அச்செயலைக் குறித்துச் சற்றும் ஆய்ந்தோய்ந்து பாராமல் எனக்கு நீர் தீங்கு விளைவித்தீரே! ஆதலால், நீரும் நற்கதிக்கு ஆளாகாமற் போகக் கடவீர்," என்று வெகுளியால் வெவ்வுரை பகர்ந்தார். அப்பொழுதே அவ்விருவரும், ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்து சென்றனர். அகத்தியனார் பொதியில் மலையிடத்துத் தவம்பற்றுவா ரானார். தொல்காப்பியனார் பனைநாட்டை யடைந்து, தவமேற் கொண்டார்.

அந்நாளில், காய்சின வழுதி என்னும் ஓர் அரசன் பாண்டிய நாட்டை யாண்டு வந்தான். அச்செங்கோல் வேந்தன் நற்குண நற்செயல்களுக்கு உறையுளா யிருந்ததுடன் கல்வியின் வளர்ச்சிக்குப் பாடு படுதற் குரிய ஒரு தலைமகனாயு மிருந்தான். தமிழ் மொழியை நாடெங்கும் பரவச் செய்து, நன்கு வளர்க்க எண்ணங் கொண்டு அம்மன்னன், பொதியில் மலையை யடைந்து, ஆண்டுத் தவ மேற் கொண் டிருந்த குடமுனிவரை யணுகி, அவருடைய திருவடிகளை வணங்கி, அவரை நோக்கி, "அரும் பெறல் ஐயரே! வடமொழியிலும் தென்மொழியிலும் தாங்கள் மிக்க தேர்ச்சி பெற் றிருக்கின்றீர். தேனினும் இனிய தமிழ் மொழியைச் சிவபெருமான்பால் கற்றுத் தேர்ந்துள்ளீர் என்பதைப் பெரியார் பலரும் நன்கு ..ணர்வர்.

தாங்கள் என்னுடைய அவைக்குப் போந்தருளித் தமிழ் மொழியிற் பல நூற்களைச் செய்து, உலகத்தினரை உய்விப்பதுடன் தமிழணங்கை அணிபெறச் செய்ய இறைஞ்சுகின்றேன். இன்றே தாங்கள் என்னுடைய நகரத்திற்கு எழுந்தருளல் வேண்டும்," என்று இறைஞ்சினான்.

காய்சின வழுதி வேண்டுகோளுக்கு மிக்க மன மகிழ்ச்சி கொண்ட முனிவர் பெருமானார், அவ்வேந்தனை நோக்கி, "மன்னா மன்னரே! உலகத் துயிர்களுக்கு உதவி செய்தலிலேயே தங்கள் வாணாளைச் செல வழிப்பார்கள் உயர்ந்த ஞானிகள். அச்செயல் யாதினும் சாலச் சிறந்ததும், புனிதமாயது மாகும் என்பதிற் சிறிதும் ஐய மிலது. தெய்வத் தன்மை பொருந்திய வடமொழியை யொத்ததே யாகும் தென்மொழியும். திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளாய சிவபெருமானார் தமிழ்மொழியை எனக்கு அறிவுறுத்தினார் என்பது உண்மையே யாகும். அம்மொழியிற் பல நூற்களைச் செய்து உதவுமாறு அக்கடவுள் எனக்குக் கட்டளையுமிட் டிருக்கின்றார். உம்முடைய அவைக்குப் போந்து தமிழ் கற்றார் பலரோடுங் கூடி யான் நூற்கள் இயற்றுவேன். ஆதலால், உம்முடைய நகரத்தை யடைந்து இந்நாட்டிலுள்ள எல்லாத் தமிழ்ப் புலவர்களையும் அழைத்து, ஒரு பெருங் கூட்டமாகக் கூட்டித் தமிழ் மொழியை யாராயுமாறு நீர் செய்வீராக. அங்ஙனம் உம்மால் கூட்டப்படும் புலவர்களுடைய கூட்டத்திற்குச் சங்கம் எனப் பெயரிடுவீராக. உம்முடைய வேண்டுகோளுக் கிணங்க யானும் விரைவில் உம்முடைய நகரத்தை யடைந்து தமிழ் மொழியின் வளர்ச்சிக் குரிய தக்க முயற்சிகள் மேற்கொள்வேன்," என்று மொழிந்தார்.

முனிவர் உரைத்த சொற்களைக் கேட்டு அரசன் மிக்க உவகை யுற்றான். அகத்தியனாரிடம் விடைபெற்று அவன்,

தன் மதுரை மா நகரத்தைப் படைத்து, தமிழ்ப் புலமை மிக்க பெரியார் பலரைத் தன்னுடைய அவைக்கு அழைக்கப் பெருமுயற்சி மேற்கொண்டான். அவ்வேந்தனுடைய கருத்தையும் செயலையும் அறிந்து தமிழ் உணர்ந்த பெருமக்கள் பலரும் மிக்க உவகை கொண்டனர். மதுரை மா நகரத்தை அரசனுடைய எண்ணத்திற் கிணங்க ஒருங்கு சேர்ந்து, தமிழாராயத் தொடங்கினர். அவ்வாறு காய்சின வழுதியால் கூட்டப்பட்ட அக்கூட்டத்திற்குத் தலைத் தமிழ்ச் சங்கம் எனப் பெயர் வழங்க லாயிற்று. அத் தலைச் சங்கத்து அருந் தவக் கிழவராய அகத்தியனார், முப்புர மெரித்த விரிசடைக் கடவுள், குன் றெறிந்த முருகவேள், முரஞ்சியூர் முடிநாக ராயர், நிதியின் கிழவர் முதலிய தெய்வப் புலவா ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்பதின்மா வீற்றிருந்து, காய்சின வழுதி வேண்டுகோளுக் கிசைந்து தமிழாராய்ந்தனர் என்று சொல்லுவர் அறிஞர். அச்சங்கத்தின் முன்னேற்றத்தையும் தமிழ் மொழியின் வளர்ச்சியையும் கருதிக் குறுமுனிவரும், காய்சின வழுதியைப் போலவே பேருழைப்பு மேற்கொண்டு ஒழுகினர். அவர், தம்மை யொத்த முனிவர் பலரையும் அச்சங்கத்தில் வீற்றிருக்கச் செய்தார். அம்முனிவருள் மார்க்கண்டேயனார், கௌதமனார், வான்மீகனார் முதலிய பலர், பற்பல நூற்களை யியற்றித் தமி ழுலகத்திற்கு அரிய நன்மைகளைச் செய்தனர்.

பன்னாள் நன்கு ஆராய்ந்து அகத்தியனார், ஓர் அரிய இலக்கண நூலை யியற்றி யுதவினார். அவருடைய பெயரைக் கொண்டே அந்நூலுக்கு அகத்தியம் என்னும் பெயரை யிட்டனர் அறிஞர். அது, முத்தமிழின் பாகுபாடுகளையும் நன்றாய் உணர்த்துதற் குரிய தொரு சிறந்த இலக்கணமாயிருந்தது. தலைச் சங்கத்தில் வீற்றிருந்து தமி ழாராய்ந்த

புலவர்களுக்கு அந்நூலே, தமிழ் மொழியை வரம்பிட்டுக் கையாளற் குரிய எடுப் புடையதாக விளங்கி யிருந்தது. அச்சங்கத் திருந்த மற்றைப் புலவர் பலர், பரி பாடல், முது நாரை, முது குருகு, களரியாவிரை முதலிய பல அரிய நூற் களை யியற்றி யருளினர்.

அத்தலைத் தமிழ்ச் சங்கம் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றி யாண்டு செவ்வனே நிலைபெற் றிருந்ததாக நூற் கள் கூறுகின்றன. அச்சங்கத்தைப் போற்றி யாதரித்து நன்றாய் நடாத்தியவர் காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாக எண்பத் தொன்பதின்மர் பாண்டிய மன்னராவர். அம்மன்னருள் கவி யரங் கேறினோர் எழுவர் பாண்டியர் என்று சொல்லுப. அவருள், நிலந்தரு திருவிற் பாண்டி யன் என்னும் சிறப்புப் பெயரை யுடைய சயமாகீர்த்தி என் பான், ஒருவ னவான். கல்விச் செல்வத்தை முற்றிலும் பெற்றிருந்த மாகீர்த்தி, கண்ணை இமை காப்பதைப் போலத் தலைச்சங்கத்தைக் காத்தான்; தமிழ் மொழியை மேன்மேலும் வளர்க்கக் கருதிப் பலவாறு உழைத்தான்; தமிழ்ப் புலவர்களைப் பொன்னைப்போல் மதித்துப் போற்றிப் பாதுகாத்து வந்தான்; தன்னுடைய வாணாளையும் பொரு ளையும் கல்விக்கே உரியனவாய்ச் செய்தான்; தன்னை வந் தடைந்த புலவர்களுக்கு வேண்டியவற்றைத் தளர் வின்றி யளித்துக் களித்தான். தமிழ்மாதின் முன்னேற்றத்தைக் கண்ணுங் கருத்துமாய்ப் பாராட்டிப் பேருழைப்பு மேற் கொண்டு ஒழுகிய அறிஞர் பலருள்ளும் சயமாகீர்த்தி மன் னனே முதன்மை யானவன் என்றும் சொல்லலாம்.

## பகுதி - ௩

# இடைச்சங்கத்தினுடைய தோற்றம்

மாண்பிற் சிறந்த மாகீர்த்தி பாண்டி நாட்டைச் செங்கோ லோச்சிச் செவ்விதின் வீற்றிருந்த நாளில், தேவர்க்கும் அசுரர்க்கும் பெரும் போர் ஒன்று நிகழ்ந்தது. இரு திறத்தினரும் அச்சண்டையால் பலவகைத் துன்பங் களை யடைந்தனர். அப்போர் பல நாட்கள் வரையில் நீடித் திருந்தமையால் எல்லா உலகத்தினர்க்கும் இன்னல்கள் பல நேரலாயின. அச்சண்டையில், தேவர்க்கிருந்த வன்மை நாளுக்கு நாள் குறைய லாயிற்று; அசுரர் வலியோ பெருகத் தொடங்கியது. அப்போரை யொழித்து எல்லா உலகத்தினர்க்கும் நன்மை விளைவித்தற் பொருட்டு நீள்விசும் படைய மாகீர்த்தி கருதினான்.

எதிர்த்துச் சண்டை செய்து மாகீர்த்தியை வெல்லத் தக்க ஆற்றல் படைத்த வீரர், அக்காலத்தில் எவ்வுலகத்தி லும் இலர். அப்பாண்டியனுடைய பெயரைக் கேட்ட அளவிலேயே எத்தகைய வீரனும் அலறி நடுங்குவான். ஒப்பற்ற வீரத்தைப் படைத் திருந்த அவ்வேந்தன் வானுல கம் செல்லக் கருதியதை யறிந்து தேவரும் அசுரரும் மிக்க வெருக் கொண்டனர். மாகீர்த்தி விண்ணுலகத்தை யடைந் தால் யாது நேருமோ என எண்ணி யஞ்சி அவ்விரு திறத்தி னரும், உடனே புறப்பட்டுச் சென்று பாண்டியனை யணுகி, அவனை நோக்கி, "வெற்றியில் மிக்க வேந்தரே! எம் இரு திறத்தினர்க்குள் உண்டாய பகையை யொழித்து நீதி செலுத்துமாறு உம்மை வேண்டுகின்றோம். அங்ஙனம் நீர் எம்முடைய வழக்கை யுணர்ந்து நீதி செலுத்தும் முறையில், யாவர் முதலிற் குற்றம் செய்து சண்டை யுண்டாக்கியதற்கு

முதன்மையா யிருந்தனரோ அவரை, நீர் விரும்பியவாறு தண்டிக்கலாம். நீர் விதிக்கும் தண்டனையை யாதொரு தடையுமின்றி யுடனே ஏற்று நடக்க இரு திறத்தினரும் உடன் படுகின்றோம்," என்று கூறினர். அவ்வேண்டு கோளுக் கிணங்கித் தேவாசுரர்க்குள் விளைந்த வழக்குகளைக் கேட்டு நீதி செலுத்த மாகீர்த்தி விண்ணவர் நாட்டை யடைந்தான். அப்போது, பாண்டிய நாட்டை மாகீர்த்தி வழிக் கோன்றிய கடுங்கோன் என்னும் அரச னொருவன்

'லா

விண்ணுடு சென்ற பாண்டியன், தேவருடன் அசுரர் உரைத்த வழக்குகளைக் கேட்டு, நன்கு ஆராய்ந்து, அவ்விரு திறத்தினரும் குற்றஞ் செய்திருக்கக் கண்டு, அக்குற்றத்தை அவ்விரு கூட்டத்தினரும் நன்றாய் அறியும் வண்ணம் எடுத்துக் காட்டி, அத்தேவாசுரரைப் பார்த்து, "நீவிர் இருவீரும் குற்றஞ் செய்துள்ளீர். ஆகலால், உங்களுள் ஒருவீர் மற்றொருவீரோடு போர் தொடுத்தல் அறமாகாது. இப்பொழுதே நீவிர் இருவீரும், பொருதொழிலை மேற்கொள்ளும் எண்ணத்தை விட்டொழித்து, உங்கள் இருப்பிடங்களை நாடிச் செல்லல் வேண்டும். சண்டையிடக் கொண்ட கருத்தை விட்டொழிக்காமல் என் சொல்லைக் கடந்து யாவர் ஒருவர் போர் தொடுக்கத் தொடங்குகின்றனரோ அவரை யானே சென்று ஒறுப்பேன்," என்று சொன்னான். அக் கட்டளை தேவர்க்கு உடம்பா டானமையால், அப்பொழுதே அமரர் அனைவரும் பொருதொழிலை வெறுத்துச் செல்ல லாயினர். பாண்டியனுடைய ஆணையைக் கேட்டு அசுரர் மிக்க அருவருப் படைந்தனர். சண்டையை விட்டொழிக்க அவர்க்கு மன மில்லா திருந்தது; ஆயினும், சயமாகீர்த்தி மன்னனுடைய வீரத்தை நினைந்து, சண்டை செய்தலை விட்டொழித்துச் செல்ல வேண்டியவ ராயினர். பாண்டியனிட்ட

கட்டளைக்கு அடங்கி அவ்விரு திறத்தினரும், தத்தம் இருப்பிடங்களை நோக்கிச் சென்றனர். அந்தச் சண்டை யொழிந்தமையால் எல்லா உலகத்தினரும் நன்மை யெய்தினர். பலதிறத்து மக்களும் சயமாகீர்த்தி மன்னனுடைய அறிவின் பெருக்கையும், வீரத் தன்மையையும் அறிந்து மிக வியந்தனர்; அவ்வரசனைப் பலவாறு புகழ்ந்து கொண்டாடினர்; வாழ்த்தினர்.

சில நாட்கள் வரையில் மேலுலகத்தில் தங்கியிருக்க மாகீர்த்தியைத் தேவர்கோ னுள்ளிட்ட விண்ணவர் பலா மிக்க அன்புடன் வேண்டினர். வானுலகத்தின் அரிய இன்பத்தை நுகர்ந்திருக்கச் சயமாகீர்த்தியும் இசைந்தான். அவ்வரசன் மிக்க இன்பத்துடன் வீற்றிருக்கத் தேவர் பலர், தக்க உதவிகள் பலவற்றைச் செய்தனர். பாண்டியன் அங்ஙனம் மேலுலகத்திற் செம்மாந்திருக்க, இந்நில வுலகத்துத் தமிழ் மக்களுக்குச் சொல லொணாப் பெருந் துனபம் ஒன்று விளைந்தது. கடல் பொங்கிப் பாண்டிய நாட்டின் தென்பாகத்தை யழித்தது. மாகீர்த்தி மிக்க திறமையுடன் ஆண்டிருந்த அரியபெரிய அப்பாண்டி நாட்டின் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையா யிருந்த பஃறுளி என்னும் ஆற்றுக்கும் குமரி யாற்றிற்கும் இடையே யிருந்த எழுநூற்றுக் காவத வாற்றையும், அவ்வாறுகளின் நீர்மலிவால் பல்வளங்களும் அளவு கடந்து எந்நாளிலும் மலிந்திருந்த ஏழ்தெங்க நாடு, ஏழ்மதுரை நாடு, ஏழ்முன்பாலை நாடு, ஏழ்பின்பாலை நாடு, ஏழ்குன்ற நாடு, ஏழ்குணகாரை நாடு, ஏழ்குறும்பனை நாடு முதலிய அரிய நாற்பத்தொன்பது நாடுகளையும், குமரி கொல்லம் முதலிய பன்மலை நாடுகளையும், பல காடுகளையும், ஆறுகளையும், பதிகளையும், தடநீர்குமரி முதல் வடபெருங் கோட்டின்காறு மிருந்த எல்லாப் பொருள்களையும் கடல் கொண் டொழித்தது. தலைச்சங்கத்தினோடுதென்மதுரையும்,

அச்சங்கத்துத் தோன்றிய அரிய பல நூற்களும் ஆழிவாய்ப் பட்டு அழிந் தொழிந்தன. பாண்டியன் கடுங்கோன் என்பானும் அக்கடல் கோளில இறந்தான் போலும்.

வளம்பல படைத்து மிக்க சிறப்புட னிருந்த பாண்டிய நாட்டின் பலவகைச் செல்வங்களைக் கடல் கொண்டதைக் கண்டு அகத்தியனாரும், மற்றைய முனிவரும்மிக வருந்தினர்; தமிழ்ச் சங்கமும், அச்சங்கத்தில் தோன்றிச் சாலச் சிறப்புடன் விளங்கியபல நூல்களும் அழிந்தமைக்கு ஆற்றொணாத் துயரத்தை யடைந்தனர். அவ ரனைவரும், தாம் விரும்பிய இடங்களை யடைந்து தவம் செய்தலுடன் தமிழ் மொழியிற் பல நூற்களையும் இயற்றுவா ராயினர். தென்பாண்டி நாடு கடலால் அழிவுற்றுச் சிலநாட்கள் கழிந்த பின்னர், கடுங்கோன் மரபில் தோன்றியவனும், நன்றாய் வளர்ந்து பல கலைகளையும் முறையே கற்றுணர்ந்தவனும். அறிவும் ஆற்றலும் நிரம்பப் படைத்தவனும், வெண்டேர்ச் செழியன் என்னும் பெயரைப் பெற்றவனுமாய ஆண்மகன் ஒருவன், முடி புனைந்து செங்கோல் கைக்கொண்டு பாண்டிய நாட்டை யரசாளத் தொடங்கினான்.

அந்த அரசன் தமிழில் மிக்க விருப்ப முடையவனாயிருந்தான். முன் னிருந்ததைப் போலவே தமிழ்ச் சங்கம் ஒன்றைக் கூட்டித் தமிழ் மொழியைப் போற்றி வளர்க்கக் கருதி அவ்வரசன், பொதியிலை யடைந்து, குறு முனிவருடைய திருவடிகளை வணங்கி, அவரை நோக்கி, "ஐயன்மீர்! என் முன்னோர்கள் வாழ்ந்திருந்து தமிழ் மாதுக்கு அருந்தொண்டாற்றிய காலில், அவர்களுக்குத் தக்க உதவி புரிந்து, தமிழ் மொழியின் முன்னேற்றத்தைக் கருதித் தாங்கள் பேருழைப்புமேற்கொண்டு, உலகத் துயிர்களுக்கு அரிய நன்மையைச் செய்தீர். தலைச் சங்கத்தில் முதன்மையாளராய்ச் சிறந்து விளங்கியவரும் தாங்களே யாவீர். அச் சங்

கத்தின் சிறப்பை என் இருகண்களாரக் கண்டு களித் தற்குரிய நல்வினைப் பயன் எனக் கில்லாமற் போனதைப் பற்றி யான் மிக வருந்துகின்றேன். முன்னர் இருந்ததைப்போல இப்பொழுதும் ஒரு சங்கத்தைக் கூட்டுவித்துத் தமிழின் மாண்பை உலகினர் அனைவரும் அறிந்துய்ய அருள் புரியுமாறு தங்களை வந்தடைந்தேன். அடியேன் கொண்ட விருப்பம் முட்டின்றி முடிந்து இனிதாக விளங்கத் தாங்கள் மன மிரங்கி யருளல் வேண்டும்,'' என்று மிக்க வணக்கத்துடன் கேட்டான்.

வெண்டேர்ச்செழியனுடைய விருப்பத்தையும் புத்திக் கூர்மையையும் கண்டு குடமுனிவர், மன மகிழ்ச்சி யடைந்தார்; அம்மன்னனுடைய எண்ணத்திற் கிசைந்தார்; கபாடபுரத்திற் புதியதாய் ஒரு சங்கத்தைக் கூட்டுமாறு பணித்தார். முனிவர் மொழிக் கிணங்க அவ்வேந்தன், தன் நகரத்தை யடைந்து நாட்டி லிருந்த எல்லாத் தமிழ்ப் புலவர்களையும் வர வழைத்துக், கபாடபுரத்தில் ஒருங்கே வீற்றிருந்து தமி ழாராயுமாறு செய்தான். வெண்டேர்ச் செழியனால் அங்ஙனம் கூட்டப்பட்ட அத்தமிழ்ச் சங்கத்திற்கு இடைச் சங்கம் என்று பிற்காலத்திற் பெயர் வழங்கலாயிற்று. அந்த இடைச் சங்கத்திலும் அகத்தியனார் தலைமைப் புலவராய் வீற்றிருந்தார். அம்முனிவருடன் அச்சங்கத்தில் இருந்தையூர்க் கருங்கோழி மோசியார், வெள்ளூர்க் காப்பியனார், சிறு பாண்ட ரங்கனார், மதுரை யாசிரியன் மாறனார், துவரைக் கோமான், கீரந்தையார் முதலிய அறிவுடைப் புலவர் ஐம்பத்தொன்பதின்பர் இனிதாக வீற்றிருந்து தமி ழாராய்ந்தனர்.

## பகுதி - ௪

## தொல்காப்பியத்தைப் புலப்படுத்தல்

குறு முனிவரோடு முரண்பட்டுத் தனித்துச் சென்ற தொல்காப்பியனார், தம் உயிருக் குற்ற துணையாய தவத் தொழில் ஒன்றனையே கருதி யிருந்தவ ரல்லர். அப் புலவர் பெருமானார், தாம் வாழ்ந்திருந்த தென்னாட்டுப் பழக்க வழக்கங்களையும், தமிழ் மொழியின் இயற்கையையும் செவ்வனே உணர்ந்தும், வடவேங்கடம், தென் குமரி, குணகடல், குடகடல் என்னும் நான்கெல்லைக்கும் இடைப்பட்ட தமிழ் கூறும் நல்லுலகத்து வழக்கையும் செய்யுளையும் பன்முறை நன்கு ஆராய்ந்தும், முன்னோர் நூலுக்கு மாறுகோளின்றியும், எழுத்து, சொல், பொருள் என்னும் முறைமையோடும், ஐந்திர வியாகரணத்தை ஒரு புடைத் தழுவியும் தொல்காப்பியம் என்னும் பெயருடன் கூடிய அமுத மன்ன பெரியதோர் இலக்கண நூலை யியற்றினார். அவ்விலக்கணம், அகத்தியனார் செய்த அகத்தியம் என்னும் இலக்கணத்தினும் மிகச் சிறந்து, கற்றோர் யாவரானும் பெரிதும் மெச்சிக் கொண்டாடத் தக்கதாய் விளங்கிற்று. தற்போதும் அந்நூலே, தமிழ் மொழிக்கு முதல் நூலாகவும், பேரிலக்கண மாகவும் சிறப்புடன் விளங்குதலை அனைவரும் அறிவர்.

தமிழ் மாதுக்குச் சிறந்ததொரு சூளாமணி யென எங்காளும் விளங்கத் தொல்காப்பியர் அரிதில் இயற்றிய இலக்கண நூலின் பெருமையைக் கேட்ட விண்ணவர் கோனும், அந்நூலை முற்றிலும் படித்துப் பொருளையுணர்ந்து மிக்க வியப்படைந்து, அவ்விலக்கணத்தின் சிறப்பையும், அதன் ஆசிரியருடைய அறிவின் திறமையையும்

வரம்பு கடந்து மெச்சிக் கொண்டாடினான் என்றால், நாம் அந்நூலின் பெருமையை என்னென்று எடுத்துச் சொல்லக் கூடியவ ராவோம்? அவ்விலக்கண நூலை நன்றாய்ப் படித்த அறிஞரே, அதன் பெருமையை உள்ளவாறு அறிந்து இன்ப மெய்தக் கூடியவ ராவர். அத்தொல்காப்பியம் தோன்றிய நாள்முதல் இஞ்ஞான்றுவரை அந்நூல் ஒன்றே செந்தமிழ் நிலத்தில் தலைசிறந்து விளங்குதலினாலேயே அதன் பெருமை, நன்கு அறியக் கிடக்கின்றது. தமிழுலகத்தில் தற்போதுள்ள நன்னூல் முதலிய பல இலக்கண நூற்களை ஈன்றெடுத்தற்குத் தாயாயிருந்ததும் அவ்விலக்கண நூலே யாகும். எஞ்ஞான்றும் ஒல்காப் புகழ் படைத்த தொல்காப்பியத்தின் முன்னர் அகத்தியனார் இயற்றிய பேரிலக்கண மாய அகத்தியமே தலை காட்டா தொழிந்த தென்றால், அத்தொல்காப்பியத்தின் சிறப்பு எத்தன்மைத் தாய் இருத்தல் வேண்டும் ?

மேலுலகம் சென்றிருந்த ஜயமாகீர்த்தி, பாண்டிய நாட்டின் ஒரு பகுதியைக் கடல் கொண்டமையை யறிந்து மிக்க மன வருத்த மடைந்தான்; வெண்டேர்ச் செழியன் கபாடபுரத்திற் புதிதாய்க் கூட்டிய இடைச் சங்கத்தைப் பற்றிக் கேள்வியுற்றுக் களிப்பே ருவகை கொண்டான். ஒரு நாள் தேவர் கோனுடைய மாளிகையில் இன்பத்துடன் மாகீர்த்தி,இந்திர னுள்ளிட்ட பல தேவர்களுடன் அளவளாவிப் பேசிக் கொண்டிருக்கையில் கபாடபுரத்தில் நிலைநிறுத்தப் பட்ட தமிழ்ச் சங்கத்தைக் குறித்த பேச் சொன்று நிகழ்ந்தது. அவ்வேளைப் புரந்தரன், தொல்காப்பியனார் இயற்றிய இலக்கணத்தின் ஒரு பகுதியை யெடுத்துக் கூறி, அதன் ஆசிரியருடைய புத்திக்கூர்மையைப் பற்றிப் புகழ்ந்து கொண்டாடினான். அதைக் கேட்டு மாகீர்த்தி மிக்க களிப்பை யடைந்தான்; தன்னுடைய நாட்டிற்குத் திரும்பிச்

சென்றவுடன் தொல்காப்பியரைக் கண்டு களித்தலும், அந்நல்லிசைப் புலவரை இடைச் சங்கத்தில் வீற்றிருக்கச் செய்தலும், அப்புலவர் பெருமானார் செய்த இலக்கண நூலைச் சங்கத்தில் அரங்கேற்றுதலு மாகியவைகளே தான் முதலிற் செய்து முடிக்க வேண்டிய தொழில்களாகு மென்று எண்ணி, மனத்தில் உறுதியாகக் கொண்டான்.

இடைச் சங்கத்தில் வீற்றிருந்த புலவர்களுள் அதங் கோட் டாசிரியர் என்பாரும் ஒருவ ராவார். அவர், தொல் காப்பியனாருடன் அகத்திய முனிவரிடம் கல்வி பயின்றவ ராவார். அவரைப் பன்முறை கண்டு தொல்காப்பியர், "பண்புடைப் புலவரே! யான் இயற்றிய இலக்கண நூலை நீர் வீற்றிருக்கும சங்கத்தில் அரங்கேற்ற விரும்புகின்றேன். என் நூல் புலப்படுதலை அகத்தியனார் விரும்பார் என எண்ணுகின்றேன். என்னுடைய இச்சையை முட்டின்றி முடிக்க நீர் எவ்வாறாயினும் உதவி புரிதல் வேண்டும்," என்று அவரை நோக்கிக் கேட்டார். "உம்முடைய விருப் பத்திற் கிணங்கச் செய்ய யான் முயல்கின்றேன்" என்று யமதங்கி புதல்வருக்கு விடை யளித்தார் அதங் கோட்டு அந்தணர்.

தாம் எழுதிய இலக்கணத்தை அதங்கோட் டாசிரிய ரைக் கொண்டு இடைச் சங்கத்தில் அரங்கேற்றத் தொல் காப்பியர் முயல்கின்றார் என்பதை யறிந்த அகத்தியனார் தம்முடைய மாணுக்கராய அதங்கோட்டு முனிவர்பாற் சென்று, அவரை நோக்கி, "என்னுடைய கருத்திற்கு மாறுபட நடந்த தொல்காப்பியர் இயற்றிய நூலைச் சங்கத் தில் அரங்கேற்ற நீ கேளற்க," என்று கூறினார். தம் முடைய ஆசிரியர் உரைத்த சொல்லைக் கேட்டு அதங் கோட்டு முனிவர் மிக்க மன வருத்த மடைந்தார். அன்பிற் சிறந்த நண்பராகிய தொல்காப்பியனார் பன்னாளும் சென்று,

"என் நூலைக் கேட்டு அரங்கேற்ற உதவி புரிவீராக; உதவி
புரிவீராக," என்று வேண்டவும், அகத்தியர், "தொல்
காப்பியர் செய்த நூலைக் கேளற்க; கேளற்க," என்று
ஆணையிடவும் கேட்ட அதங்கோட்டு அந்தணருக்கு, இன்
னது செய்பலாம் என்னும் எண்ணம் தம்முடைய மனத்
திற் புலப்படாமையால் அப்பெரியார், இருதலைக் கொள்ளி
இடை நின்று வருந்தி ஒருதலைப்படா எறும்பைப்போல்
மனக் கலக்க மடைந்து நொந்தார். புலமையிற் சான்ற
அகத்தியனாரும் தொல்காப்பியனாரும், சினத்திலும் மிக்கவ
ராவர். ஆகலால் அதங்கோட்டு முனிவர், "ஐயோ! என்ன
செய்வேன்? தொல்காப்பியர் இயற்றிய நூலால் எனக்குக்
கெடுதி நேரலாயிற்றே! யாருடைய சினத்திற்கு இலக்கா
வேனோ? எத்தகைய துன்பத்திற்கு ஆளாவேனோ? அவ்
முனிவருடைய சொற்களுள் யாருடைய கொள்கை
க்கு உடன் படுவேன்," என்று எண்ணி னே

அதங்கோட் டாசிரியருடைய நிலைமை அவ்வாறிருக்க, வெண்டேர்ச் செழியன் ஊழ்வினையின் பயனால் இவ்வுலக வாழ்வை யுதைத்துத் தள்ளி உயிர் விட்டான். தமிழ் மக்கள் செய்த நல்வினைப் பயனால், வானுலகத் திருந்த ஜய மாகீர்த்தி திரும்பி வந்து பாண்டிய நாட்டை யடைந்தான். அவன், முன்பு தான் எண்ணியதற் கேற்பத் தன் நாட்டை யடைந்தவுடன் யமதங்கி மைந்தரை நாடிச்சென்று, கண்டு களித்துப், பரிவுடன் அவரை நோக்கி, "தமிழ் மொழியாம் கடலின் கரை கண் டுணர்ந்த அறிஞரே! தமிழணங்கின் உயர்வு யாண்டும் பொலிய நீவிர் அரிய தோர் இலக்கண நூலை யருளி யிருப்பதாய் விண்ணுடர் விளம்ப யான் செவியுற்று மகிழ்ந்தேன். அந்நூலிற் பொதிந்துள்ள அரும் பொருள் களை யாராய்ந்து, உம்முடைய அறிவின் பெருக்கை யுன்னி வானவர்வேந்தன் புகழ்ந்துகொண்டாடியதற்கு வரம்பிலது

அத்தன்மைத்தாய நூலை நீர் ஏன் விரைவில் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றித் தமிழ் மக்களுக்கு உதவாம லிருந்தீர்? விண்ணும் மண்ணும் போற்றத் தக்க அவ்விலக்கணத்தைப் படித்துக் களிக்க யான் விழைகின்றேன். அஃது எங்கே இருக்கின்றது? அதை விரைவில் என்னிடம் கொடுக்க வேண்டுகின்றேன்," என்று கேட்டான்.

இன்பம் பயப்பச் சிறிது நேரம் மாகீர்த்தியுடன் அளவளாவிப் பேசி முடித்த பின்னர் தொல்காப்பிய முனிவர், தாம் இயற்றிய தொல்காப்பியத்தை அப்பாண்டியனிடம் கொடுத்தார். உள் ளன்புடன் அதனைப் பெற்றுப் படித்துப் பார்த்த மாகீர்த்திக்கு உண்டான மன மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது. அவ்வரசன் தொல்காப்பியரைப் பார்த்து, "புலவ ரேறே! நீர் செய்த இவ்விலக்கணத்தைப் போன்றதொரு சிறந்த நூலை யான் இந்நாள்வரை எங்கும் கண்டிலேன். தமிழ் மாது நோற்ற நோன்பின் பயனால் இந்நூல், உம்மை ஆசிரியராகக் கொண்டு தோன்றியது போலும். தேவர்கள் பயிலும் ஐந்திர வியாகரணத்திலும் உம்முடைய இலக்கணமே சிறந்த தாகும் என்று யான் சொல்லுவேன். உம்முடைய நூலிலுள்ள பொருள்களின் உயர்வை நன்கு அறிந்தே அன்று இங்கிருந்தவர்கள் அவ்வாறு புகழ்ந்தார்கள். இந்நூலின் பெருமை, வரம்பு கடந்த தாகுமென்பதிற் சிறிதும் ஐய மிலது. இத்துணைச் சிறந்த நூலை நீரேன் உலகிற்குத் தந்து தமிழ் மக்களை யுய்யக் கொள்ளாம லிருந்தீர்? இவ்விலக்கணத்தின் அருமையை யறிந்து தமிழ் மக்கள், இதைக் கற்று இன்புற மறுப்பரோ," என்று மொழிந்தான்.

மாகீர்த்தி உரைத்த சொற்களைக் கேட்டுக் களித்த தொல்காப்பியனார், தமக்கும் அகத்தியனாருக்கும் விளைந்துள்ள பழைய பகையைப் பற்றியும், அப்பகையைப்

பாராட்டி அகத்திய முனிவர் அதங்கோட்டு அந்தணரிடம் தொல்காப்பியம் புலப்படாம லிருத்தற் காகச் சொல்லியவற் றைக் குறித்தும் அம்மாகீர்த்தியிடம் எடுத்துச் சொன்னார். அவற்றைக் கேட்டு அப்பாண்டியன் மிக்க சினங் கொண் டான். தொல்காப்பியரை நோக்கி அவன், "புலமை சான்ற பெரியீர்! உம்முடைய நூலைச் சங்கத்தில் அரங் கேற்றுதல் என்னுடைய கடமை யாகும். யாதொரு தடையுமின்றி நாளைக்கே யான் அதைச் செய்து முடிப்பேன். உலக முள்ளளவும் மிக்க சிறப்புடன் விளங்கத் தக்கதும், தமிழ்த் தாய்க்குக் கண்களைப் போன்றதும், தமிழ் மக்க ளுக்கு அமுத மன்னது மாய உயர்ந்ததொரு நூலை, ஒருவர் பொருட்டு மறைத்து வைத்திருத்தல் கூடுமோ? நாளை முற் பகலில் நீர் கபாடபுரத்துச் சங்கத்திற்கு எழுந்தருளுவீ ராக. யான் சென்று இன்றே அதங்கோட் டாசானைக் கண்டு, உம்முடைய நூலை அரங்கேற்றுதலைப் பற்றிப் பேசு வேன். தொல்காப்பியத்தைக் கேட்டு அரங்கேற்ற முடியா தென்று அதங்கோட்டு முனிவன் மறுத் துரைப்பானானால், யானே அச்சங்கத்தில் வீற்றிருந்து அந் நூலைக் கேட்டு அரங்கேற்றுகின்றேன்; தமிழ் நாடு முற்றிலும் தொல்காப்பி யத்தைப் புலப் படுத்தி, அதை அனைவரும் கற்றுய்யப் பல வகையாலும் முயல்கின்றேன்," என்று கூறினான்.

மன்னனுடைய மொழிகளைக் கேட்டுப் புகழ் மிகப் படைத்த புலவராய தொல்காப்பியனார், பெரு முயற்சி மேற் கொண்டு பல நாட்கள்வரை யுழைத்துப் பல நூல்களையும் செவ்வனே யாராய்ந்து தாம் இயற்றிய இலக்கணம் தக்க பயனை யடைந்த தென்று எண்ணி மிக்க மன மகிழ்ச்சி யடைந்தார்; கல்வியின் அருமையை யறிந்து ஒழுகத் தக்க வர் பாண்டியர் குலத்துத் தோன்றிய மன்னரை யன்றி வேறொருவரும் இவ்வுலகத்தில் இலர் என்று மனத்திற்

கொண்டார். புன்முறுவலுடன் மாகீர்த்தியை நோக்கி அப்புலவர், "அண்ணலே! உம்முடைய கட்டளைக் கிணங் கத் தொல்காப்பியத்துடன் யான் அடுத்தநாள் முற் பகலில் தமிழ்ச் சங்கத்தை யடைகின்றேன். உம்முடைய விருப் பத்தின்படி செய்வீராக," என்று சொன்னார்.

அப்புலவரிடம் விடைகொண்டு பாண்டியன், அதங் கோட் டாசிரியரை நாடிப் போனான். அவ்வாசிரியரைக் கண்டு சிறிது நேரம் அளவளாவிப் பேசிய பின்னர் மன்னன், தொல்காப்பியனாருடைய இலக்கணத்தைப் பற்றிச் சொல் லத் தொடங்கினான். அதங்கோட்டு முனிவரை நோக்கி, "அறிஞரே! தொல்காப்பியனார், தாம் வருந்திச் செய்த நூலைக் கேட்டு அரங்கேற்றப் பன்னாளும் உம்மைக் கேட்க, நீர் அவருக்கு உதவி புரியாம லிருப்பதேன்? உம்முடைய கருத் தென்ன? அந்நூலிற் சிறிது குற்றம் காணப்படினும், அரங்கேற்ற முடியா தென்று சொல்லி நீர் அதைத் தள்ளி விடலாமே. அங்ஙனம் செய்தலே அற மாகு மன்றோ? அதனைக் கேளாமல் இருத்தல் அற மாகுமா? அப்படி யிருக்க உம்முடைய தன்மைக்கு முறை யாகுமா? ஆதலால், நாளைச் சங்கத்தில் நீர் அந்நூலைக் கேட்க மனம்பற்றுவீராக. இன்றேல், நீரும் உம்முடைய ஆசிரியரும் அடைந்திருக்கும் பெருமைக்குச் சிறுமை நேரும். தொல்காப்பியனாருடைய திறமையை நீவிர் இருவீரும் அறிவீர். நும் மிருவரையும் அவர் வெறிதே விடார்," என்று ஒருவாறு அச்சுறுத்திக் கூறினான்.

அந்தோ! குறு முனிவர், தொல்காப்பிய முனிவர், சய மாகீர்த்தி யாகிய மூவருக்கும் இடையில் அகப்பட்டு அதங் கோட்டு முனிவர் வருந்தலானார்; முன்னினும் மிக்க மனக் கலக்க மடைந்தார். தொல்காப்பியத்தினிடம் மாகீர்த்தி கொண்ட நல்லெண்ணத்தை யறிந்து அவருடைய மனம்

திடுக்கிட்டது. அரசன் சொல்லை மறுத்தற் கின்றி யேங்கி னார்; அச்சங் கொண்டார். என்ன செய்வார் அவர்? யார் மொழிக் கிணங்க நடப்பார்? குட முனிவரோ, அவருக்குக் கல்வி கற்பித்த ஆசிரியரும், கடவுளரால் மதிக்கப்படும் பெரியாரு மாவார். தொல்காப்பிய முனிவரோ, உடன் பயின்ற அன்பிற் சிறந்த பண்புடை நண்பரும், தமிழ் மொழியை முற்று முணர்ந்த முனிவரும், தவத்தில் மிக்கா ரும், தமிழ் மக்கள் முன்னேற்ற மடைதலைக் கருதிப் பாடு படும் பெருந்தகையாளரும், அரிய இலக்கணத்தின் நூலா சிரியரு மாவார். மாகீர்த்தியோ, நடும் எடுப்பு மற்ற அறிவும் ஆற்றலும் படைத்த மன்ன னவான்; விண்ணுடரும் மண் ணுடரும் போற்றிப் புகழும் பெருந்தன்மை வாய்ந்தவன்; ஐயம் திரிபு அறியாமை என்னும் முக்குற்றங்களு மறப் பல கலைகளையும் நன்றாய் ஓதி யுணர்ந்தவன்; தமிழ் மொழியில், அகத்தியனார் தொல்காப்பியனார் முதலிய புலவர் பெருமக் களோ டொப்பப் படித்துத் தேர்ந்தவன். அத்தன்மையராய மூவருக்கும் இடையில் அகப்பட்ட அதங்கோட்டு அந்தண ருடைய நிலைமைதான் என்னே!

"மூவரும் வெகுண்டு என்னிடம் வெறுப்புறும விருக்க யான் தொல்காப்பியனார் இலக்கணத்திற் பல குற்றங் கள் கூறி விடுவல்" என்று கருதி அவ்வாசிரியர், மாகீர்த்தி யைப் பார்த்து, "மா மன்னரே! உம்முடைய விருப்பத்தின் படி நாளைச் சங்கத்தில் தொல்காப்பியனாருடைய நூலைக் கேட்க எனக்கு யாதொரு தடையும் இலது," என்று சொன்னார். பிற்றை ஞான்று தான் சங்கத்திற்கு வருவ தாய்ச் சொல்லி அவ்வாசிரியரிடம் விடைபெற்று அரசன், தன்னுடைய அரண்மனைக்குச் சென்றான்; சங்கத்தில் நாளை முற்பகலில் தொல்காப்பியம் அரங்கேற்றப் போதலைப் பற்றி அந்நகர மாந்தர் பலர்க்கும் அறிவித்தான். அற்றைப் பொழுது முடிந்தது.

குறித்த காலத்தில் மறுநாள் கபாடபுரத்துச் சங்கம்
சிறப்புடன் கூடியது. தொல்காப்பிய மென்னும் புதிய
தோர் இலக்கணம் புலப்படப் போதலைப் பற்றி நிகழும்
நிகழ்ச்சிகளைக் கண்டும், அந்நூலின் அருமை பெருமைகளை
யறிந்தும் இன்புற விரும்பிப் பல திறத்து மக்களும், திரள்
திரளாகச் சென்று சங்கத்தினிடம் குழுமினர். எண்ணிறந்த
செல்வத்திற் சிறந்த சீமான்களும், செல்வாக்குப் படைத்த
அறிஞரும், சித்திரப் பட்டாடைகளை யுடுத்துக் கூட்டங்
கூட்டமாகச் சங்கத்தை நாடிச் சென்றடைந்தனர். கணக்
கற்ற புலவர்களும், புரோகிதர்களும், முக்காலங்களு
முணர்ந்த ஞானிகளும் களிப்புடன் அச்சங்கத்தை யணுகி
வீற்றிருக்க லானார்கள். புலவர்க ளெல்லாரும் போற்றித்
தொழும் அகத்திய முனிவரும் அவ்விடத்தை யடைந்து,
தமக்கென அமைத் திருந்த தக்க தொரு மணையின்மீது
அமர்ந்தார். அவருடைய மாணாக்கர்களாகிய தொல்காப்
பியனார், அதங்கோட் டாசிரியர், துராலிங்கர், செம்பூட் சே
ஏய், வையாபிகனார், வாய்ப்பிகனார், பனம்பாரனார், கழாஅ
ரம்பனார், அவிநயனார், காக்கைபாடினியார், நற்றத்தனார்,
வாமனனார் முதலியோர்களும் சங்கத்தை யெய்தித், தங்கள்
தன்மைக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டிருந்த மணைகளின்
மீது அழகுடன் உட்கார்ந்தார்கள். பல சிற்றரசரும்
அவ்விடத்தைச் சேர்ந்தனர். ஆடை யணிகளை அழகுடன்
அணிந்து சயமாகீர்த்தி, சங்கத்தை யடைந்து, பொன்
மடங்கல்கள் தாங்கிய உயர்ந்த தோர் ஆடக மணையின்மீது
பொலிவுடன் அமர்ந்தான்.

அற்றை ஞான்று இருந்த தமிழ் மகளின் அழகை
யுன்னி அரசன், உவகை பூத்துப் புன்சிரிப்புடன் வீற்
றிருக்க, அதங்கோட்டு முனிவர் கேட்கத் தொல்காப்பிய
னார், தாம் இயற்றிய நூலைக் கையிற் கொண்டு அரங்கேற்றத்

தொடங்கி, அவ்விடத்திருந்த மக்கள் அனைவர்க்கும் நன்றாய்க் கேட்கும்படி முதலி லிருந்து ஒவ்வொரு சூத்திரமாகப் படித்து, முறையே பொருளை யுணர்த்திப், பல எடுத்துக் காட்டுகளுடன் ஒவ்வொரு சூத்திரத்தின் கருத்தையும் செவ்வனே விளக்கினார். கூட முனிவருக்கு மன மகிழ்ச்சி யுண்டாகுமாறு அதங்கோட்டு அந்தணர், அப்போதைக் கப்போது எழுந்திருந்து, தொல்காப்பியனார் நூற் பொருள்களைத் தடுத்துப் பல விடங்களில் மறுப்புரைகள் பலவற்றைக் கூறினார். அந்தத் தடைகட் கெல்லாம் சிறிதும் பின் வாங்காமல் குற்றம் நீங்கத் தக்க விடைக ளளித்து, அகத்தியர் முதலிய புலவர்க ளெல்லாரும் மிக்க வியப்பும் விருப்பு மடையத் தம் கோளை நிலை நாட்டினார் தொல்காப்பியனார். முடிவில் தொல்காப்பியருடைய நூல் குற்ற மற்ற தென்று அதங்கோட் டாசிரியர் ஒப்புக் கொண்டார். சயமாகீர்த்தி களிப்பின் பெருக்கால் மதி மயங்கிச் சிறிது நேரம் தன்னை மறந்து வீற்றிருந்தான்.

தொல்காப்பியத்தின் அருந் தன்மையை யறிந்து அவ்விடத்திருந்த மக்கள் அனைவரும், மிக்க வியப்புங் களிப்புங் கொண்டனர்; அவ்விலக்கணத்தின் அருமையைப் பாராட்டி வரம் பின்றிப் புகழ்ந்து கொண்டாடினர்; அழிதலில்லாத பேரின்ப வீட்டை யடைந்தவரைப்போல் மன மிக மகிழ்ந்து செயலற்று நின்றனர். அரங்கேற்றுதலாய நிகழ்ச்சி இனிதாக நிறைவேறிய பின்னர், ஆண்டிருந்த பெரியார் பலரும், தொல்காப்பியனாரும் அவருடைய இலக்கணமும் நீடூழி விளங்கப் பலதிறப்பட வாழ்த்தினர்; கடவுளை வணங்கிப் போற்றினர். அப்பெருங் கூட்டத்தின் இடையே மாகீர்த்தி யெழுந்து, தொல்காப்பிய முனிவரைப் பெரிதும் கௌரவித்தான். அன்று கூடிய அச்சங்கம், அனைவர்க்கும் புதிய தோர் இன்பத்தைத் தந்து கலைந்தது.

அந்நாள் முதல் தொல்காப்பியத்தை மாமறை யெனக் கொண்டு தமிழ ரெல்லாரும் போற்றிப் பயின்று வரலாயி னர். அவ்விடைச் சங்கத்திற்கு அத்தொல்காப்பியமே முதன்மையான இலக்கண நூலாய் இருந்தது. அன்று முதல் இன்றுவரை அவ்விலக்கண மொன்றே தமி ழுலகத் திற் பிரமாண நூலாக விளங்கி வருகின்றது.

## பகுதி - ரு

### கடைச்சங்கம்

தமி ழுலகத்திற்குப் புத்துயிர் எனத் தோன்றிய தொல் காப்பியத்தைத் தென்னாட்டு மக்கள் அனைவரும் ஓதி யுணர, மாகீர்த்தி பலவாறு முயன்றான்; தன் நாட்டி லிருந்த ஆசிரியர்க ளெல்லாரையும் வர வழைத்து, அவர்களுக்கு ஏராளமாய்ப் பொருளை வழங்கித் தொல்காப் பியத்தைப் பல பிரதிகளாய் எழுதுவித்துப் பலர்க்கும் உத வினான்; அவ்விலக்கணத்தைக் கற்றல், கற்பித்த லாகிய தொழில்களை மேற்கொண்ட பலர்க்கும் பொருளைக் கொடுத் தும், நிலங்களை வழங்கியும் உதவி புரிந்தான்; தன்னுடைய உடல் பொருள் உயிர் ஆகிய மூன்றையும் தமிழ் மொழி யின் முன்னேற்றத்தைக் கருதியே அவன் செலவழித்தான். பன்னாட்கள் அங்ஙனம் தமி ழணங்கின் அருந் தொண் டாற்றி இன்பமாக வாழ்ந்திருந்த பின்னர் அத்தோன்றல், அத்தமிழ் இன்பத்து அறிவன் தாளிணையை யடைந்து இன் புறலானான். அவ்வாண்டகை இவ்வுலக வாழ்க்கையி னின்று பிரிந்தமைக்குத் தமிழ் நாட்டினர் எல்லாரும், பல

நாட்கள்வரை ஆற்றொணாத் துயரத்திற்குள் மூழ்கி யிருந்தனர்; அம்மன்னனுடைய பெருந் தன்மையை அடிக்கடி யெண்ணி மிக வருந்தினர்.

அவ்வரசன் வீட்டின்பத்தை யடைந்து பல்லாயிரமாண்டுகள் கழிந்த பின்னர் அவனைப் பற்றி நாம் இப்பொழுது படிக்க வேண்டிய தேன் என்பதைக் குறித்து நீவிர் நன்கு ஆராய்ந்து பார்ப்பீராக. தனக்கென வாழாப் பிறர்க் குரியாளனா யிருந்த அப்பெருந்தகையான் தமிழுலகத்திற்குச் செய்த பேருதவி யன்றோ, அம்மன்னனைப் பற்றி எண்ண இன்றும் நம்மைத் தூண்டுகிறது? அவ்வரசனுடைய முயற்சியால் அரங்கேற்றப் பட்டு வெளிப் போந்த தொல்காப்பியம், இப்பொழுதும் தமிழ் மக்களுக்கு உயிரெனச் சிறந்து விளங்குகின்றது. செயற் கரிய நற்செயலைச் செய்ததனா லன்றோ, அந்த அரசனுடைய புகழ், குன்றின்மே லிட்ட விளக்கென எந்நாளும் விளங்குவ தாயிற்று? உலகுள்ளளவும் நிடித்திருக்கத் தக்க நல்லிசை படைத்த மாகீர்த்தியைப் போன்ற பெரியாருடைய வரலாறுகள் நமக்கு எத்துணை நன்மை பயக்கு மென்பதை நாம், அவ்வரலாறுகளை மனத்திற் கொண்டு நன்றாய் உற்று நோக்குவோ மாயின் நன்கு அறியலாமே.

இதுவரையில் சயமாகீர்த்தி வரலாற்றைத் தொடர்ந்து வந்த தமிழ்ச் சங்கத்தின் செய்தியைப் பற்றி மேற் கூறாமல் நிறுத்திக் கொள்வோ மாயின், நாம் அச்சங்கத்தைக் குறித்த முழுச் செய்தியைச் சுருக்கமாயும் ஓராவழி அறிந்தவராகமாட்டோ மன்றோ? ஆதலால், சிறி தளவேனும் அதைப் பற்றி யறிந்து மகிழ்ச்சி யடைவோமாக.

அவ்விடைச் சங்கத் திருந்து தமி ழாராய்ந்த புலவர்கள் அகத்தியனார், தொல்காப்பியனார், இருந்தையூர்க்

கருங்கோழியார், மோசியார், வெள்ளூர்க் காப்பியனார், சிறு பாண்ட ரங்கனார், திரையன் மாறனார், துவரைக் கோனார், கீரந்தையார் முதலிய ஐம்பத்தொன்பதின்மர்களாவார்கள். அவர்கள் உள்ளிட்டு மூவாயிரத்து எழுநூற்றுவர் பாடினர் என்ப. அவர்களாற் பாடப் பட்டவை, கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலை அகவலும், பிறவுமாம். அவர்களுக்கு எடுப்புநூல்களாயிருந்தவை அகத்தியம், தொல்காப்பியம், மா புராணம், இசை நுணுக்கம், பூத புராணம் முதலியனவாம். அவர்கள் மூவாயிரத்து எழுநூற்றியாண்டு சங்க மிருந்தார்கள் என்பர். அவர்களைச் சங்கம் இரீஇனார், வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவி யரங்கேறினார், ஐவர் பாண்டியர் என்ப. அந்த ஐவருள் அநாகுலனும் அவன் மைந்தன் சார குமாரனும் அத்தமிழ்ச் சங்கத்தை யாகிர்த்திலையைப் போலவே போற்றி வளர்த்து வந்தனர்.

சார குமாரன் என்பான் அநாகுல பாண்டியனுக்கும் ஊர்வசிக்கும் பிறந்த மைந்தனாவான். அநாகுலன் கடவுளர் வன்மை படைத்திருந்தான். அவன், ஒரு நாள் தன்னுடைய அழகிய தேரில் அமர்ந்து, வானகத்தின் வழியே சென்றான். அப்பொழுது, நீர்மேல் நடிக்க வல்ல வன்மை பொருந்திய தேவ மகளாகிய ஊர்வசி, பொற்பட்டாடைகளையும் அணிகலன்களையும் அணிந்து மிக்க அழகுடன் ஆண்டு உலாவிக் கொண்டிருந்தாள். அவளைக் கண்டு விரும்பி மணந்தான் அவ்வேந்தன். அவனுடைய தேர் சரியாக நின்றுழி அம்மங்கையினிடம் அவனுக்கு மைந்தன் ஒருவன் பிறந்தான். தேர் சரியாக நின்றுழிப் பிறந்தமையால் அம்மகனுக்குச் சார குமாரன் என்னும் பெயர் வழங்கலாயிற்று.

குட முனிவருடைய மாணுக்கருள் சிகண்டியார் என்பாரும் ஒருவராவார். அநாகுலனுடைய புதல்வன் நன்ருய் வளர்ந்து கல்வி கற்கத் தக்க வயதை யடைந்தவுடன் அவனுக்குச் சிகண்டியார் ஆசிரியரா யிருந்தார். அந்த இளவரசன் இசை யறிதற் பொருட்டு அவ்வாசிரியர், இசை நுணுக்கம் என்னும் நூலை யியற்றினுர். அகத்தியனுருடைய மாணுக்கருள் முதன்மையான பன்னிருவரையும் முன்னமே கூறியுள்ளேம். அப்பன்னிருவரும் சேர்ந்து ஒரு நூலை யியற்றினுர். அந்நூல், பன்னிரு படலம் என்னும் பெயரை யுடைத்தா யிருந்தது. முன்னர் கூறிய இடைச் சங்கத்துப் பெரு நூல்களுடன் அப்பன்னிரு படலமும் சிறந்து விளங்கியது. பல்லாண்டுகளுக்குப் பின்னர் கபாடபுரத்துச் சங்கமும் அழிந்தது. மேற் சொன்ன அரிய பெரு நூல்களெல்லாமும் அச்சங்கத்தோடே அழிந்தொழிந்தன. அந்நூல்களுட் சிற்சில பகுதிகள், பண்டை உரையாசிரியர்களாகிய அடியார்க்கு நல்லார், நச்சினுர்க் கினியர் முதலியோருக்குக் கிடைத்திருந்தனவாய்த் தெரிகின்றன. அச்சிறு பகுதிகளும் தற்போது நமக்குக் கிடைத்தில வாயின. அதனுல், அக்காலத்துப் பழக்க ஒழுக்கங்களையும், பல வரலாறுகளையும் உண்மைக் கிணங்க எளிதில் நாம் சிறிதளவாயினுட் அறிய இயலாதவரா யிருக்கின்ருேம்.

இனி, மூன்ருவதாய கடைச் சங்கத்தைப் பற்றியும் சிறிது தெரிந்து கொள்வோம். இப்போதுள்ள மதுரை மாநகரில் முடத் திருமாறன் என்னும் பாண்டியனுல் மூன்ருவதாகத் தமிழ்ச் சங்கம் ஒன்று நிலை நிறுத்தப் பட்டது. அச்சங்கத்தில் வீற்றிருந்து தமி ழாராய்ந்த புலவர்கள், சிறுமேதாவியார், சேந்தம் பூதனுர், அறிவுடை யரனுர், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறனுர், மதுரை யாசிரியர் நல்லந்துவனுர், மருதனிள நாகனுர், கணக்காயனுர்மகனுர்நக்கீரனுர்

முதலிய நாற்பத்தொன்பதின்மர்க ளாவார்கள். அவர்கள் உள்ளிட்டு நானூற்று நாற்பத் தொன்பதின்மர் பாடினர் என்ப. அவர்களாற் பாடப்பட்ட நூல்கள், முத்தொள்ளாயிரமும், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அக நானூறு, புறநானூறு என்னும் எட்டுத்தொகை நூல்களும், திரு முருகாற்றுப் படை, பொருந ராற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, சிறு பா ணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடு கடாம் என்னும் பத்துப்பாட்டு நூல்களும், நாலடியார், இனிது நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை யைம்பது, ஐந்திணை யெழுபது, திணைமொழி யைம்பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்னும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் பிறவு மாம். கடைச் சங்கத்து நூல் களுள் பல நமக்குக் கிடைத்திருத்தலால் தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களும், பல வரலாறுகளும் நாம் ஒருவாறு அறியக் கிடக்கின்றன.

கடைச் சங்கத்தார்க்குப் பிரமாண நூல்களா யிருந்தவை அகத்தியமும் தொல்காப்பியமுமாம். அவர் சங்க மிருந்து தமி ழாராய்ந்தது, ஆயிரத்து எண்ணூற்று ஐம்பதிற்றி யாண்டு என்பர். அவரைச் சங்கம் இரீஇயினார் முடத் திரு மாறன் முதல் உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத் தொன் பதின்ம ராவர். அவருட் கவி யரங்கேறியவர், மூவர் பாண் டியர் என்பர். முதலிரண்டு சங்கங்களினும் கடைச் சங்கத் தினால் நாம் மிக்க பயனை யடைந்திருக்கின்றோம். அக் காலத்தினரால் இயற்றப்பட்ட நூல்களே, இந்நாளில் தமிழ் மொழிக்கு உயிர் தந்து விளங்குகின்றன. அந்நூல்களை

புணர்ந்து தமிழ் மொழியைப் பண்டை உயர்ந்த நிலைமைக்கு கொண்டுவரக் காலம் வாய்த்திருக்கிறது. ஆயினும், தமிழ் மக்கள் அம்முயற்சியின்கண் சிறிதும் அறிவைச் செலுத்து கின்றனர் அல்லர். தற்போதுள்ள தமிழருடைய நிலை மையை நினைக்க நினைக்க நெஞ்சு புண்ணுகின்றது. தன் னுடைய முழு அழகுடன் தமிழ் மாது இந்நாட்டில் என்று நடிக்கப் போகின்றனளோ? அம்மங்கையினிடம் மன மிரங்கி எல்லாம் வல்ல இறைவன் திருவருள் சுரக்கும் நாள், எந்நாளோ?

# கரிகாலன்

## முதற் பகுதி

### அரசுரிமைக் குரிய மைந்தன் பிறப்பு

உலகங்கள் தோறும் தன் ஒப்பற்ற ஒளியை வீசிப் பொருள்களை விளக்கிக் காக்கும் பகலவன் வழித் தோன்றியவனும், ஒரு புறவின் உயிரைக் காப்ப தற்காகத் தன்னுடைய உடல் முழுவதையும் கொய்து வழங்கிய மாபெரும் வள்ளலு மாகிய சிபி என்னும் மா மன்னன் மரபில் உதித்தவர் என்று அனைவராலும் சொல் லப்படும் சோழர், தென்னாட்டின் வடகிழக்குப் பகுதியை நெடுங் கால மளவும் அரசாண்டனர். அந்நிலப் பகுதியைச் சோழ நாடு, சோணாடு, சோழ மண்டலம் என்று பலரும் சொல்லுவர். பொன் கொழிக்கும் தீம்புனல் நிறைந்த பொன்னி, ஊடுருவிப்பாயும் அந்நாட்டின் வளப்பத்தைப் பாராட்டிப் புனைந்துரையாடாத பெரியார் இலர்.

அந்தச் சோழ மண்டலம், ஒப்பற்ற நீர்வளமும் நில வளமும் படைத்த மிக்க செழிப்பான நாடாகும். அந் நிலத்திற் பாயும் கங்கையினும் புனிதமாய காவிரி யாற்றில் எக்காலும் நீர்நிறைந்திருக்கும். அதனால், சோணாட்டிற்குப் புனல் நாடு என்னும் ஒரு பெயரும் உண்டாயிற்று. காவிரி யாறும், அதன் கிளைநதிகளும் சோழ நாட்டில் எங்கும்

பரவிப் பாய்வதனாலும், அந்நாட்டு நிலங்கள் மிக்க உரம் படைத்து நல்லனவாய் இருப்பதனாலும் நெல் முதலிய உணவுப் பொருள்கள் அங்கு ஏராளமாய் விளைகின்றன. அந் நாட்டில் விளையும் நெற்பயிர்கள், முழு அளவினும் நீளமாய்க் கதிர்கள் விடும். ஒரு கட்டுத் தாள் அடித்தால் கல நெல் காணும். மேதக்க சோழ வளநாடு சோறுடைத்து என்று சொல்லி அந்நாட்டு வளப்பத்தைப் பெரியார் புகழ்ந் திருக்கின்றனர். சோணாட்டில் எப்பொழுதும் பஞ்சம் தலை காட்டுவ தில்லை. அந்நாடு மிக்க வளப்பம் பொருந்திய தாதலின், அதை யாண்ட ஒவ்வோர் அரசற்கும் வளவன் என்னும் சிறப்புப் பெயர் ஒன்று வழங்க லாயிற்று. சோற்று வளத்தில் மிக்க அந்நாட்டிற் கடவுளர் கோயில் களும் எண்ணிறந்தனவாய் இருக்கின்றன.

தென்னாட்டை பாண்ட முடியுடை மூவேந்தர்களுள் சோழ மன்னர், மிகப் பழமையானவராய்க் காணப்படுகின் றனர். அவ்வரசர் குலம், தமிழ் நாட்டிற் குடியேறிய காலம் இன்னதுதான் என்று வரையறுத்துச் சொல்லப் போதிய சான்றுகள் கிடைத்தில. அக்குலத்தினர், சரித்திர காலத் திற்கு முன்பே தென்னாட்டிற் குடியேறியவராய் இருக்கின் றனர். முதற் கரிகாற் சோழனுக்கு முற்பட்ட சோழ வர சருடைய காலங்களையும் வரலாறுகளையும் நமக்கு நன்றாய் அறிவித்தற் குரிய சாசனங்கள் இல வாயின. ஆதலால், பழைய வரலாறுகளை யாராயும் சரித்திர ஆராய்ச்சியாளர், சோழர் குலத் துதித்த முதற் கரிகாலனையே முதன்மை யாகக் கொண்டு பல வரலாறுகளையும் ஆராய்வ ராயினர்.

சோழ வரசர்களுக் குரிய தலை நகரங்கள் ஐந்தாகும். அவை, கருவூர், உறையூர், திருவாரூர், திருச்சேய்நலூர், காவிரிப்பூம் பட்டினம் என்பவையே யாம். தஞ்சை, காஞ்சி முதலிய வேறு சில நகரங்களும் அம்மன்னர்களுக்

குத் தலை நகரங்களாக இருந்தனவாய்த் தெரிகின்றன. கோழியூர் என்றும் சொல்லப்படும் உறையூரைத் தலை நகரமாகக் கொண்டு ஏறக்குறைய இரண்டாயிர மாண்டுகளுக்கு முன் சோழநாட்டை யாண்டிருந்த மன்ன னொருவன், மைந்தர் இருவரைப் பெற்றிருந்தான். அச்சோழன், இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி என்னும் பெயரை யுடைய மன்னனே யாவான் என்று சிலர் கூறுவர். அந்தப் புதல்வர் இருவருள் மூத்தோனுக்குச் சேட்சென்னி என்றும், இளையவனுக்கு இளஞ் சேட்சென்னி என்றும் இளையோன் என்றும் பெயர்கள் வழங்க லாயின. அந்த மைந்தர் இருவரும் செல்வனே வளர்ந்து, பல கலைகளையும் நன்குய்க் கற்றனர். அரசியலை யேற்றற் குரிய தக்க வயதை யடைந்தவுடன் சேட்சென்னிக்கு முடிசூட்டப் பட்டது. அவன், அழகிய பெண் ணொருத்தியை மணந்து சோணாட்டை நீதி நெறிக் கிணங்க அரசாண்டு வந்தான்.

இளஞ் சேட்சென்னி தோள் வன்மையிலும், வீரத்திலும், கொடையிலும் மிக்கவனு யிருந்தான். வல்ல இளைஞர் பலர், அவனுக்கு உயிர்த் துணைவரா யிருந்தனர். அவ்விளையோன், பகைவர்களை யெதிர்த்துச் சண்டை செய்து வெற்றி பெறத் தக்க வழிகள் பலவற்றைத் தன்னுடைய நண்பர்களுக்கு ஒவ்வொரு நாளும் கற்பித்து வந்தான்; மற்போர் புரிவதிலும் மிக்க திறமை யுடையவர்களாய் விளங்க அத் துணைவர்களைப் பழக்கினுன். சண்டை செய்வதில் நிகரற்ற வல்லமை படைத்துக் கைதேர்ந்த அழகிய பல தேர்ப்படைகளை யுடையவனு யிருந்த அந்த இளையோன், தன்னுடைய அண்ணனுக்கு இள வரசனு யிருந்து பேருதவி புரிந்தான்; தன் தேர்ப்படைகளைக் கொண்டு மாற்றரசர்களை யெதிர்த்துப் போரில் வென்று, அவர்களுடைய நாடுகளைக் கைக்கொண்டு மிக்க புகழுடன் விளங்கினுன். அதனுல் அவன்,

உருவப் பஃறேர் இளஞ் சேட்சென்னி என்னும் காரணப் பெயரையும் பெற்ருன்.

அந்த இள வரசனுடைய திறமையையும் பெருமையை யுங் கண்டு சேட்சென்னி, அள விறந்த விபப்பை யடைந் தான்; தன்னுடைய தம்பியி னிடம் மிக்க விருப்பங் கொண் டான்; அரசியலையும் அவனை நடாத்தி வர விட்டுத் தான் இன்பத்துடன் அரண்மனையி லிருந்து நாட்களைக் கழிக்க லானன். உடன்பிறந்தாராய அவ்விருவரும், தமக்குள் யாதொரு மன வேறுபாடு மின்றி யொழுகி வந்தனர். இளஞ் சேட்சென்னி மூத்தோனுடைய மொழிக் கிணங்க நடந்து, அற நெறியி னின்று சிறிதும் பிறழாமல் நாட்டை யாண்டு, குடிகளுக்கு யாதொரு கெடுதியும் நேரா வண்ணம் திறமை யுடன் நாட்டைப் பாதுகாத்து வந்தான்; அரண்மனைக் குரிய நிலங்களை யெல்லாம் செவ்வனே பயிர் செய்ய எளிய குடி களுக்கு விட்டான். பயிர்த் தொழிலைப் பெருக்குதலிலும் ஏழைகளைக் காப்பதிலும், அவன் மிக்க விருப்ப முடைய வனு யிருந்தான். தன்னுடைய ஆளுகைக்குக் கீழ்ப்பட் டிருந்த சிற்றரசர்களிட மிருந்தும், குடிகளிட மிருந்தும் குறித்த காலங்கள் தோறும் தக்க முறைப்படி அவன் வரியை வாங்கினன். பகை மன்னர் அந்த இள வரசனுடைய பெயரைக் கேட்டாலே வெருக் கொண்டு நடுங்குவ ராயினர். அம்மன்னனுக்குத் தாங்கள் கட்ட வேண்டிய பகுதிப் பணங்களை மற்றரசர்கள், காலந் தோறும் தவறுத லின்றிச் செலுத்தி வர லானர்கள்.

நாட்கள் சில கழிந்தன. அழுந்தூரி லிருந்த வேளாளர் வீட்டுப் பெண் ணெருத்தியை இளஞ் சேட்சென்னி, தன் குலமுறைக் கிணங்க மணம் புரிந்தான். அப்பெண், இரும்பிடர்த் தலையார் என்னும் தன் னேரிலாத் தமிழ்ப் புலவர் ஒருவருடைய தங்கை யாவாள். தம்முடைய

நிலங்களைத் தம் கீழிருந்த குடிகளுக்குச் சிறிது சிறிதாய்ப் பகுத்துக் கொடுத்து உழுவித்து, அக்குடிகளிட மிருந்து இறையைப் பெற்று உண்டு வாழ்ந்திருந்த வகுப்பினரே, வேளாள ராவர். முற்காலத்தில் தமிழ வரசர்க்கு நீங்காத் துணைவராயும், மண்டில மக்களாயும், தண்டத் தலைவராயும் அக்குலத்தினர் இருந்தனர். அவ்வகுப்பினர் முன்னாளிற் சோழ வள நாட்டிலுள்ள பிடவூர், அழுந்தூர், நாங்கூர், நாவூர், ஆலஞ்சேரி, பெருஞ்சிக்கல், வல்லம், கிழார் முதலிய பெரிய ஊர்களில் வாழ்ந்திருந்தனர்; வேள், அரசு, காவிதி முதலிய பட்டங்களைப் பெற்றுத் தமிழ் நாட்டிற் சிறப்புடன் விளங்கினர். அவவேளாளர், துவரையம்பதியி னின்று குட முனிவருடன் தமிழ் நாடு போந்த வேளிர் ஆவர் என்றும், துவாரகையை யரசாண்ட நிலங்கடந்த நெடுமுடி அண்ணல் மரபைச் சேர்ந்தவர் என்றும் சொல்லப்படுகின் றனர். அதனால், அக்குலத்தினருடைய பெண்களைத் தமிழ வரசர்களாகிய சேர சோழ பாண்டியர்கள் விரும்பி மணம் புரிந்து வந்தார்கள்.

திருமணத்தின் பின்னர் இளஞ் சேட்சென்னி, தனக் கென அமைத்ததோர் அழகிய மாளிகையில் தன்னுடைய மனைவியுடன் இனிதாக வாழ்ந்திருந்தான். அவனுடைய மனைவி, 'அழகில் திருமகளையும், கற்பில் அருந்ததியை யும் ஒத்திருக்கின்றாள் இவள்' என்று பலராலும் புகழ்ந்து பேசத் தக்கவளாய் விளங்கினாள். அந்நங்கை, கொண்டவ னையே கண் கண்ட தெய்வமாக எண்ணித் துதித்தும், கற் பெனப் படுவது சொற்றிறம்பாமை என்பதையே நோன்பா கக் கொண்டு கணவனுடைய சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடந்தும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் பெண் களுக் குரிய நாற்குணங்களையும் நல் லணிகலன்க ளாகக் கொண்டு கணவனுக் கினியளாயும் ஒழுகினாள். இளையோ

னும், அவனுடைய மனைவியும் மன மொத்து அன்பும் அருளும் உடையவராய் இல்லற வாழ்க்கையை நல்லற வழியே இன்பத்துடன் நடத்தினர்.

அங்ஙனம் சில நாட்கள் கழிந்தன. அப்பெண்மணி கருக் கொண்டாள். அதை யறிந்து இளஞ் சேட்சென்னி மிக்க களிப்பை யடைந்தான்; அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து விளங்கத் தக்க மைந்தன் ஒருவனைத் தனக்கு அருளுமாறு வேண்டிக் கடவுளை அல்லும் பகலும் துதித்து வழிபட்டான். அவனுடைய இல்லக் கிழத்தி கருக் கொண்ட பொழுதே மூத்தோனுடைய இல்லாளும் கருப்ப வதி யானாள். தன் மனைவியின் நிலைமையைக் கண்டு சேட் சென்னியும் மிக்க மன மகிழ்ச்சி யடைந்தான். தம்முடைய கருப்பங்கள் நாளுக்கு நாள் முதிர்ந்து வர அம்மாதர், மக்கட் பேற்றை யடைதற் குரிய காலத்திற்கு அணித்தாயினர்.

அப்போது, வருவதை யறிந்து கூறும் நிமித்திகன் ஒருவன், அவ்வரசர் கோயிலை யடைந்தான். அந்தச் சான் றோனைச் சேட்சென்னியும், அவனுடைய தம்பியும் அன் புடன் வரவேற்று, அவனுடைய இணையடிகளை வணங்கி நின்றனர். ஆசி மொழிந்து அவ்வரசரை நோக்கி நிமித்தி கன், "திருவுடை மன்னரே! நீவிர் இருவீரும் எந்நாளும் இன்பமே எய்தி வாழக் கடவீர். உம்முடைய குலப் பெரு மை, அளவிடற் கரியதாகும். உம்முடைய முன்னோர் கள், அற மேற்கொண்டு மறங் கடிந்து, வீரத்திலும் கொடை யிலும் ஒப்பற்றவர்களா யிருந்து, இத்தென்னாடு முழுவதை யும் செங்கோ லோச்சிக் காத்தார்கள்; பல கோயில்களைக் கட்டிக் கடவுளை வழிபட்டார்கள்; எண்ணிறந்த குளங் களை வெட்டியும், ஏரிகளைக் கட்டியும், சோலைகளை வைத் தும், சாலைகளை யுண்டாக்கியும் மக்களுக்குப் பல வகையில் உதவி புரிந்தார்கள்; தமிழ் மொழியின் வளர்ச்சியை மிகப்

பாராட்டியும், தமிழ்ப் புலவர்களுக்கு ஏராளமாய்ப் பொருள் நிலம் முதலியவற்றை வழங்கியும் போற்றினார்கள். அத்தகைய பெருந்தன்மை வாய்ந்திருந்த மன்னர் மரபில் தோன்றிய நீவிரும், நற்குண நற்செயல்களுக்கு உறைவிடமா யிருக்கின்றீர் என்பதை யெடுத் தியம்ப யான் விழைகின்றேன். கோல் கோடாமல் அரசாண்டு குடிகளுக்கு நேரும் துன்பங்களைத் துடைத்து, யாவர்க்கும் இன்ப முண்டாக்குகின்ற நீவிர், எல்லாம் வல்ல திருநாரணர் அருளால் பல வகைச் செல்வங்களையு மெய்திப் பல்லாண்டு இனிதாக வாழ்வீர். யாதொரு குறையும் நேரா வண்ணம் அக்கடவுள் உம்மைக் காத்தளிப்பார்," என்று மொழிந்தான்.

நிமித்திகன் உரைத்தவற்றைக் கேட்டு அவ்வரசர் இருவரும் உவகை கொண்டனர்; அந்த அறிஞனை நோக்கி, "பெரியீர்! எம்முடைய குலப் பெருமையை விளக்கத் தக்க சிறந்த மைந்தன் எமக்குப் பிறப்பானு?" என்று கேட்டனர். சிறிது நேரம் ஆழ்ந்த கருத்துடன் இருந்த பின்பு அந்நிமித்திகன், அரசரைப் பார்த்து, "மாசிலா மன முடையீர்! நும்மிருவர் மனைவியரும் இன்றே பிள்ளைப் பேற்றை யடைதற்குரியவரா யிருக்கின்றனர். அவ்விரு மாதரும் ஆண்பிள்ளைகளையே பெறுவர் என்பதில் ஐய மிலது. ஆயினும், இற்றைப் பொழுதைக் கடந்து நாளைக்குப் பிறக்கும் மைந்தனே உம்முடைய குடிப் பெயரை விளக்கி, மிக்க புகழுடன் இவ்வுலகம் முழுவதையும் ஒரு குடையின்கீழ் ஆள்வான். அப்புதல்வனுக்கு முடிசூட்டலே நல்ல தாகும்," என்று கூறினான்.

அம்மொழிகளைச் செவியுற்ற மன்னர் இருவரும் களிப் படைந்து, அப்பெரியோனைப் பார்த்து, "அறிஞரே! எமக்குப் பின்னர் இந்நாட்டைச் செவ்வையாய்க் காக்கக் கூடிய புதல்வனையே யாம் அடைய விரும்புகின்றோம். மூத்

தோனே அரசுரிமையை யேற்கக் கூடியவ னுவான் என்னும் முறையைக் கடைப்பிடித் தொழுக யாம் இச்சிக்கின்றி லேம். மூத்தோனுக் காயினும், அன்றி இளையோனுக் காயினும் நீர் சொன்ன ஓரையில், அரசனுதற் குரிய அமைப் புடன் பிறக்கும் மைந்தனே இந்நிலத்தை யாளக் கடவன்," என்று இசைத்தனர். அதற்கு அச்சான்றோன், "உம் முடைய மனத் துணிவு சாலச் சிறந்ததே யாகும்," என்று பதிலுரைத்துப் புன்முறுவல் கொண்டான்.

மன்னருடன் சிறிது நேரம் இன்பம் பயப்ப அளவளா விப் பேசி முடித்து அந்நிமித்திகன், அவ்வரசரை வாழ்த்தி, விடைகொண்டு அவ்விடத்தை விட்டு அகன்றான். இரண் டொரு நாழிகை கழிய மன்னிக ளிருவரும், மகப்பெறு நோய்க் குள்ளாகி மிக வருந்தினர். மூத்தோன் மனைவி, அந் நாள் மாலைப்பொழுதில் ஓர் ஆண் குழந்தையைப் பெற் றெடுத்தாள். அப்புதல்வன் பிறந்தவுடன் சேட்சென்னி யும், அவனுடைய இல்லாளின் உறவின் முறையினரும் ஆற்றெணுத் துயரத்திற் குள்ளானுர்கள். அவர்களுடைய மனங்கள் கலங்கின; முகங்கள் வேறுபட்டன. "ஐயோ! இளையோன் மகன் தாய மெய்திப் பிறக்கப் போகின்றனே! நிமித்திகன் சொன்ன வண்ணம் அப்புதல்வனே இந்நாட் டைக் கைப்பற்றி யாளும் தன்மை யடைவானே," என்று எண்ணி அவர்கள் உளைந்தார்கள். இளையோன் பன்னி அன்று பிள்ளையைப் பெற்றிலள். அவள் அடைந்திருந்த நோயும் சிறுகக் குறைந்துகொண்டே வரத் தொடங் கியது. அற்றைப் பொழுது முடிவடைந்தது. சேட்சென் னிக்குக் குறை நேர்ந்தது என்று சொல்லுதற்கு அறிகுறியா மாறு பேரிருள் மூண்டெழுந்தது.

மறுநாட் பொழுது புலர்ந்தது. தன் குல உயர்வை விளக்கப்பிறக்கும் மைந்தனைக் கண்டு களிக்கப்பேரவாவுடன்

வருவானைப் போலக் கதிர்ச்செல்வனும், குணதிசையி னின்று வானகத்தை நாடி மேற் கிளம்பினான். சோழ வரச ருடைய வீரத்தைக் கண்டு அஞ்சி யோடும் மாற்றலரைப் போலக் கங்குலாகிய நங்கையும் நாணி நடந்தாள். நிமித்தி கன் கூறிய நல் வேளை நடிக்க லாயிற்று. அழுந்தூர் வேண்மாள் ஓர் ஆண்மகவைப் பயந்தாள். இளஞ் சேட் சென்னி உள மிக மகிழ்ந்தான். சேட்சென்னியும், அவ னுடைய மனைவியும், அவரைச் சேர்ந்த மற்றையோரும் அப்பிள்ளையினிடம் பொறாமை கொண்டனர்; மன மிக வருந்தினர். தாய் வயிற் றிருந்து தாய மெய்திப் பிறந்த அம்மைந்தன், அழகிய வடிவமும், அகன்ற மார்பும், அம் மார்பிற் செம்பொறியும் உடையவனாய் மா மாயனைப் போலக் காணப்பட்டான்; கண்டவர் கண்களையும் மனங் களையும் கவரத் தக்க பொலிவுடன் விளங்கினான். அப் பிள்ளையைக் கண்ட பலரும், பெருங் களிப் பெய்திக் கொண்டாடினர். தமிழ் நாடு முழுவதையும் ஒரு குடை யின் கீழிருந்து ஆளுதற்குரிய மைந்தன் தமக்குப் பிறந்தான் என்று அப்புதல்வனுடைய பெற்றோர், உள மகிழ்ந்து, உடல் பூரித்து, அறங்கள் பலவற்றைச் செய்தனர்.

---

பகுதி - உ

## இளையோன் மைந்தனுக்குற்ற இடுக்கண்கள்

அரசுரிமை யெய்தித் தமக்குப் புதல்வன் பிறந்தான் எனக் கொண்டு இளஞ் சேட்சென்னியும், அவ னுடைய இல்லக் கிழத்தியும், மிக்க வருத்தத்தை யடைந்த வறிய னொருவன் பணக் குவியலைத் தன் னெதிரிற் கண்டதைப் போலவும், உண்ணக் கூடிய உணவை யிழந்த ஒருவன் தேவாமிருதத்தைப் பெற்றதைப் போலவும்,

வெம்மையினால் வருந்தி யலைந்த ஒருவன் கற்பக மரத்தின் நிழலை யடைந்ததைப் போலவும், உலக இன்பங்களை வெறுத்து ஓடிய ஒருவன், தன் எதிரில் ஞானாசாரியர் ஒருவர் இருக்கப் பார்த்ததைப் போலவும் உள மிறந்த மகிழ்ச்சிக் குள்ளாயினர். அவ்விருவரும், ஏழையாகிய ஒரு வேளாளன், தான் பயிரிட்ட வயல் நற்பயனைத் தரக் காக்கும் செயலைப் போலவும், ஒப்பற்ற கல்வியைக் கற்க விரும்பினோன், தன்னுடைய ஆசிரியர் கற்பித்த பாடங் களைக் காப்பாற்றுகின்ற செயலைப் போலவும், மனுமுறைக் கிணங்க அரசியலை நடாத்துகின்ற மன்னனொருவன், தன் ஆளுகைக் குட்பட்ட குடிகளைக் காக்கும் செயலைப் போல வும், தாம் பெற்ற பிள்ளையைக் கண்ணுங் கருத்துமாய்க் காப்பாற்றி வந்தனர்.

நாடோறும் அழுந்தூர் வேண்மாள், தான் பயந்த அருமருந்தன்ன குழந்தையை நன்றாய் நீராட்டியும், தூய ஆடைகளால் அப்பிள்ளையின் உடம்பைத் துடைத்தும், அக்குழந்தையின் செவிகளிலும் உந்தியிலும் தங்கிய நீரை யூதி அப்புறப் படுத்தியும், வாயின் எச்சற் றளி கொண்டு இழைத்த நிலப் பொட் டிட்டும், அழகுடன் விளங்கக் கண் களுக்கு மை தீட்டியும், கால்களுக்கு சதங்கைகளையும் தண்டைகளையும் பூட்டியும், பொன்னாற் செய்த அரை ஞாண் கயிற்றை இடையிற் கட்டியும், புலி நகங்கள் சேர்த்த பதக்கத்தையும் முத்துமாலையையும் ஐம்படைப் பூணையையும் மார்பில் தொங்க அணிந்தும், பொற்காப்புக் களைக் கைகளுக் கிட்டும், நெற்றிமேல் சுட்டி யென்றைச் சூட்டியும், நல்லாடைகளை யுடுத்தியும், அம்மைந்தனைத் தன்னுடைய இரண்டு கைகளாலும் வாரி யெடுத்து, மார் போடு அணைத்து, உச்சி மோந்து முத்த மிட்டு மகிழ்ந்தும், கண்மிச்சல் போக்கியும், அன்புடன் பால் உண்பித்தும்,

பசும் பொன்னாற் செய்த தொட்டிலிற் படுக்க வைத்துங் களித்தாள். இளையோனும், தன்னுடைய புதல்வனை ஒவ்வொரு நாளும் பன்முறைக் கண்டு களித்து, முத்த மிட்டு மகிழ்ந்தான்.

இளையோனும் அவனுடைய மனையாளும், தம்முடைய புதல்வனை அங்ஙனம் பாராட்டிச் சீராட்டி வளர்த்து வர, அம்மைந்தன் வளர்பிறைத் திங்களைப் போல் நாளுக்கு நாள் உருவத்திலும் அழகிலும் வளர்ந்து வந்தான். சில ஆண்டு களுக்குள் ஒருவன்பின் ஒருவனாக மைந்தர் ஒன்பதின்மர் மூத்தோனுக்கு உதித்தனர். இளஞ் சேட்சென்னி பெற்ற மைந்தன் உயிருடன் இருப்பானாயின், தன்னுடைய புதல்வர்க் கின்றி அரசியலை அம்மகன் கைக்கொள்ளக் கூடியவனாவான் என்று கருதி, அப்புதல்வனுடன் அவனுடைய தாய் தந்தையரையும் கொல்ல மனத்திற் கொண்டு சேட்சென்னி, பல வகைச் சூழ்ச்சிகளைச் செய்தான். இளையோன், தன்னுடைய தமையன் கொண்டிருந்த வஞ்ச நெஞ்சத்தை யுணராதவனாய் அக்கொடியோனிடம் அன்புடன் ஒழுகி வந்தான்.

மூத்தோன் கொண்டிருந்த கள்ள உள்ளத்தை இளையோனுடைய மைத்துனராகிய இரும்பிடர்த் தலையார், எவ்வகையினாலோ அறிந்து கொண்டார். அதனால் அவர், தம்முடைய தங்கையின் வீட்டில் தங்கி யிருந்து, அவளுக்கும் அவளுடைய கொழுநனுக்கும் மைந்தனுக்கும் யாதொரு துன்பமும் நேராமற் செய்ய எண்ணிக் காவல் பூண்டார். அப்புலவர் பெருமானாருடைய அரிய காவலால் சேட்சென்னியினுடைய கெட்ட எண்ணங்கள் நிறைவேறுதற் கின்றி யொழிந்தன. இளையோனுடைய புதல்வனை எவ்வாறாயினும் கொல்ல வேண்டு மென்று எண்ணி உறுதியாகத் தீர்மானித்த கொடும் பாவியாகிய அச்சேட்சென்னி, தன்

னுடைய கருத்தை முடித்தற்கு ஏற்ற காலத்தை மிக்க ஆவலுடன் எதிர் பார்த்திருந்தான். இரும்பிடர்த் தலை யாரால் அக்கொடு தொழிலாளனுடைய கெட்ட எண்ணத் திற்குச் சின்னாள் வரை இடையூறு உண்டா யிருந்தது.

அந்நிலைமையில் ஒருநாள் அறிவுடைப் புலவராகிய இரும்பிடர்த் தலையார், ஒருவருக்கும் தெரியாமல் தம் முடைய தங்கையின் வீட்டை விட்டு வெளியே சென்றிருந் தார். அவ்வேளைச் சேட்சென்னியும் அவனைச் சேர்ந்தவர் சிலரும் ஒன்றுகூடிக் கள்ளத் தன்மையால் இளையோனு டைய மாளிகையைத் தீக் கொளுவுவ ராயினர். சடுதியில் எல்லாப் பக்கங்களிலும் நெருப்புப் பற்றி மூண்டெரிந்தமை யால் இளஞ் சேட்சென்னியும் அவனுடைய பன்னியும் திடுக் கிட்டு, நாலாப் பக்கங்களிலும் ஓடிப் பார்த்தனர்; மாளிகை யின் உள்ளிருந்து வெளியேறுதற் கியலாமையால் துடி துடித்தனர்; பதை பதைத்தனர்; துள்ளிக் குதித்தனர்; அழுது வருந்தினர்; பலவாறு கூவி யரற்றினர்; திகைத் தனர்; மெய் மறந்தனர்; ஏங்கிக் கீழே வீழ்ந்தனர்; திக் கிரையாயினர்.

மாளிகை நன்றாய்த் தீப் பற்றி யெரிந்து கொண்டிருந்த போது வெளியிற் போயிருந்த இரும்பிடர்த் தலையார் திரும்பி வந்தார்; வீட்டின் நிலைமையைக் கண்டார்; நடு நடுங்கினார்; "ஆ தெய்வமே! ஐயோ கடவுளே!" என்று கூறி யரற்றினார்; பெருமூச் செறிந்தார். அவருடைய உயிரும் உடலும் பதை பதைத்தன; துடி துடித்தன. தம் முடைய உயிரையும் உடம்பையும் சிறிதும் பொருட் படுத் தாமல் அவர், நெருப்புக் கிடையில் அம்மாளிகைக்குள் திடீ ரெனப் பாய்ந்தார்; தமக் கெதிரில், தீயால் பிடிக்கப் படா மல் புகை நிறைந்திருந்த ஆண்டோ ரிடத்தில் தம்முடைய மருமான், மனம் பதைக்க, உடல் நடுங்கத், துள்ளித்துடித்து

அலறி யழுது கண்ணீரும் கம்பலையுமா யிருந்து, அரிதிற் புலப்பட, உயிரை உடல் நாடுவதைப்போல் அப்புதல்வனை இரு கைகளாலும் வாரியெடுத்து, அமுதமாகக் கருதி மார்போடணைத்துக் கொண்டு சடுதியில் திரும்பி நெருப்புக் கிடையிற் புகுந்து மாளிகையின் வெளிப்புறத்தை மிக விரைவில் அடைந்தார். ஆ! அத்தமிழ்ப் புலவருடைய வீரச் செயலை எதற்கு ஒப்பிடலாம்? அப்பெருந்தகையார் செய்த பேருதவியைப்போல் யார், யாண்டு செய்திருக்கின்றனர்? அறிவுடையார் செயல்களெல்லாம் அவ்வாறே இருப்பன போலும்.

இணையற்ற வீரத்துடன் தம்முடைய தங்கையின் செல்வக் குழந்தையை யெடுத்துக் கொண்டு மாளிகையினின்று புலவர் வெளியேறிய காலத்து, அச்சிறுவனுடைய கால் ஒன்றில் நெருப்புப் பட்டுச் சிறிது தீங்கை விளைவித்தது. அக்காலின் மேற்புறம் சிறிதளவு கரிந்துவிட்டது. அதனால், அம்மைந்தனுக்குக் கரிகாலன் என்னும் பெயர் உண்டாயிற்று. வீட்டுக்குத் தீயிட்டுத், தாம் அடையதற்கில்லாமல் வீட்டின்பத்திற்கும் தீயிட்டுக் கொண்ட கொடியவர், தம்மால் நெருப்புக் கிரையாக்கப் பட்ட மாளிகையினின்று பாராயினும் உயிருடன் வெளியேறுகின்றனரா என்று ஓர் இடத்தில் மறைந்திருந்து, உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். பெருந் தீயினுக்குச் சற்றும் அஞ்சாமல் வீட்டினுட் புகுந்து தம்முடைய மருமானுடன் வெளிப் போந்த புலவர் பெருந் தகையாரைக் கண்டு அக்கொடிய பகைவர் வியப்படைந்தனர்; ஓடிப் போய்ப் புலவரை யணுகி, அவரிடம் இருந்த சிறுவனைப் பற்றி வன்மையால் இழுத் தெடுத்துச் சென்றனர். வஞ்சனையால் சிதைத்துப் கொல்ல வேண்டு மென்று நினைத்துச் சேட்சென்னி, அப் புதல்வனைச் சிறையிலிடக் கட்டளை யிட்டான். அப்

பொழுதே அவ்வரசனுடைய ஏவலாளர், அந்தச் சிறுவனை யழைத்துச் சென்று சிறையி லடைத்தனர். அச்செயலைப் பார்த்து இரும்பிடர்த் தலையார், புனிற்றிளங் கன்றை யிழந்த பசுவைப்போல மனக் கலக்க மடைந்து, வருந்தி மயங்கலானார்.

என்னே! சின்னஞ் சிறுவனுக்குச் சேட்சென்னி யிழைத்த தீங்குகள், அம்மம்ம மிகக் கொடியன! கேட்பவர்க்கே மனக் கலக்க முண்டாகின்ற தென்றால், அவற்றை நேரிற் பார்த்த இரும்பிடர்த் தலையாரும், மற்றைப் பெரியவரும் என்ன பாடு பட்டிரார்? உயர்ந்த குலத்திற் பிறந்த சேட்சென்னியினுடைய மதியீனத்தை என்னென்று சொல்லலாம்? அரசன் அன்று கொன்றால் தெய்வம் நின்று கொல்லும் என்னும் ஆன்றோருடைய அரிய மொழியை அம்மூட மன்னன் அறிந்திலன் போலும். சிறையி லடைக்கப் பட்ட சிறுவனுக்கு நேர்ந்த துன்பங்களை எண்ணி யார்தாம் வருந்தார்?

சிறைப்பட்ட கரிகாலன் துயரக் கடலுக்குள் மூழ்கியவனாய் மிக வருந்தலானான்; தன்னுடைய தாய் தந்தையர் இறந்தனர் என்பதை யறிந்து கல்லும் கரைந்துருகப் புலம்பி வருந்தினான்; தன் உயிரைக் காத்தளித்த பெறலரும் அம்மானிட மிருந்து பிரிந்தமைக்கு மனம் பொறாமல் நைந்தான்; சேட்சென்னி இழைத்த பொல்லாங்கை உன்னி யுன்னி மன முருகினான்; தீயினால் தன் காலில் உண்டாகிய புண்ணின் நோய்க்குச் சில நாட்கள்வரை மிக வருந்தினான். ஒவ்வொரு நாளும் வேளைதோறும் தவறுத லின்றி அவனுக்குத் தக்க உணவு கிடைத்திலது. அதன்பொருட்டு மன மிக உளைந்தான் அவன். அச்சிறைச்சாலைக் கருகிலிருந்த தெருவிற் பிள்ளைகள் பலர், துள்ளி விளையாடுவராயினர். அச்சிறுவரைப் பார்த்தபோ தெல்லாம் கரிகால

னுடைய மனம், சொல்லொணாத் துன்பத்திற் குள்ளாயது. அப்பிள்ளைகளைப் போலத் தான் விளையாடுதற் கின்மையை நோக்கி அவன், தேம்பித் தேம்பி யழுதான். இளஞ் சேட்சென்னியினுடைய உயர்ந்த தன்மையை மனத்திற் கொண்டு சிறைக் காவலருட் பலர், கரிகாலனிடம் மிக்க இரக்கங் கொண்டிருந்தனர்; அந்தச் சிறுவன் மன வருத்த மடைந்த போதெல்லாம் அக்காவலர், அவனுக்கு இன்ப முண்டாகுமாறு பேசினர்; பழங்கள், பண்ணிகாரங்கள், பால், முதலியவற்றைக் கொணர்ந்து கொடுத்து அப்புதல்வனை யுண்பிக்கலாயினர்; அரசன் அறியா வண்ணம் அம்மைந்தனுக்கு வேண்டிய உதவிகளை யெல்லாம் அடிக்கடிச் செய்து வந்தனர்.

## பகுதி - ௩

## கரிகாலன் அரசனாதல்

சோழனுடைய தீச் செயல்களையும், கெட்ட எண்ணங்களையும் கண்டு இரும்பிடர்த் தலையார், மனம் நொந்து துக்கித்தார். அக்கொடுங் கோலனை வஞ்சித்துக் கரிகாலனைக் காக்க அவர், பலவகைச் சூழ்ச்சிகளைச் செய்தார்; பலவாறு முயன்று சிறைச் சாலையிலிருந்த காவலர் எல்லாரையும் தம் வயப் படுத்தினர்; அக்காவலர் உதவியால் பகைவர் அறியா வண்ணம் நாடோறும் சிறைச் சாலைக்குட் சென்று, தம்முடைய தங்கையின் புதல்வனுக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கினர்; அம்மைந்தனுடைய விருப்பத்திற் கிணங்க ஒவ்வொரு நாளும் நல்லுணவு, சிற்றுண்டி முதலியவற்றைக் கொண்டுபோய் அவனுக்குக் கொடுத்து வந்தார்; அன்பார்ந்த அம்மருமா

னுடைய மனம் எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருக்கு மாறு செய்தார்; அரச குலத்தினர்க் குரிய வாட்கலை, விற்கலை முதலியவற்றை அப்புதல்வனுக்கு முறையே கற்பித்தார். சில நாட்களுக்குள் அம்மகன், எல்லாக் கலைகளையும் நன்ருய்க் கற்றுணர்ந்து, கைதேர்ந்தவனுனன்.

இயற்கையிலேயே நுண்ணறிவு படைத்த கரிகாலன், தன்னுடைய மாதுலனுர் சொல்லுக் கிணங்க நடந்து, தான் பயின்ற கலைகளிற் செவ்வனே பழகி அரிமா வன்ன ஆற்றலையும், மிக்க மனத் துணிவையும் அடைந்தான். தம்முடைய மருமான் புத்திக்கூர்மையையும், தோள் வன்மையையும், அஞ்சா நெஞ்சத்தையும் பார்த்து அழுந்தூர்ப் புலவர், மனக் கவலையற்று ஒருவாறு மகிழ்ச்சியுற்று இருந்தார். தன்னை யழிக்கச் சேட்சென்னி புரிந்த தீங்கைப் பற்றி அப்போதைக் கப்போது நினைந்து கரிகாலன், அத்தீயோனிடம் மிக்க அருவருப்புக் கொண்டான்; அடங்காச் சின மடைந்தான்; பெருமூச் செறிந்தான்; பற்களை நெறு நெறெனக் கடித்தான். அவனுடைய கண்களும் முகமும் சிவந்தன; தோள் துடித்தது. சிறையினின்று வெளியேற ஏற்ற காலத்தை எதிர் நோக்கித் தன்னுடைய தோள்வன்மையை யடக்கி யமைதியுடன் அவன் இருந்தான். திருமகளாருடைய அருளைப் பெறுதற் குரிய நன்னுள், அவனை நெருங்கி வரலாயிற்று.

சிறந்த நோக்கத்துடன் சிறையி லிருந்த சீரிளம் புதல்வனை எங்ஙனம் கொலை புரியலா மென்று சோழவரசன், பன்முறைத் தன் மனத்தில் ஆராய்ந்து பார்த்தான்; உலகத்தினர் தன்னைப் பழிக்காமல் இருக்கத் தக்க தொரு விரகால் அச்சிறுவனை யொழித்தலே நல்ல தாகும் என்று உட்கொண்டு, தகுந்த தொரு நாளை ஆவலுடன் எதிர்பார்த்தான். அத்தன்மைத்தாய தீக்கருத்துடன் மன்னன்

இருந்த காலத்தில் ஒரு நாள் கரிகாலன், நுண்ணிய பல சூழ்ச்சிகளால் தான் தங்கி யிருந்த சிறைச்சாலையின் கதவுகளை வன்மையுடன் புடைத் துடைத்து, வாலுருவி விடப் பட்ட வயப் புலியைப் போல் வெளிப்பட்டான். அச்சிறைச் சாலையின் வாயிலைக் காத்திருந்த காவலருட் சிலர், அவனைப் பிடிக்க அவன் வழிக் கெதிரில் விரைந் தோடினர். அக் காவல ரிட மிருந்த தொரு நீண்ட வாளை வன்மையினால் கவர்ந்து, அதை வீசி அவரைத் துண்டங்க ளாக வெட்டி வீழ்த்திக் காற்றினும் கடிதாக விரைந் தோடினான் வீரத் தில் மிக்க உருவப் பஃறேர் இளஞ் சேட்சென்னி பெற்ற இளைய வீரன்.

காவலர் சிலர் ஓடிச் சென்று அரசனை யணுகிக், கரி காலன் சிறையி னின்று ஓடிய செய்தியை யுரைத்தனர். அதைக் கேட்டு மன்னன் திடுக்கிட்டான்; "ஐயோ! கைக் கெட்டியது வாய்க் கெட்டாமற் போயிற்று என்னும் பழ மொழிக்கு யான் இலக் காயினேனே! என்னுடைய எண் ணங்க ளெல்லாம் வீணாயினவே! கரிகாலன் எவ்வளவு மனத் துணிவையும் வீரத்தையும் படைத்தவனா யிருப்பா னோ? இன்றேல், அவன் இங்ஙனம் தப்பித்துக் கொண்டு ஓடிப் போவானோ? இனி, என்னைக் கொல்ல அவன் வழி தேடு வானே! அந்தோ! என் மைந்தரையும் நசுக்கி அரசியலைக் கைக்கொள்ள முயல்வானே! என்னையும், என்னைச் சார்ந்தவரையும் வேருடன் தொலைக்கக் கருவு கொண்டிருப் பானே! அவனுடைய அம்மான், நூலறிவுடன் உலகியல் அறிவையும் சாலப் படைத்த புலவனாவான். அவனுடைய உதவியால் அப்பையன் சிறந்து விளங்கக் காலம் நேர்ந்தது போலும். நான் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத் ததே! என்ன செய்வேன்? இனி, எவ்வாறு அவனைப் பிடித்துக் கொல்லப் போகிறேன்," என்று எ

சற்று நேரம் ஏங்கியிருந்தான்; பின்னர், காவலர் பலரை வர வழைத்துக், கரிகாலன் அந்நாட்டில் எவ்விடத்திருப் பினும் பிடித்து உறுதியாகக் கட்டித் தூக்கி வருமாறு கட்டளையிட்டு அனுப்பினன். அக்காவலரும் காவல னுடைய ஆணையைத் தாங்கி விரைந்து போய்ச் சோழ நாட்டிற் பல விடங்களில் இளையோன் மைந்தனைத் தேட லாயினர்.

கானவர் வலையிற் பட்டுத் தப்பி யோடிய மானைப் போல் விரைந் தோடிய இளைய வீரன், சோணாட்டிற் பல ஊர்கள் தோறும் சென்று மறைந்து திரிந்தான்; புகலிடம் காணு னுய்ச் சிறிது மன வருத்த மடைந்தான். சோழ நாட்டிற் குள் எந்த ஊரிலும் தங்கியிருக்க அவன் விரும்பினன் அல் லன். "இச் சோழ நாட்டில் தங்கி யிருப்பே னுயின், இதை யாளும் மறத்தின் விதையாய மன்னனுல் எனக்குத் துன்பம் நேரக் கூடும். வேறொரு நாட்டை யடைந்து மறைந்து வாழ்ந்திருத்தலே நேர்மைத் தாகும். தக்க உதவி யும் வேளையும் வாய்த்தபோது இந்நாட்டை நாடி என்னைக் கொல்லக் கருதிய சேட்சென்னியை என் வாளுக் கிரை யாக்குவேன்," என்று எண்ணி அவ்விளைஞன், விரைந்து நடந்து, சேரனுடைய தலை நகரமாய கருவூரை யடைந் தான்; ஆண்டுத், தன்னை இன்னுன் என்று ஒருவரும் அறியாவண்ணம் மாறு வேடம் பூண்டு மறைந்து வாழ்ந் திருக்க லானுன்.

ஏய்த்துச் சென்ற சிறுவனைக் கண்டு கொணரப் போன காவல ருடைய முயற்சி பயனற்ற தாயிற்று. அக்காவலர், சில நாட்கள் வரை அச்சோழ நாடு முழுவதும் தேடித் திரிந்து அலைந்தனர்; கரிகாலனைக் கண்டிலர்; வெறிதே திரும்பிச் சென்று அரசனை யணுகிப் பணிந்து, அவனை நோக்கி, "மன்னர் பிரானுரே! நம்முடைய நாடு முழுவ

தும் திரிந்து, ஒவ்வோர் ஊரிலுமுள்ள வீடுகள் தோறும் தேடினோம்; மலைகள், காடுகள், சோலைகள் முதலிய எல்லா விடங்களிலும் போய் நன்றாய் உற்று நாடிப் பார்த்தோம். அந்தக் கரிகாலன் கிடைத்திலன். எங்கள் கண்களிற் பட்டிருப்பானாயின், அவனை நையப் புடைத்துக் கயிறுகளால் இறுகக் கட்டிப் பூமியிற் கிடத்தி இழுத்து வந்திருப்போம். அவன் எங்குச் சென்றானோ? எவ்வாறு மாண்டானோ? அவன் உயிருடன் இருந் திருப்பானாயின், எங்கள் கண்களுக்குப் புலப்பட்டிருப்பானே! நாங்கள் தேடிப் பார்க்காத இடமே இல்லை. ஒவ்வோர் இடத்தின் மூலை முடுக்குகளிலும் போய்ப் பார்த்தோம்," என்று கூறினர். அவற்றைக் கேட்டு அரசன் நம்பினான் அல்லன். இரும்பிடர்த் தலையாருடைய உதவியால் கரிகாலன் சோழ நாட்டைக் கடந்து சென்று, வேறொரு நாட்டில் தங்கி யிருக்கக் கூடும் என்றும், சில வாண்டுகளுக்குப் பின்னர் வெளிப்பட்டுத் தன்னை யெதிர்க்க வருவான் என்றும் எண்ணி வேந்தன் முகவாட்ட மடைந்தான். மன்னனுடைய அகத்தின் குறிப்பை முகத்தால் அறிந்த காவலர், அஞ்சி அப்புறம் அகன்றனர்.

தன்னுடைய தங்கையின் புதல்வன் சிறையை நீத்துச் சென்றஞான்றே இரும்பிடர்த் தலையாரும் உறையூரை விட்டகன்றார். தம்முடைய ஊரை யடைந்து அவர், கரிகாலனுடைய செய்தியைக் கேட்க மிக்க ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார். அம்மைந்தன் கருவூரைச் சேர்ந்து பகைவர் நெருங்கா வண்ணம் தன்னைக் கருத்துடன் காத்துக் கொண்டிருக்கின்றான் என்பதை யறிந்து அவர் உவகை கொண்டார். உடனே அப்புலவர், சின்னாள் வரை அவனைக் காத்திடுமாறு கருவூரிலிருந்த பெரியவர் சிலர்க்குச் செய்தி யனுப்பினர். கலை பல பயின்ற அறிஞர் மொழியைத் தலை

மேற்கொண்டு அப்பெரியவரும், கரிகாலனைக் கண்டு பிடித்துத் தம்முடைய வீடுகளுக்கு அழைத்துச் சென்று, அவனுக்கு அறுசுவை யுண்டி, நல்லாடை யணிகள் முதலியவற்றை அன்புடன் நல்கி யோம்பி வந்தனர். தம்முடைய தங்கையையும் மைத்துனனையும் பதைக்கப் பதைக்க நெருப்பிட்டுக் கொன்றவனும், தம் மருமானைக் கொல்லக் கருதி அடாத செயல்கள் பலவற்றைச் செய்தவனு மாகிய சோழனை வாட்டிக், கரிகாலனுக்குச் சோணாட்டின் அரசுரிமையை யளிக்க ஏற்ற தொரு வழியை யறிய இரவும் பகலுமாய் எண்ணி இரும்பிடர்த் தலையார் ஆராய்வா ராஞர்.

நாட்கள் சில செல்லச் சேட்சென்னி இறந்து பட்டான். அவனுடைய மைந்தர் ஒன்பதின்மரும் அறிவில்லாதவரும், தோள்வன்மை யற்றவரும், ஒற்றுமையைத் துறந்தவருமாய் இருந்தனர். தந்தை யிறந்த பிறகு அப்புதல்வருள் ஒவ்வொருவனும், தான் தான் அரசியலை யடைய வேண்டு மென்று சொல்லி ஒருவனேடு ஒருவன் முரணிச் சண்டையிட்டு நாட்டிற்குத் தீங்கை விளைவிக்கத் தொடங்கினர். அதனுல், உறையூரிற் பெருங் குழப்பமொன்று உண்டாயிற்று. அந்நகரத்தி லிருந்த பெரியவர் பலரும், சேட்சென்னியி னுடைய புதல்வருக்குப் பலவாறு அறிவுறுத்தினர்; ஆயினும், அரசாட்சிக் குரியாரைத் தேர்ந் தெடுத்தல் ஒருவராலும் கூடாமையா யிருந்தது. ஆதலால், அறிஞர் பலரும், சேட்.சென்னியி னுடைய மைந்தர் எல்லாரும் ஒன்று சேர்ந்து ஆராய்ந்து அக்காலத்துக் குரிய வழக்கம் போலப் பட்டத்து யானையை விட்டு அரசுரிமைக் குரியாரைத் தேர்ந் தெடுக்க எண்ணி முடிவு செய்தனர்; அம்முடிவுரைக் கேற்ப நடத்த நல்ல தொரு நாளை யெதிர் பார்த்திருந்தனர்.

உறையூரில் நிகழ்ந்த குழப்பத்தைச் செவி யுற்று இரும்பிடர்த் தலையார் மிக்க களிப்பை யடைந்தார்; தம்முடைய மருமானுக்கு நற்காலம் பிறந்த தென்று உட்கொண்டார்; அவனை அரசனாக்குதற்கு அதுதான ஏற்ற கால மாகும் என்று நினைத்துத் தாம் இருந்த இடத்தை விட்டுப் புறப்பட்டார்; பாண்டிய நாட்டை நாடி விரைந்து நடந்தார்.

அந்நாளில், மதுரையைத் தலை நகரமாகக் கொண்டு பாண்டிய நாட்டைப் பெரும் பெயர் வழுதி என்னும் வேந்தன் ஒருவன், மனு நெறிக் கிணங்க அரசாண் டிருந்தான். அந்தப் பாண்டியன், வாட் போரில் நிக ரற்றவனும் யானை யேறிச் சண்டை செய்தலில் ஒப் பற்ற வன்மை படைத்தவனும், குதிரை யிவர்ந்து அம ராற்றலிற் பெரும் புகழ் படைத்தவனும், மற் போர் புரிவதில் ஒப்பாரும் மிக்காரு மற்றவனு மாவான். கையில் வாளை யேந்தி யானையையூர்ந்து போர்க்களம் புகுவானாயின், அவனைப் பார்த்துப் பகைவர், கூற்றுவனைக் கண்டவரைப் போல் மனங் கலங்கி, அஞ்சி நடுங்கி, விதிர் விதிர்த்து முதுகு காட்டிப் பறந்தோடுவர். அதனால் அவ்வழுதிக்குக் கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதி என்னும் மாண்புடைப் பெயர் ஒன்றை அறிஞர் வழங்கலாயினர்.

அப்பாண்டியர் கோன், கொடையிலும் உயர்ந்தவனா யிருந்தான்; இரப்போர் எந்நேரத்தில் வந்து எதைக் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல், கேட்டவர் விரும்பிய அளவிற்கு மேல் அன்புடன் வழங்கும் அரிய வள்ளல் தன்மையை வாய்த் திருந்தான்; தமிழ்ப் புலவர்களிடம் பேரன்புடையவனாயும், அவர்களுக்கு வரம் பின்றிப் பொருள் முதலியவற்றைக் கொடுத்து ஆதரிப்பவனாயு மிருந்தான். சொன்ன சொல்லை எந்நிலைமையிலும் கடவா

மற் காக்கும் உறுதிப்பா டுடைமையைப் பெற்ற மன்னனும், அவன் ஒருவனே யாவான்.

அழுந்தூர் வேளிர் குலத்துப் புலவருக்கு அவ்வரசன் மிக வேண்டியவனா யிருந்தான். அந்த அறிஞரிடம் அவன் பேரன்பு பூண்டு, தனக்கு நெருங்கிய நண்பராக அவரைக் கொண்டிருந்தான். அப்புலவர் பெருமகனாரை அடிக்கடிப் பார்த்து அள வளாவிப் பேசா விடில் அவ்வேந்தனுடைய மனம், ஒருவாறு ஏக்க முற்றிருக்கும். அதன் பொருட்டு இரும்பிடர்த் தலையார், அப்போதைக் கப்போது அவனிடம் சென்று வருதலை வழக்கமாகக் கொண்டிருந்தார். உரிய காலங்களில் அம்மேதையாருடன் கலந்து பேசி, ஆராய்ந்து பார்க்காமல் யாதொரு செயலையும் பெரும்பெயர் வழுதி செய்தறியான். உற்ற விடத்து அப்பாண்டியனுக்கு ஏற்ற வழி இஃதாகு மென்று எளிதிற் காட்டி யறிவுறுத்தித் தம்மிடம் பெரு மதிப் புண்டாகுமாறு நடந்து கொண்டார் இரும்பிடர்த் தலையார். அதனால் கல்வியிற் சிறந்த அப்பெரியார், தம்முடைய மருமானுக்கு அவ்வரசன் எவ்வாறாயினும் சோணாட்டு அரசுரிமையைப் பகைவரிட மிருந்து கவர்ந்து கொடுப்பான் என்று நம்பி யிருந்தார்; அவ்வரசியலைக் கவர்தற் குரிய நற்காலம் எப்பொழுது வாய்க்குமோ வென்று ஆவலுடன் எதிர்பார்த் திருந்தார். உறையூரில் நடந்த குழப்பத்தை நோக்கித் தம்முடைய எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ள நினைத்துப் பாண்டியனை நாடி அங்ஙனம் விரைந் தேகினார் அப்புலவர்.

அவ்வாறு பேரவா வுடன் விரைந்து சென்ற புலவர், சின்னாட்களுக்குள் மதுரையை யடைந்து, பாண்டியனுடைய அரண்மனையை யணுகினார். பெரும் பெயர் வழுதி அன்புடன் அப்பெரியாரை வரவேற்று, நன்கு உற்றுப் பார்த்து அவரை நோக்கி, "மேதையீர்! உடல்

வருந்த மிக விரைவாக நீர் நடந்து வந்திருக்கின்றீர் என்று யான் உம்முடைய முகத்தையும் உடம்பையும் கண்டு அறி கின்றேன். எதைக் கருதி அங்ஙனம் வந்தீர்? உமக்கு யாதாயினும் என்னால் செய்தாக வேண்டிய வேலை யிருக் கின்றதா? அங்ஙன மிருக்கு மாயின், யான் உடனே செய்து முடிக்கின்றேன். நீர் நாடி வந்ததைத் தெரிவிப்பீ ராக,'' என்று

தம்மிடம் மிக்க அன்புடைய அரசனைப் பார்த்து அவ்வறிஞர், "திண்டோள் வேந்தரே! என்னனைய புலவர் இடையூ றொன் றுடைய ராஞல், உம்மை யன்றிப் புக லிடம் பிறிதுளதோ? அரியதோர் உதவியைப் பெற உம்மை நாடி இப்பொழுது யான் ஈண் டடைந்தேன். சோணாட்டு அரசுக்கு உரிமை பூண்டவன், என்னுடைய மருமானுப கரிகாலன் என்பானே யாவான் என்பதும், அவனைச் சுட்டும் வஞ்சித்துங் கொல்லச் சேட்சென்னி முதலியோர் முயன்று பற்பல சூழ்ச்சிகளைச் செய்து சிறையி லிட்டனா என்பதும் உமக்கு நன்றாய்த் தெரிந் தனவே யாம். தன்னுடைய நுண்ணறிவாலும் வலி வாலும் பகைவரை யேமாற்றி அவ்விள வரசன், சிறையி னின்று தப்பி போயினன்; இப்பொழுது, கருவூரில் மாறு வேடத்துடன் வாழ்கின்றான். எல்லாக் கலைகளையும் அவ னுக்கு நன்றாய் யான் கற்பித்துள்ளேன். அரசியலை யேற்றுச் செவ்வனே நடத்துதற்குரிய வயதையும், அறிவை யும், தோள் வன்மையையும் அம்மைந்தன் படைத்திருக் கின்றான். அவனுக்குச் சொந்தமாகிய சோழ நாட்டு அரசியலை அன்பு கூர்ந்து நீர் பெற்றுத் தர வேண்டுகின் றேன். உம்முடைய மைந்தனைக் கருதி அப்புதல்வனை கன்னிலைமைக்குக் கொண்டு வரல் உம்முடைய கடமை யாகும். அவனைக் காக்கக் கூடியவர் உம்மையன்றி வேறு

எவரும் இலர். உரிய காலத்தில் அவனுக்கு உதவி செய்வதாக நீர் முன்னம் என்னிடம் கூறியுள்ளீர். உலகம் பிறழ்வதாயினும் சொன்ன சொல்லி னின்று நீர் மாறி நடக்க மாட்டீர் என்பதை யான் நன்கு உணர்வேன். ஆயினும், என் மருமானுக்கு நீர் கை கொடுத்துக் காத்தற் குரிய காலம் இதுவே யாகும். சோழ நாட்டிற் குரிய அரசனைத் தேர்ந்தெடுத்தலிற் சேட்சென்னியி னுடைய மைந்தர், ஒருவரோ டொருவர் மாறுபட்டுப் பெருங் குழப்ப மொன்றை உறையூரில் இப்பொழுது உண்டாக்கி யிருக்கின்றனர். ஆதலின், விரைவில் உறையூரை யடைந்து, மதியற்ற அம்மைந்தருடைய செருக்கை யடக்கிக் கரிகாலனுக்கு அரசாட்சியை யளிக்க நீர் மனம் பற்ற வேண்டுகின்றேன். உம்முடைய புகழ் இந்நில வுலகத்தில் என்றும் ஓங்குவதாக. எஞ்ஞான்றும் இறைவன் அருளால் வெற்றியும் இன்பமும் உம்மை நாடுவன வாக," என்று சொல்லி வேண்டினர்.

புலவர் மொழிகளைக் கேட்டுப் பாண்டியன், உள மிக மகிழ்ந்தான்; கரிகாலனுக்குச் சோணாட்டு அரசியலைக் கவர்ந்து கொடுக்க உறையூரை நாடிச் செல்ல விரும்பினன். அப்பொழுதே, தன்னுடைய அமைச்சர் தண்டத் தலைவர் முதலியோரை வரவழைத்து அவன், பெருஞ் சேனைகளுடன் புறப்பட்டு உறையூரை நோக்கிச் செல்லு மாறு கட்டளை யிட்டான்; உயர்ந்த ஆடை அணிகளை யணிந்து கையில வாள் கொண்டு, வானுகிர் மடங்கலை யொப்ப யானை மீது ஏறினன்; புலவரையும் உடன் கொண்டு பெருந் தானை யுடன் உறையூரை நாடிச் சென்றான்.

அந்நகரத்தை யடைந்த வுடன் பெரும் பெயர் வழுதி, சோழனுடைய புதல்வர், தம்முள் மாறுபட்டுத் தம்முடைய பட்டத்து யானையை அழகு படுத்தி விடுத்து, அக்களிறு கொணரு மவனை அரசனாக ஏற்றுக் கொள்வதாய் ஏற்பாடு

அந்நிகழ்ச்சியைக் கண்டு அந்த நகரத்து மாந்தர் அனைவரும் பெரு வியப் பெய்தினர்; அவ்வாரணத்தின் அருங் குணத்தையும் செயலையும் மெச்சிக் கொண்டாடினர். பெரும் பெயர் வழுதி பெரு மகிழ்ச்சி யடைந்தான். இரும்பிடர்த் தலையார், உள்ளடங்கா உவகை கொண்டார்; தேவிற் சிறந்த திருமால் திருவடிகளுக்கு ஆளானவரைப் போல் இன்புற்றுச் சற்று நேரம் மெய் மறந்து நின்றிருந் தார்; ஓடிப் போய்ப் பாண்டியனைத் தழுவிக் களித்தார்; தன் மருமானை அரசனாகத் தேர்ந் தெடுத்து வந்த குஞ்சரத் தின் புழைக்கையைத் தழுவி முத்தமிட்டார்; "படியை மடி யகத் திட்டானும், முழு நிலம் மூக்காற் கடந்தானுமாட என்னை யாளுடைய தேவர் தேவனார் திருவருளை அன்று தட நெடு மடுவிற் பெற் றுய்ந்த கரிக்குலத் தரசன் நீ தானோ? அன்றி, அம்மாகளிற்றின் உயர் குலத் துதித்த வேறொரு வேழமோ நீ? யான் அறியேன்! ஆயினும் உன்னைப் போற்றற் குரியவனே யாவேன் யான். இதோ உன்னை வணங்குகின்றேன்," என்று அந்தத் தும்பியை நோக்கிக் கூறிப் பணிந்தார்; விரைந் தோடிக் கரிகாலனைத் தம் மார்புடன் அணைத்து முத்தமிட்டு மகிழ்ந்தார்; செய லற்று நின்றார்.

பட்டத்து யானையின் செயலைக் கண்கூடாகக் கண்ட சேட்சென்னியி னுடைய புதல்வர் வெட்கமும் துக்கமுஞ் சுமந்தவ ராயினர்; தம்முடைய பகைவனாகிய கரிகாலனைப் பார்த்த வுடன், மெய்யிற் புண் புக, உட்கி உழைக்குட் வேழத்தைப் போலாயினர்; வாளரின் இறுதியில் காலனைக் கண்ட உயிரை யொப்பக் கலங்குவ ராயினர்.

கரிகாலனைக் கரி கொணர்ந்த செய்தி, காட்டுத் தீயைப் போல் விரைவில் நாடெங்கும் பரவிற்று. பல திறத்து மக்களும் ஆங்காங்குத் திரள் திரளாகக் கூடிப் பலவாறு

பேசலாயினர். சிலர், "ஊழ்வினைக்குத் தக்கவாறு கடவுளால் அருளப்பட்ட ஒருவருடைய இனிய வாழ்வினை வேறொருவர் எங்ஙனம் கெடுக்கக்கூடியவ ராவர்? கொடிய வனாகிய சேட்சென்னியி னுடைய விரகுகளெல்லாம் பயன்பட்டில வாயின. தாய் வயிற்றி லிருந்து தாய மெய்திப் பிறந்தவனே செங்கோலைக் கைக்கொள்ள லானான்," என்றுரைத்துக் களித்தனர். வேறு சிலர், "கடவுள் ஒருவர் உளர் என்பதன் உண்மையைச் சோழருடைய பட்டத்துக் களிற்றால் அறிவிலரும் நன்கு அறிய லாயினர். எல்லாம் வல்ல இறைவருடைய திருவருளுக் கெதிரில் யாருடைய சூழ்ச்சி தான் பயன்படும்? சேட்சென்னியி னுடைய செயல்களெல்லாம் கல்லின் மேற் போட்ட குடத்திற்கு ஒப்பாயின," என்று கூறினர். "விதி வலிது. ஊரெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து வெறுத்தாலும் போமோ விதி என்னும் ஆன்றோர் மொழிகளுக்கு மாறுபட நடப்பதும ஒன்றுண்டோ," என்று மொழிந்தனர் ஒரு கூட்டத்தினர். மாந்தர் சிலர், "நல்லதைச் செய்தவர் என்றும் நன்மையே யடைவர். தீயதைச் செய்தவர் எப்பொழுதும் துன்பமே நுகர்ந்து அழிவர் என்னும் மூதறிஞருடைய சொற்களுக்கிணங்கவே இவ்வுலகத்திற் பிறந்தார் ஒவ்வொருவரும் இன்ப துன்பங்களை யடைவார். தான் முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனால் கரிகாலன் இப்பொழுது இந்நாட்டை யரசாளும் உயர்ந்த நிலைமைக்கு ஆளானான்," என்று மொழிந்தனர்.

பெரியார் பலர் ஒன்று சேர்ந்து, கரிகாலனுக்கு முடிசூட்ட நல்ல தொரு நாளை யாராய்ந்து குறிப்பிட்டனர்; நாடெங்கும் அச்செய்தியை எண்ணிறந்த ஏவலர்களை யேவித் தெரிவித்தனர். முடி சூட்டக் குறித் தோதிய நாளிற் சோணாடு முழுவதும் அமராவதியைப் போல் மிக்க

அழகுடன் விளங்கியது. உறையூரின் பொலிவை, இருந்த
வாறு எடுத்தியம்பத் தொடங்கினல் நாட்கள் பல செல்
லும். கரிகாலனுக்கு முடி கவிழ்த்த நாளில் இருந்த உறை
யூரின் அழகைக் கண்டுதானே ஒப்பற்ற புலவர் பெருமானா
ஒருவர், ஊரெனப்படுவது உறையூர் எனச் சிறப்பித்துக்
கூறிப் போந்தார்? அந்நகரத்தி லிருந்த அரண்மனையையும்
அரசவையையும் சுதன்மையினும் முதன்மை பெறப் பலர்
அலங்கரித்தனர். எதிர் பார்த்திருந்த நல்வேளை வந் தெய்
திய போது அமைச்சர், பண்டிதர், புரோகிதர் சேனைத்
தலைவர் முதலியோர் புடை சூழக் கரிகாலன், அரசற் குரிய
உயர்ந்த ஆடை அணிகளை யணிந்து அரசவை போந்து,
மஞ்ச மேறி மணித் தவி சேறினன்; மன்ன ரெல்லாரும்
போற்றத்தக்க மாண்புடன் அமரேசனே டொப்ப அமர்ந்
தான். அறிஞர் பலர் செய்யவேண்டிய நற் கருமங்க
ளெல்லாவற்றையும் முறையே செய்து, கடவுளை வழிபட்டு,
மறை மொழிந்து கரிகாலனுக்கு மணி முடி சூட்டி ஆசி
மொழிந்தனர்.

"விண்ணவர் இவ்வொலியைக் கேட்டு மதிமயக்க
மடைவர்; செவிடராவர்" என் றெண்ணி மக்கள் பலர்,
ஐயுறத் தக்கவாறு பேரோசை யுடன் முழங்கிய பலவகை
மங்கல வாத்தியங்களுக் கிடையிற், சுடர் விட்டெரிக்கும் நன்
மணிகள் பலவற்றாலாய முடியைத் தலையிற் புனைந்து, கையிற்
செங்கோ லேந்தி, யாளிகள் சுமைந்த பொன் னணையின் மீது
சிறக்க வீற்றிருந்த கடி திளைஞனாகிய மன்னன் கரிகால
னுடைய முகப் பொலிவையும், உடல் வனப்பையும், அவற்
றிற் கேற்ப வீற்றிருந்த அவனுடைய பெருந் தன்மையையும்
கண்டு வியப்பும் விருப்புங் கொள்ளாதார் ஒருவரு மிலர்.
கீழே விழுந்து பலர், அவனுடைய இணை யடிகளை வணங்கி
னர். மாந்தர் பலர், தொழுது நின்றனர். சிற்றரசர் அனை

வரும், பணிந்து கை கட்டி நின்றனர். கணக் கற்ற பெரியார், ஆசி கூறி வாழ்த்தினர். எண்ணிறந்த பண்டிதரும் பாவலரும் நாவலரும், தனித் தனியே பலவகைப் பாக்களால் வாழ்த்தினர். வாய் நல்லார் பலர், நல்ல மறைகளை யோதினர். இள மங்கையர் பலர், இன்னிசைக் கருவிகளுடன் நல்லிசைப் பாட்டுக்கள் பலவற்றைப் பாடினர். மாதர் பலர் ஆடினர். "துவரை பம்பதியை யாண்ட கண்ணனைத் துளவத் தாமக் கண்ணனை இம்மன்னன் போலும்," என்று வியந்து கூறி மகிழ்ந்தார் அறிஞர் பலர்.

சோழ வளநாடு முற்றிலும் அந்நாளிற் பெரியதொரு திருவிழாக் கொண்டாடப்பட்டது. அரண்மனையிற் கரிகாலனைச் சார்ந்தவர், பலவகைத் தான தருமங்களை வழங்கினர். அந்நாட்டு மக்கள் அனைவரும், கரிகாலன் நீடூழி இனிதாக வாழ்ந் திருந்து செங்கோல் செலுத்த அருள் புரியுமாறு கடவுளை வேண்டித் துதித்தனர். பல வளங்களும் நிறைந்த அந்நாட்டி லிருந்த எல்லாக் கடவுளர் கோயில்களிலும் திருவிழாக்கள் மிக்க சிறப்புடன் எல்லாராலும் நடத்தப்பட்டன. ஒவ்வோர் ஊரிலும் இருந்த பெரியார் பலரும், ஏழைகள் பலர்க்கும் உண்டியளித்தனர்; நல்லாடைகளை யுதவினர்; பணம் கொடுத்தனர். பொன்னி நாடு முழுவதும் அன்று உவகை என்னும் உவரி புக்கிருந்தது.

---

## பகுதி - ௪

## குலவித்தை கல்லாமற் பாகம் படல்

செங்கோல் கைக் கொண்ட கரிகாலன், சிறந்த இளமை, நிறைந்த கல்வி, அளவற்ற தோள்வன்மை, எதற்கும் அஞ்சா வீரம், காண்பவர் கண்களைக் கவரும் உடல் வனப்பு, வாள் வில் முதலியவற்றைக் கொண்டு

போர் புரிதலில் நிகரற்ற திறமை முதலியவற்றுடன் பொலிந்து, சோணாட்டைச் செவ்வனே காத்து வந்தான். இரும்பிடர்த் தலையார் எந்நேரமும் அவ்வரசனுட னிருந்து, அரசியலை நன்முய் நடத்துதற் குரிய வழியில் அவனைச் செலுத்தி வரலானார். தன்னுடைய மாமனாருடன் கலந்து ஆராய்ந்து பார்க்காமல் எதையும் அவன் செய்திலன். அரசர்க் குரிய ஆறு அங்கங்களையும் குறை வின்றி அம் மன்னன் படைத் திருந்தான். தனக்கு உதவியா யிருத்தற்கு ஐம்பெருங்குழு, எண்பேராயம் முதலிய அவைக் களங்களையும் அவன் ஒழுங்காகப் பெற்றிருந்தான். தீரா வழக்கையும் எளிதில் தீர்க்க வல்ல பேரறிவு படைத்து, நடு நிலைமையி னின்று சற்றும் தவறுத லின்றி அறத்தைப் பாதுகாத்துப், பகை கொலை களவு முதலிய தீச்செயல்கள் தன்னுட்டில் யாண்டும் நிகழா வண்ணம் கடிந்து, ஏழைக ளிடம் கண்ணோட்ட முடையவனு யிருந்து, அரச நீதிக் கிணங்க நாட்டை யாளலானன் அச் சீரிளம் சோழன்.

அவ்வேந்தனுடைய அம்மானார், இரவும் பகலும் முயன்று, நிறைந்த செல்வமும் செல்வாக்கும் படைத்து அந்நாட்டி லிருந்த மக்கள் பலரைத் தம் மருமானுக்கு அன்புடைத் துணைவரா யிருக்கச் செய்தார்; பெரும் படைகளைத் திரட்டித் தந்தார்; வல்லமையில் மிக்க பல தண்டத் தலைவரைத் தேர்ந்தெடுத் தமைத்தார். அப்புலவருடைய உயிர் உடல் பொருள் ஆகிய மூன்றும், எப்பொழுதும் கரிகாலனுடைய நல் வாழ்வினைக் கருதியே உழைத்து வந்தன. புலவர் கைப்பட்ட மைந்தன் புனித னன்றே?

கரிகாலனுடைய ஆளுகைக் குட்பட்ட மக்கள் அனைவரும், யாதொரு குறைவு மின்றி நாளுக்கு நாள் இன்பப் பெருக்கி லாழ்ந்து வாழ்ந் திருந்தனர். அவனுடைய அரசியல் திறமையை யறிந்து அக்காலத் திருந்த அரசர்

எல்லாரும், மிக்க வியப் படைந்து புகழ்ந்தனர். நாடோறும் பற்பல பெரியார் அம்மன்ன னுடைய அத்தாணி மண்டபத்தை யடைந்து, இளைஞனாகிய அவ்வரசன் நீதி செலுத்தும் ஒழுங்கைப் பார்த்து வியந்து புகழ்ந்து, ஆசி கூறிச் செல்லல் வழக்கமா யிருந்தது. அவ்வரசனுடைய அருங் குணத்தையும், முறை செய்து நீதி செலுத்துதலில் அவன் படைத் திருந்த தெளிந்த அறிவின் திறமையையும், சொல் வன்மையையும், உயர்ந்த செயலின் தன்மையையும் நேரிற் கண்டும், கண்கூடாகக் கண்டார்பால் கேட்டும் மன மகிழ்ந்து புகழாத மாந்தர், அந்நாளில் இவ்வுலகில் ஒருவரும் இரார். எந்நாட்டிலும் அந்த வளவர் மகனார் புகழ் பரந்து நிறைந் திருந்தது.

ஒப்புயர் வற்ற திறமை யுடன் அம்மைந்தன் நாடாட்சியை நடத்தி வந்தபோது ஒரு நாளில், அச்சோழ நாட்டிலிருந்த கல்வி கேள்விகளில் நிறைந்த புலவர் இருவர், ஒருங்கே இருந்து தாம் பயின்ற கலைகளின் பொருளை யாராயு மிடத்து, யாதோ ஒரு துறையில் ஒருவருக் கொருவர் மாறுபட்ட கருத்தை யடைந்தனர். அதனால் அப்புலவர் இருவரும், தாம் அடைந்த மாறுபட்ட கொள்கைகளைக் கேட்டு ஐயத்தைப் போக்கி முறை செய்ய வேண்டிக் கரிகாலனுடைய அரசவையை யடைந்தனர்; ஆண்டு அரியணை மீது வீற்றிருந்த அரசனுடைய இளம் பருவத்தைக் கண்டு அருவருப்புக் கொண்டனர்; "ஓ! இந்த மன்னன் கடி திளைஞனா யிருக்கின்றானே! நம்முடைய வழக்கைக் கேட்டு மனத்துட் கொண்டு இவன், எவ்வாறு ஆராய்ந்து தக்க நெறிப்பா டுடன் தீர்க்கப் போகின்றான்? இவனுடைய வயதுக்கும் நம்முடைய வழக்குக்கும் சிறிதும் பொருத்த மிலது. நாம் அடைந்த மாறுபாட்டை உள்ளவாறு உணர்ந்து முறை செய்யக் கூடியவர், இயற்கையாக

அமையப் பெற்ற மதி நுட்பத்துடன் செயற்கையால் பெறும் நுண்ணிய நூலறிவையும் சாலப் படைத்தவரா யிருத்தல் வேண்டுமே. இந்த இளைஞனிடம் நம்முடைய வழக்கை யுரைப்பதால் பயன் யாது உளது? ஆதலால், இவ்விடத்தை விட்டு அப்புறம் செல்லலே நல்ல தாகும்,'' என்று தம்முட் கொண்டு, நாடி வந்த செய்தியைச் சொல்லாமலே அரசவையி னின்று திரும்பிச் செல்லத் தொடங்கினர்.

அக்கல்வி யாளருடைய கருத்தைத் தன்னுடைய கூரிய மதியால் குறிப்பாக அறிந்த கரிகாலன், உடனே அவ்விருவரையும் அழைத்து, அரசவையில் ஓரிடத்தில் உட்காருவித்துப், பிறி தொரு முதியோரை வைத்து முறை செய்வான் போல் நடித்துச், சரேலென அரசவையை விட்டு நீங்கி அரண்மனைக்குட் சென்றான்; நரைத்த தலைமயிர் முடியையும் தாடியையும் பொருத்த முறத் தரித்து, முதியோன் வேடம் பூண்டு கையில் நீண்ட தொரு தடியைக் கொண்டு, விரைவில் அரசவைக்குத் திரும்பி வந்து தன் பொன்னணை மீது அமர்ந்தான். அவ்வேடத்தைக் கண்டு ஏமாந்து முறை வேண்டி வந்த புலவர் இருவரும், மிக்க மன மகிழ்ச்சி யடைந்தனர்; முறை செய்ய வந்து உட்கார்ந்த போலிக் கிழவனிடம் தம்முடைய வழக்கை யுரைத்தனர். அதைக் கேட்டு அவன், தன் அவைக்கண் இருந்த ஐம்பெருங் குழு, அமைச்சர், புலவர் முதலியோருடன் கலந்து பேசி யாராய்ந்து பார்க்காமலே வழக்கை யுரைதத்தவ ருடைய சொற்களை யாராய்ந்து, அந்த அவைக்கண் இருந்தவர் அனைவரும் வியப்புற உலகியலினும், பழக்கத்தினும், நீதியினும் முதிர்ந்த நீதியாளரைப் போல் உரை முடிவு செய்தான்.

மாறு வேடம் பூண்ட மன்னன் பகர்ந்த உரைமுடிவைக் கேட்ட புலவர் இருவரும் அகமிக மகிழ்ந்தனர்; அம்முதியோனை நோக்கி, "நீதி செலுத்தும் நெறியிற் பழுத்த பெரியீர்! உம்மைப் போன்ற பேரறிவாளர் ஒருவரை இந்நாள் வரை இவ்வுலகத்தில் யாண்டும் யாம் கண்டிலேம். நீர் செய்த உரை முடிவே தக்க நெறிப்பா டுடையதாகும். உம்முடைய பெருந் தன்மையை யாம் என்னென்று சொல்லிப் புகழ்வேம்," என்று வியந்து கூறிப் பேருவகை யுற்றனர். உடனே கரிகாலன், தான் கொண்டிருந்த கிழ வேடத்தை அந்த அவையில் அமர்ந் திருந்தவர் எல்லாரும் பார்க்கக் களைந் தெறிந்தான்; முன்னர் இருந்தவாறே இளைஞனாய்ப் புன்சிரிப்புடன் அரியணைமீது அழகுடன் வீற்றிருந்தான். அரசனுடைய சூழ்ச்சியை யறிந்து அரசவையில் இருந்தவர் அனைவரும், இறும்பூ தெய்தினர்; நகைத்தனர்; களித் தார்த்தனர்; பலவாறு மன்னனைக் குறித்துப் புகழ்ந் துரையாடினர்.

வளவர் பெருமகனார் செய்த, காலத்துக்கேற்ற சூழ்ச்சியைக் கண்டு வழக்கைத் தீர்த்துக்கொள்ள வந்த புலவர் இருவரும், வியப்பும் வெட்கமு மடைந்து, "ஆ! ஆ!! சோழர் குடியின் பெருமையை என்னென்று கூறலாம்? அக்குடியிற் பிறந்த மிக்க இளம்பருவத்தையுடைய இவ்வரசனுடைய அறிவின் திறமையை எதற்கு ஒப்பிட்டுச் சொல்லலாம்? பகலவன் வழித் தோன்றிய இவனுடைய குலத்துப் பெருமையைச் சிறிதும் கருதிப் பாராமல் நாம், முன்னர் இவனிடம் வெறுப்புக் கொண்டோமே. நம்முடைய எண்ணத்தை எவ்வாறோ அறிந்து நம்மை யழைத்துத், தக்கவாறு நமக்கு அறிவு புகட்டித் தன்னுடைய குலப் பெருமையை உலகம் நன்கு அறிய இன்று இவ்விளைஞன் செய்த சூழ்ச்சித் திறமைதான் என்னே! நம்முடைய அறி

வினத்தைப் போக்கி நம்மை யடக்கி யாள இவ்வரசன் மேற்கொண்ட தொழிலினுடைய தன்மைதான் என்னே!

ஆ! நம்முடைய மதியீனத்தையும் மன்னனுடைய மதி நுட்பத்தையும் நினைக்க நினைக்க நெஞ்சு புண்ணுகின்றதே! மீன் குட்டிக்கு நீந்தவும், புலிக் குட்டிக்குப் பாயவும் கற்பிப்பார் ஒருவர் உளரோ? சோழர் குடியிற் பிறந்தார்க்கு நீதி செலுத்தும் திறமை இயற்கையாக அமைந்து கிடப்ப தொன்றுகுமே. நாம் அதை யெண்ணிப் பாராமல் மோசம் போனேமே; ஏமாந்து நின்றேமே. நம்மைக் கண்டு மன்னன் சிரிக்க லானுனே! குலவித்தை கல்லாமற் பாகம் படும் என்னும் சான்றோருடைய பழமொழி, எக்காலத்தும் பொய்த்துப் போகாத தாகு மென்பதை இவ்வரசன் இப் பொழுது நன்கு விளக்கிக் காட்டினுன். ஒவ்வொருவருக்கும், தாம் தாம் பிறந்த குலத்திற் கேற்ற விச்சைகள் கற்பதற்கு முன்பே செம்பாக முளவாம் என்பதை இவ்வரச னுடைய செயலால் இன்று உலகத்தினர் அனைவரும் உள்ளங்கை நெல்லிக்கனியென உணரலாயினர். மேலும், உருவத்தைக் கண்டு எதையும் எள்ளப்படாது என்னும் அறிஞருடைய கொள்கையின் உண்மையையும் எல்லாரும் தெள்ளிதின் அறிய லாயினர். இந்த இளைஞனே அறிவுடை அரச னுவான். நீதி செலுத்தும் வன்மையில் இவனைப் போலக் கைதேர்ந்த ஓர் அரசன், எங்கும் இரான்," என்று பல வாறு எண்ணி வியந்து புகழ்ந்தனர்; கீழே விழுந்து கரி காலனுடைய அடியிணையை வணங்கினர்; தம்மை மன்னித் தருள வேண்டினர்; அரசனிடம் விடை கொண்டு அர சவையை நீத்து வெளியேறினர்.

சற்று நேரம் கழிந்த பின்பு அற்றைப் பொழுது கூடிய அரசவை, அனைவர்க்கும் பெரு மகிழ்ச்சி யுண்டாக்கி நன்ருய் முடிந் தேறியது. உயர் வணையை நீத்து மன்னன்,

பெரு மிதத்துடன அரணமனையை நாடி நல்லார் ஓகை விளம்பத், தோகையர் மனங்கள் தன்னை நாட, மடங்கலும், விடையும், பொன்னுகமும், நாகமும் நாண நடந்தான். அவையி லிருந்தவர் அனைவரும், தம்முடைய இருப் பிடங் களை நோக்கிச் சென்றனர்.

அரசவைக்கண் நிகழ்ந்த செய்தி நாடெங்கும் விரை விற் பரவியது. அதைக் குறித்து மக்கள் பலரும், பலவாறு வியந்து பேசிக் களித்தனர்; கரிகாலனிடம் மிக்க விருப்பங் கொண்டனர்; அவனல் சோழர் குடிப் பெருமை, உலக முற்றும் பரவி நிறைந்திடு மென்றும், சோணுடு பல வகை வளங்களையும் நிரம்பப் பெற்று உயர்ந்த தொரு நிலைமையை விரைவில் எய்து மென்றும், அவ் விளங்கோன் உலக முழு வதையும் சின்னுளில் தன் ஆளுகைக் குட்படுத்திக் கொள் வான் என்றும் பலதிறப்படக் கூறி மகிழ்ந்தனர்.

நாளுக்கு நாள் கரிகாலனுடைய புகழ் உலகெங்கணும் நிறைந்து மேம்பட்டு வந்ததைக் கண்ட அவனுடைய மூத்த தந்தையா ருடைய புதல்வராகிய பகைவர், அவ்வேந்த னிடம் மிக்க பொருமை கொண்டனர். தம்முடைய தந்தை யிழைத்த தீமைகளை யுன்னி அவன், தம்மைத் துன்புறுத் தத் தொடங்குவானே என்று எண்ணியும் அவர் அஞ்சி யிருந்தனர். கரிகாலன் கொடுவரிக் கொடியையும், புலி இலச்சினையையும், ஆத்தி மாலையையும் தனக் குரியன வாய்க் கொண்டிருந்தான். அப்புலிக் கொடியைக் காணுந் தோறும் அப்பகைவர், உண்மையிற் புலியைத் தமக் கெதி ரில் வரக் கண்டவரைப் போல் நடுக் குற்று விரைவில் அப் புறம் அகன்று போவரா யிருந்தனர். கரிகாலனுக்கு எவ் வாறு கேட்டை விளைவிக்கலா மென்று நாடோறும் ஆராய் தலே, அவருடைய தொழிலா யிருந்தது. கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே என்பதற் கொப்ப அப்பகைவர், அறி விழந்து வாழ லாயினர்.

## பகுதி - ரு

## காவிரிப்பூம் பட்டினம்

கரிகாலனுக்குப் பெருந் துணை வலிமையைச் சேர்த்துக் கொடுக்க முயன்று வந்த அவனுடைய அம்மானார், அரிய வேறோர் எண்ணத்தை மனத்திற் கொண்டார். தற்போது சீகாழி தாலூகாவிலுள்ள நாங்கூர் என்னும் இடம், அந்நாளில்வேளிர்களுக்குரியதொருபேரூரா யிருந்தது. அங்கிருந்த வேளிர் கூட்டத்தினர், வன்மையில் மிக்க தண்டத் தலைவராயும், உழுவித் துண்ணும் செல்வராயு மிருந்தனர். அவ்வேளிர்களைத் தம் மருமானுக்குத் துணைவர்களா யிருக்கச் செய்யக் கருத்துட் கொண்ட இரும்பிடர்த் தலையார், அந்த வேளிர்களுக்குத் தலைவனா யிருந்த ஒருவன் பெற்றெடுத்துச் சீருடன் வளர்த்து வந்த ஓர் அழகிய கன்னியை மணம் பேசிக் கரிகாலனுக்கு விதி முறைப்படி நன்னாளில் மன்றல் செய்வித்தார்.

தன் தந்தை அழுந்தூர் வேளிடம் மகட் கொண்டான் போலக் கரிகாலனும், நாங்கூர் வேளாளரிடம் பெண் கொண்டான். அம்மானும் அவனும் தம்முடைய மாளிகையில் இருந்து, அன்பும் அருளும் உடையவராய்ச் சுற்றத்தினரைத் தழுவியும், விருந்தினரைப் பேணியும், அறவோர்களைப் போற்றியும், ஏழைகளுக்கு வேண்டுவன கொடுத்தும் இனிதாக இல்லறத்தை நடத்தி வந்தனர்.

நாங்கூரிற் பெண் கொண்டதால், அவ்வூரி லிருந்த வேளிர்களோடு தன் அம்மானுருடைய இனத்தைச் சேர்ந்தவர்களாகிய அழுந்தூர் வேளிர்களும் கரிகாலனுக்கு நெருங்கிய உறவினர்களும் துணைவர்களு மானார்கள். பூவை வண்டினம் மொய்த் திருப்பதைப் போல் அந்த

வளவர் மகளை அவ்வேளிர்களெல்லாரும் சூழ்ந்து, வேண்டுவனவற்றை அப்போதைக் கப்போது செய்து, உற்ற துணைவர்களா யிருந்து காத்து வந்தார்கள். அவ்வேளிர்களெல்லாரையும் கொடை முதலிய வற்றால் கரிகாலனும் மகிழ்வித்து வந்தான். நாங்கூர் வேள் மகளை யன்றி வேறு சில மாதரையும் பின்னர் கரிகாலன் மணந்து இன்புற்றிருந்தான். அந்நாங்கூர் வேண்மாளிடம் கரிகாலனுக்கு ஓரே பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு ஆதிமந்தி எனப் பெயரிட்டுப்பெற்றோர் அன்புடன் பாராட்டி வளர்த்து வந்தனர்.

யாதொரு வேலையையும் இடம் பொருள் ஏவல் என்பவற்றைக் கருதி நன்றாய் ஆய்ந்து பார்த்துச் செய்யத் துணியும் உயர்ந்த தன்மையையும், தக்க மனத் துணிவையும், ஏற்ற ஆற்றலையும் படைத்திருந்த கரிகாலன், தன் ஆளுகைக் குட்பட்ட மக்கள் கல்வியிலும், வேளாண் வாழ்க்கையிலும், வாணிகத் துறையிலும் எந்நாட்டினரினும் மேம்பட்டு விளங்க வேண்டு மென்னும் நன்னோக்கத்தைக் கொண்டான். அவன் அன்றோ உலக பாலரோ டொத்த உண்மை அரசனாவான்? நாடு மேன்மை யடைந்து இன்பத்துட னிருப்பதற்குக் கல்வியும் வேளாண்மையும் வாணிகமும் இன்றியமையாதனவாம் என்னும் உண்மைத் துறையினைப் பேரறிவாளனாகிய அவ்வரசன் நன்கு உணர்ந்தான். தன்னுடைய உயர்ந்த எண்ணத்தை நிறை வேற்றற் குரிய தக்க வழிகளைப் பற்றி அவன், சின்னாள்வரை ஆழ்ந்த கருத்துடன் ஆராய்ந்து பார்த்தான். தான் கொண்ட நோக்கத்தை இடையூறின்றி முடித்தற்குக் காவிரிப்பூம் பட்டினம் தக்க இடமாகு மென்று அவனுடைய மனத்திற் பட்டது. அதனால் அம்மன்னன், உறையூரை யொழித்துக் காவிரிப்பூம் பட்டினத்தைத் தலை நகரமாகக் கொண்டான்; அவ்

விடத்தில், தன்னுடைய கருத்தை முடித்தற் குரிய துறை களிற் பெரு முயற்சி மேற்கொண்டு உழைத்து வந்தான்.

காவிரி நதி கடலொடு கலக்கு மிடத்தில் இயற்கைப் பொலிவுடன் இருந்த காவிரிப்பூம் பட்டினம், படைப்புக் கால முதல் சோழர் குடியிற் பிறந்த மன்னர் தென்னாட்டை யாண்டிருந்த காலம் வரை மிக்க சிறப்புடன் இருந்ததொரு பெரிய நகர மாகு மென்று பல நூல்களால் தெரியக் கிடக்கின்றது. சோழர் நீங்க மற்றைத் தமிழ் மன்னருக்குத் தலை நகரங்களா யிருந்த மதுரை, வஞ்சி முதலிய நகரங்கள், காவிரிப்பூம் பட்டினத்தைப் போல் அவ்வளவு முன்னேற்ற மடைந்து பல வளங்களையும் நிரம்பப் பெற்றிருந்தனவாய்க் கூறப் போதிய சான்றுகள் இல்லனவாம். அழகில் உயர்ந்தது அமராவதி என்றும், செல்வத்திற் சிறந்தது அளகாபுரி என்றும் அவ்விரண்டு நகரங்களுள், ஒவ்வொன்றை ஒவ்வொரு வகையில் மேம்பட்டதாய் அறிஞர் கூறுவர். ஆனால் காவிரிப்பூம் பட்டினமோ, எல்லா வகையினும் சிறந்திருந்த தோர் இணையற்ற பெரிய நகர மாகும் என்பதைப் பண்டைக் காலத்தின் உண்மைச் செய்திகளை உள்ளவாறு உரைப்பதில் தம் நேரிலாச் சங்க நூல்கள் பலவற்றானும் நன்கு அறியலாம். சற்றேறக் குறைய இரண்டாயிர மாண்டுகளுக்கு முன்னர் இருந்ததாகத் தெரிகிற கடைச் சங்க காலத்தில் இருந்த புலவர் பெரு மக்களுள் ஒருவரும், அப்பட்டினத்தின் பெருமையைத் தாம் இயற்றிய நூல்களுள் ஏற்ற இடங்களிற் சொல்லாமல் விட்டனர் அல்லர். அக்காலத் திருந்த அறிவுடைப் புலவர் அனைவரும், ஒப்பற்ற உயர்ந்த நிலைமையில் இருந்ததொரு மா பெரும் பழைய நகர மாகு மென்று அந்தப் பட்டினத்தின் பெருமையைப் பற்றிச் சிறப்பித்துக் கூறிப் போந்தமையின், அஃது எக்காலில், எங்ஙனம் உண்டாயிற்று என்னும் வினாவிற்கு விடை பிறக்கக் கூடாமையை யுணர்க.

யமதங்கி முனிவருடைய மைந்தராய பரசுராமர், பகலவன் மரபிலுதித்த மன்னர் எல்லாரையும் கருவறுக்கத் தொடங்கிய காலத்தில் அக்காவிரிப்பூம் பட்டினம், ஆதித்தன் வழித்தாய சோழர் குடியிற் பிறந்த காந்தமன் என்னும் அரசனுடைய ஆளுகையின் கீழ் மிகச் சிறந் திருந்ததாகத் தமிழ் மாதின் அணிமேகலையாய மணிமேகலை என்னும் நூலால் தெரியக் கிடக்கின்ற தொன்றாகும்.

புனிதமாய காவிரியாற்றின் தொடர் புற்றுக் கடலுக் கருகில் இருந்தமையின் அந்நகரம், காவிரிப்பூம் பட்டினம் என்னும் பெயரை யடைந்தது. பூம்புகார், புகார், காகந்தி, சம்பாபதி என்னும் வேறு பெயர்களையும் அந்த நகரம் பெற்றிருந்த தாகும். ஒரு காலத்தில் காகந்தன் என்னும் மன்ன னொருவன் அங்கிருந்து அரசு செலுத்தியதால், காகந்தி என்னும் பெயரை அப் பட்டினம் பெறலாயிற்று. வங்க நாட்டுத் தலை நகராய சம்பாபதி என்னும் இடத்திலிருந்து தென்னாடு போந்து குடியேறிய மக்கள், தங்களுடைய பழைய நகரத்தினுடைய பெயரை மறவாமல் இருக்கக் கருதி அந்நகரத்திற்குச் சம்பாபதி என்னும் பெயரை வழங்க லானார்கள் போலும். பல்லாயிர மாண்டுகளுக்கு முன்பு தென்னாட்டை யடைந்து கண்டு சென்ற பேரிப்ளஸ் என்னும் பிற நாட்டினர் ஒருவர், கமாரம் என்றும், மற்றொருவராய டாலமி என்பார் கபேரிஸ் என்றும் அக் காவிரிப்பூம் பட்டினத்திற்குப் பெயர்க ளிட்டுப் போயினர் என்றும் அறிஞர் சிலர் கூறுவர்.

முன்னாளில் தஞ்சாக்கூர் என வழங்கப்பட்டுத் தற்போது தஞ்சாவூர் என்று சொல்லப்படும் தஞ்சை ஜில்லாவிற் சீகாழி தாலூகாவில், அக்காழிப்பதிக்குப் பதினன்கு மைலில் தூரத்திற் கப்பாலுள்ள அப்பூம் புகாரைச் சோழ மன்னர்க்குப் பின்னர் பல்லவ அரசரும் கைப்பற்றி யிருந்

தனர் எனத் தெரிகிறது. அந்நகரத்திற் கருகில் இப்போதுள்ள பல்லவனீச்சரம் என்னும் சிவத் தலமே அதற்குற்ற சான்றாகும்.

மன்னன் கரிகாலனுடைய ஆட்சியில் அப்பட்டினம் அடைந் திருந்த உயர்ந்த நிலைமைதான் என்னே! அந் நிலைமையை மனத்திற் கொண்டு சீர்தூக்கிப் பார்ப்போமாயின், மேனாட்டினருடைய ஆளுகைக் குட்பட்டு இந்நாளிற் பாரத நாட்டுத் தலை நகரங்களாய் விளங்கும் கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய நகரங்களுள் ஒன்றும் அப்பட்டினத்திற்கு ஒருவாற்றானும் ஒப்பாகா தென்றே நாம் துணிந்து கூற முன்னடைவோம்.

இப்பொழுது இருப்பதைப் போலப் பல கிளை நதிகள் பிரியப் பெறாமல் மரக்கலங்களினுடைய போக்கு வரத்துக் குத் தக்கவாறு ஆழ்ந்து அகன்ற முகத் துவாரத்தை யுடைத்தாய்க் காவிரிப்பூம் பட்டினத்திற்கு இடையிற் பாய்ந்தோடி யிருந்தது காவிரி யாறு. அந்நதியின் இரு மருங்கினும் எண்ணிறந்த மாட மாளிகைகள் இருந்தன. கடலை யடுத்து அந்த ஆற்றின் வட கரையில் இருந்த பெரிய நகரமே காவிரிப்பூம் பட்டின மாகும். அப்பட்டினத்தின் எல்லை, நாற்காத தூர மென நூல்கள் கூறும். அப்பெரிய நகரம், பட்டினப் பாக்கம், மருவூர்ப் பாக்கம் என்னும் இரண்டு பெரிய பிரிவுகளாகப் பகுக்கப்பட் டிருந்தது. அவ் விரண்டனுள் பட்டினப் பாக்கம் என்பது அக நகர் எனவும், மருவூர்ப் பாக்கம் என்பது புற நகர் எனவும் சொல்லப்படும். அக நகர், அரசன் அமைச்சர் முதலியோர் தங்கி யிருந்த இடமாகும். அது, மருவூர்ப் பாக்கத்திற்கு மேற் பாலாக இருந்தது. கடற் றுறைப் பக்கத் திருந்த மருவூர்ப் பாக்கம், பல வகைத் தொழிலாளர், பலவகைச் சாதியினர், சேனைகள், சேனைவீரர்கள் முதலியோர் தங்கி யிருந்த பகுதியாகும்.

காவிரிப்பூம் பட்டினத்திற்கு மேற்கே ம( ூர் என்னும் பெயரை யுடைய ஊர் ஒன்று இப்பொழுது
அதுவே, அந்நகரத்து வெளியே மருவூர்ப் பாக்கம் என்னும் பிரிவு ஒன்று இருந்த தென்பதற்குத் தக்க சாட்சி யாகும். அவ்வூர், மருதூர் எனவும் இக்காலத்து வழங்கப் படுகின்றது.

மேற்கூறிய இரு பிரிவுகளுக்கு இடையில், இரு புறங் களிலும் நிரை நிரையாக வானோங்கி வளர்ந்த மரங்கள் நிறைந்த பெரிய சாலை யொன் றிருந்தது. அம்மரங்களின் அடியிற் பலவகைப் பண்டங்களை விற்கும் எண்ணிறந்த கடைகள் இருந்தன. வெய்யிலை மறைப்பதற்காக ஒவ்வொரு கடையும் அழகிய திரைச் சீலைகளால் கட்டப்பட் டிருந்தது. எல்லா வகைப் பண்டங்களும் குவியல் குவியலாகச் சேர்த் திருக்கக் காணப்படும். பண்டங்களை விற்பவரும், வாங்கு பவரும் அவ்விடத்தில் எப்பொழுதும் நிறைந் திருப்பர். இன்ன பண்டம் இங்குள தென்று காட்டுதற்காகக் கடைக் காரர்கள், தங்களுடைய கடைகளுக்கு மேல் அமைத் திருந்த கொடிகள், பண்டங்களை வாங்க எல்லாரையும் கைகாட்டி யழைப்பதைப் போலவும், பண்டங்களை விலைக் குப் பெற்றுப் போக வந்தவர்களை இளங் காற்றை வீசி மகிழ்விப்பதைப் போலவும் காற்றால் எந்நேரமும் அசைந்து கொண்டிருந்தன.

அக நகராகிய பட்டினப் பாக்கத்தில் அழகுடன் அமைந் திருந்த அரசர் வீதியும், விழா மறுகும், கடைத் தெருவும் முதன்மை யானவை யாம். அந்தப் பாக்கத்தின் ஒரு புறத்தில், மறையவர், வேளாளர், வணிகர் முதலிய குலத்தினர், தனித் தனியே வாழ்ந்திருந்த மாட மாளிகை கள் நிறைந்த பெருந் தெருக்கள் குலவின. மற்றொரு புறத்தில், மருத்துவ நூல் வல்லார், சோதிடர் முதலியோர்

குடியிருந்த வீதிகள், பலவாய் இருந்தன. முத்துக் கோத்தல், சங் கறுத்தல் முதலிய தொழில்களைச் செய்குநர் தங்கியிருந்த தெருக்கள் பல, ஒரு சார் இருந்தன. மிக உயர்ந்த கட்டிடங்களைப் பெற்றிருந்த அப்பாக்கத்தின் இடையில், மகதச் சிற்பரும், மராடக் கொல்லரும், யவனத் தச்சரும் கூடிக், காண்பவர் கண்களைக் கவரக் கூடிய பலவகைச் சித்திரங்களுடன் வானோங்கிய மாட கூடங்கள் பொலிந்து விளங்கக் கட்டியமைத்த அரசனுடைய கோயில், வலம்புரிச் சங்கங்களுக் கிடையிற் பாஞ்ச சன்யம் திகழ்வதைப் போல் விளங்கி யிருந்தது. அவ்வரண்மனைக்குச் சுற்றிலும் கடும்பரி கடவுநர், களிற்றின் பாகர், நெடுந் தேர் செலுத்துபவர், மறவர் முதலிய பணியாள ருடைய இருப் பிடங்கள் இருந்தன. அந்த அரண்மனைக் கருகில், அகன்று பரந்திருந்த ஓரிடத்தில் நால்வகைச் சேனை வீரர்களும் வாழ்ந்திருந்தார்கள்.

கவிவாணர், துதிவாணர், நாழிகைக் கணக்கர், பாணர், பலவகைக் கூத்தாடிகள், பல்வேறு வாத்தியங்களை இசைப்பவர், பல நிறத்து மணிகளைக் கொண்டு பலவகை மாலைகள் கோப்பவர், வளையல்கள் செய்பவர், பூ, தக்கை முதலியவற்றால் மாலைகள் தொடுப்பவர், வேழம்பர் முதலிய மக்கள், தத்தம் இனத்தின ருடன் வாழ்ந் திருந்த தனித் தனித் தெருக்கள், பல விருந்தன. கோட்டங்கள், அம்பலங்கள், மன்றங்கள், சோறிடும் அறச் சாலைகள், வேள்விச் சாலைகள், கலைக் கழகங்கள், நாடகக் கொட்டகைகள், சிங்காரத் தோட்டங்கள், எந்திர வாவிகள் முதலியனவும் அப்பாக்கத்தில், ஆங்காங்கு அமைந் திருந்தன.

கடற்கரை யோரத் திருந்த புற நகரத்தில், திசை மயங்கிச் செல்லும் மரக்கலங்களைத் திசைக் குறி காட்டி யழைக்கும் மிக உயர்ந் திருந்த கலங்கரை விளக்க மொன்று,

ஆங்கிருந்த பெரிய கப்பற் றுறைமுகத்தின பக்க கட்டப்பட் டிருந்தது. பல்வேறு இடங்களி லிருந்து நாவாய்களிற் கடல் வழியாகக் கொண்டுவரப்படும் பொருள் களுக்குத் தீர்வை வரையறுத்துக் கடமை கொள்ளும் ஆயத் துறைகள், கட்டியமைக்கப் பெற்றிருந்தன. அங்குச், சுங்கம் பெற்ற பின்பு சோழ வேந்தருடைய அடையாள முத்திரை யாகிய புலிக் குறியை அப்பண்டப் பொதிகளின் மேல் பதிந் திருக்க இடுவர் கடமை கொள்பவர். அங்ஙனம் மரக்கலங்களி னின்று இறக்குமதி செய்யப்பட்ட பண்டப் பொதிகளைச் சேமித்து வைத்திருத்தற் குரிய பண்டசாலை கள், கிடங்குகள், உயர்ந்த மேடைகளை யுடைய மாளிகைகள் எண்ணிறந்தனவாய் இருந்தன. வியாபாரிகள், தாங்கள் கொண்டு வந்த பண்டங்களை அக்கட்டிடங்களிற் கொண்டு போய்ச் சேர்ப்பார்கள்; சிறிது சிறிதாக வாயினும், முழு வதையும் ஒரே முறையாக வாயினும் தாங்கள் விரும்பும் வண்ணம் விற்பார்கள். யவன சீன சாவக வியாபாரிக ளுடைய மாளிகைகள் அளவற்றனவாய் அப்பண்டசாலை களுக் கருகில் வரிசை வரிசையாக விருந்தன.

அம்மருவூர்ப் பாக்கத்தில் ஒரு புறம், பட்டு நூலாலும் பருத்தி நூலாலும், ஆடு முதலியவற்றின் மயிராலும் சித்திர ஆடைகளை நெய்யும் சாலியர் இருக்கைகள் மிக்கிருந்தன. மற்றொரு பால், சந்தனம், அகில், பட்டு, பவழம், முத்துப், பலவகை மணிகள் முதலிய உயர்ந்த பொருள்களை விற்கும் வியாபாரிகளுடைய பெரிய வீடுகள் குலவின. ஒரு பக்கத் தில் நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கில்நெல் என்னும் எண்வகைக் கூலங்களை விற்கும் கூலவாணிகர் குடி யிருந்த தெருக்கள் நிறைந்து விளங்கின. ஒருசார், பிட்டு வாணிகர், அப்ப வாணிகர் முதலிய வணிகர் குலத்தினர் வாழ்ந் திருந்த மறுகுகள் பலவாம். கள் விற்ப

வர், ஆடுகள் ஆட்டிறைச்சி முதலியவற்றை விற்கும் மிலேச்சர், உமணர், பரதவர் முதலியோர், தமக் கென ஒதுக்கி விடப்பட் டிருந்த மறுகுகளில் தங்கி யிருந்தனர். உப்பு விற்பவர், எண்ணெய் விற்பவர், இலையமுது இடுவோர், பஞ்சவாசம் பகர்வோர் முதலியோருடைய இருக்கைகளுக்கு அளவே கிடையாது. ஒருபால், வெண்கலக் கன்னார், செம்புசெய்குநர், மரங்கொல் தச்சர், கருங்கைக் கொல்லர், நன்கலந் தருநர், பொற் கொல்லர், சித்திர காரிகள், சிற்ப சாரிகள், துன்னர், சக்கிலியர், சீரை கிடை முதலியவற்றால் பூ, பூமாலை, படிமை, பொய்க் கொண்டை முதலியவற்றைச் செய்குநர் முதலிய கைத்தொழிலாள ருடைய இருப்பிடங்கள் பல அமைந்து கிடந்தன. தோற் கருவி, துளைக் கருவி, நரப்புக் கருவி என்பவற்றைக் கொண்டு இசை மரபிற் சிறிதும் பிழைபாமல் கேட்பவர் களித்து மெய் மறந்து நிற்கும் வண்ணம் இசைத்துக் காட்டவல்லபாணர் குழலர் முதலிய இசைக்காரர், தத்தமக் கென விடப்பட்ட இடங்களில் வாழ்ந் திருந்தனர். பிறர் ஏவிய குற்றேவல்களைச் செய்து உயிர் வாழும் கைவினையாளரும் அப்பாக்கத்தில் மிக் கிருந்தனர். பிற நாட்டின ராகிய கடலோடிகள் பலர், கடற்கரையோரத்தில் அந்நகரத்தின ருடன் மன மொத்து அளவளாவிக் குடி யிருந்தனர்.

அந்தப்புற நகரத்தின் மறுகுகளில் வண்ணம், சுண்ணம், சாந்து, புகைப் பொருள், வாசனைப் பொருள் ஆகியவற்றை விற்பவர், எந்நேரமும் திரிந்துகொண்டே இருப்பர். அப் பாக்கத்தின் தெருக்களில், பிற நாடுகளி லிருந்து கடல் வழியாக நாவாய்களிற் கொணர்ந்த குதிரைகளும், மலைநாட்டிலிருந்து பெற்ற மிளகு பொதிகளும், பனி மலை முதலிய வட திசைக்கண் இருக்கும் மலைகளின் பக்கங்களினின்று சேர்த்துக் கொண்டு வரப்பட்ட மாணிக்கம் பொன்

முதலிய விலை யுயர்ந்த பொருள்களும், பொதியின் மலையி லிருந்து வெட்டிக் கொணர்ந்த சந்தனக் கட்டைகளும் அகிற் கட்டைகளும், தென் கடலிற் குளித்தெடுத்த முத்துக்களும், கீழ்கடலினின்று தேடிக் கொண்டு வரப்பட்ட பவளங்களும், கங்கை யாற்றங் கரையிற் பிறந்த யானைகளும், பொன்னும், பலவகை மணிகளும், முத்துக்களும், காவிரி நதியின் பாய்ச்சலால் விளைந்த நெல், கேழ்வரகு, சோளம் முதலிய உணவுப் பொருள்களும், இலங்கையி லிருந்து மரக்கலங்களிற் கொணர்ந்து இறக்குமதி செய்யப் பட்ட உணைப் பொருள்களும், காழகத் திருந்து பெற்ற நுகர்ச்சிப் பொருள்களும், சீனம் முதலிய இடங்களி லிருந்து கொண்டு வந்த பனி நீரும், குங்குமப் பூவும், கருப்பூரமும், பற்பல துகில் வகைகளும் ஏராளமாய்த் தொகுக்கப் பெற்றுக் காண்பவர் களிகூர விற்கப்பட் டிருந்தன.

மேற்கூறியவற்றை யன்றி அந்நகரத்தில் நாளங்காடி—காலைக் கடையும், அல்லங்காடி—மாலைக் கடையும், சந்தையும், பாவை மன்றம் முதலிய ஐந்து சபைகளும், பட்டி—வித்தியா மண்டபமும், நியாய சபைகளும், பௌத்த விகாரங்கள்— கலா சாலைகள் ஏழும், சமணருட் பஞ்ச பரமேட்டிகள் தங்குதற் குரிய இடங்களும், புத்த சமணருள் துறந்தார் தங்குதற் குரிய தவப் பள்ளிகளும், ஒவ்வொரு மதத்தினருள்ளும் இருந்த பல வகுப்பினரும் இறந்தவரை அடக்கஞ் செய்தற்குரிய பல இடங்களை யுடைய மிகப் பெரிய தொரு மயானமும் இருந்தன.

பௌத்த மதத்தினருக்கே உரித்தா யிருந்த சக்கரவாளக் கோட்ட மென்பது, அம்மயானத்தின் பக்கத்தே இருந்தது. அது, பௌத்த மதத்தினர் கூறும் உலகங்களின் வடிவங்களாகச் சிற்பிகளால் செய்யப் பெற்றதாகும். அதிற் பல உலகங்களும், அவ்வுலகங்களி லுள்ள பொருள்

களும் பிரதிமைகளின் வடிவங்களாகவும், சித்திரங்களின் வடிவங்களாகவும் அமைக்கப் பெற்றிருந்தன. சக்கரவாளம் என்பது, எல்லா உலகங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பதொரு கோளமாகும் என்னும் பொருளையுடையதாகும். இது பௌத்த பரிபாஷையாகும். இதைக் குறித்த மற்றைச் செய்திகளெல்லாவற்றையும் மணிமேகலையின் ஆறாங் காதையில் நூற்றெழுபத் தாறும் அடி முதலியவற்றால் நன்கு படித் தறியலாகும்.

அப்பெரிய நகரத்திற் காவிரிச் சங்கமுகத் தீர்த்தமல்லாமற் சோம குண்டம், சூரிய குண்டம் என்று கூறப்படும் இரு பெரும் புனிதமாய நீர் நிலைகள் இருந்தன. கயிலாயம், வேலாயுதம், சதுக்கப் பூதம், ஐராவதம், கற்பக தரு, வச்சிராயுதம், புத்த பீடிகை, கந்திற் பாவை என்பவற்றிற்கும், திருமால், பலராமன், கண்ணன், மன்மதன், இந்திரன், சூரியன், சந்திரன், சிவன், முருகன், சாதவாகனன், நிக்கந்தன், சாத்தன், சம்பாபதி என்பவர்களுக்கும் தனித் தனியே கோயில்கள் பல விருந்தன.

பலவகைத் தேவர்களுக்கும் உரிய திருவிழாக்கள் அடிக்கடி நடந்து வந்ததோடு இருபத்தெட்டு நாள் நடைபெறுவதாயிருந்த இந்திர விழாவும் ஆண்டு தோறும் மிக்க சிறப்புடன் அங்கு நடைபெற்று வந்தது. அஃது, ஒவ்வோராண்டும் சித்திரைத் திங்களில் மதி நிறை நன்னாளில் தொடங்கி நடத்தப்படும். அப்பெரு விழாவின் பெருமை, சொல்லற் கருமையாகும். அது நிகழும் காலத்தில் இம் மண்ணுலகத்து மக்கள் பலரும், அதன் காட்சியைக் கண்டு களிக்க அப்பட்டினத்தை யடைதல் வழக்கம். விண்ணவரும்,மண்ணவர் உருவங்கொண்டு அவ்விழாவினைக் கண்டு மகிழச் செல்வர் என்று பழைய நூல்கள் கூறுகின்றன. அத்திருவிழா நடத்தப்பட்டு வந்தபோது பூம்புகார் அடைந்

திருந்த காட்சி, அனைவரும் பார்த்து இன்புறுதற் குரிய தொன்று யிருந்தது.

அச்சம்பாபதியி லிருந்த நாளங்காடி என்பது, அகன்ற இடத்தை யுடைத்தா யிருந்த தொரு பொதுநில மாகும். அதிற் செழித் தோங்கி வளர்ந்த சோலைகள் பல விருந்தன. அச்சோலைகளில், வரிசை வரிசையாக வளர்ந் திருந்த மரங்களையே தூண்களாகக் கொண்டு கட்டிய கடைகள் பல, அமைந்திருந்தன. அங்குப் பலவகைப் பண்டங்களை விற்பவருடைய ஓசையும், அவற்றைக் கொள்பவருடைய ஒலியும் சேர்ந்து, அலைகளால் கடலில் உண்டாகும் பேரொலியைப் போல் எப்பொழுதும் பேரரவம் இடையறா திருந்தது. முன்னொரு காலத்தில் அசுரர்களால் இடுக்கணுற்ற இந்திரன், காவிரிப்பூம் பட்டினத் திருந்து நம்முடைய நாட்டை யாண்ட முசுகுந்தன் என்னும் மன்னர் மன்னனாகிய சோழனை யணுகித், தனக்கு நேர்ந்த கேட்டைத் தெரிவித்தான். ஆண்மையில் மிக்க அம் முசுகுந்தன், உடனே சீறிப் புறப்பட்டு விண்ணூடு சென்று, அசுரர்களை யெதிர்த்துக் கடும் போர் புரிந்து வென்று, இந்திரனுக் குற்ற துன்பத்தைத் துடைத்தான்.

சோழன் செய்த பேருதவிக்கு மிக்க மகிழ்ச்சி கொண்ட இந்திரன், அவ்வேந்தனுக்குப் பூதம் ஒன்றை யுதவினான். முசுகுந்தனுக்கும், அவன் மரபில் தோன்றும் மற்றை மன்னர்க்கும் யாதோர் இடையூறும் நேராவண்ணம் காத்தற்பொருட்டு அப்பூதம, சம்பாபதியின் இடையி லிருந்த நாளங்காடியில் வந்து தங்கி யிருந்தது. அந் நகரத் திருந்த மறக்குடி மகளிரும், மற்றைத் தாழ்ந்த குலப் பெண்களும் திரளாகப் போய், உரிய காலங்கள் தோறும் அப்பூதத்திற்குப் பலி பீடத்திலே புழுக்கலும், எள்ளுருண்டையும், நிணச் சோறும், கள்ளும் வைத்துப் படைத்துப்

பூவிட்டுப் புகை காட்டிப் பூசித்து, "எம்முடைய மா மன்னன், பன்னெடுங் காலம் பண்புடன் வாழ்ந் திருந்து, அவனுடைய நல்லாட்சிக் குட்பட்ட இப்பெரிய நில முற் றிலுமுள்ள மக்கள் எல்லாரையும் பசி, பிணி, பகை முதலிய குறைகள் நேராமல் காக்கவும், அவனுடைய நாட்டில் மழை சுரக்கவும், செல்வம் பெருகவும அருள் புரிவாயாக," என்று அப்பூதத்தை நோக்கி வேண்டித் துதிப்பர்; வாழ்த்தி வழிபடுவர்; குரவை முதலிய கூத்துக்களை யாடிக் களிப்பர்.

காகந்தியி லிருந்த யாவரும் கொண்டாடும் பெருமை வாய்ந்த ஐந்து மன்றங்களுள் பட்டி மண்டபம் என்பது, ஒன்றாகும். பல அரசர்களையும் வென்று இப்பாரத நாடு முழுவதையும் தன் ஆளுகைக்குக் கீழ்ப்படுத்திய காலத்தில் திருமாவளவனாகிய நம் கரிகாலனுக்குப் போரில் தோற்ற மகத நாட்டு மன்னனால் கொடுக்கப்பட்ட உயர்ந்த தோர் அரசவை அஃதாகும். அது, மயன் என்னும் தச்சனால் மாற் றுயர்ந்த பசும் பொன்னைக் கொண்டு செய்து, ஒன்பது வகைத்தாய விலை யுயர்ந்த ஒளி மிக்க மணிகளால் இழைக்கப் பட்டதோர் அழகிய மண்டப மாகும். அதில், அரச னுடன் நல்லிசைப் புலவர் பலர் எந்நேரமும் குழுமி யிருப்பர்.

மற்றொன்றாகிய வெள்ளிடை மன்றம் என்பது, வெளி யான ஓரிடத்தில் இருந்தது. எப்பொழுதும் அதிற் பண் டப் பொதிகள் அடுக்கி வைக்கப்பட் டிருக்கும். அங்குப், பல்வேறு நாட்டினர், வியாபாரஞ் செய்தற்காகத் தாம் கொண்டு வந்த பண்டப் பொதிகளின் மேல் அளவும் எண் ணும் நிறையுமாகிய கணக்கைக் குறித்துத் தம் பெயரைப் பொறித்துப் பொதிகளை யடுக்கி வைத்துவிட்டுச் செல்வர். அப்பொதிகளைக் களவாட எவராலும் இயலாது. அம்

மன்றத்தின இயல்பினை யறியாத புதியவர் யாவரேனும், அப்பொதிகளுள் எதை யாயினும் திருட எண்ணி அம்மன்றத்தை நெருங்கிய வுடன் அஃது, அப்பொதியை அவருடைய தலைக் கேற்றி, அவரைப் பித்துப் பிடித்தவ ராக்கி, நடுங்கும்படி செய்து, கழுத்தைக் கடுக்குமாறு தலைச் சுமையுடன் ஊரைச் சுற்றி வரும்படி யடித்து, உரியவ ரிடம் பொதிச் சுமையுடன் அவரை ஒப்படித்து விடும். அதனால் எவரும், அந்த மன்றத்தி னுள்ளிட்ட பொருளைக் களவு காணக் கனவிலும் கருதார்.

இன்னொன்றாகிய இலஞ்சி மன்றம் என்பது, ஓர் அழகிய குளிர்ந்த பொய்கை யாகும். கூனரும், குட்டரும், ஊமரும், செவிடரும், மெய்யழுகச் செய்து கொல்லும் பெரு நோய் என்னும் கொடிய பிணியால் பிடிக்கப் பட்டவரும் அம்மடுவிற் குளித்துக் கரை யேறிய வுடன் தூய உடம்பையும், வலிமையையும், வனப்பையும் பெறுவர்; அப் பொய்கையை வலம் வந்து தொழுது தம்முடைய இருப்பிடங்களை யடைவர். அப்பொய்கையின் தன்மையை யறிந்து பிற நாட்டினர் பலர், கூட்டங் கூட்டமாக வந்து, அந்தப் பொய்கையிற் குளித்துக் களித்துச் செல்லுதல் வழக்கமா யிருந்தது. ஒவ்வொரு நாளும் கணக்கற்ற நோயாளர் அங்கு வந்து குளித்து, நோயை யொழித்து மன மிக மகிழ்ந்து, பாடி யாடித் தம் மிருப்பிடங்களை நோக்கித் திரும்பிச் செல்லுதலாகிய காட்சி, காண்பவர்க்கு வியப்பை யுண்டாக்குவதா யிருந்தது.

கல் மன்றம் எனப்படுவது, வேறொரு மன்றமாகும். கண்ணாடிக் கல்லாற் செய்த பெரிய தூண் ஒன்று, அந்த மன்றத்தின் இடையில் நிலை நிறுத்தப்பட் டிருந்தது. அத் தூண், மிக்க ஒளியைக் காலுவதாய் விளங்கியது. அக் கற்றூணை ஒரு முறை வலம் செய்து வணங்கி, அதன் எதி

ரில் நின்று தம்முடைய வடிவத்தை அதிற் காணுபவர், சூனியம் வைக்கப் பெற்று அறிவிழந்தவரா யிருப்பினும், வஞ்சகரால் மருந் தூட்டப்பட்டுப் பித்தேறியவரா யிருப்பினும், பாம்பினாற் கடி யுண்டவரா யிருப்பினும் உடனே பிணி நீங்கக் குண மடைந்து செல்வர்.

பிறிதொன்று பாவை மன்றம் என்னும் பெயரை யுடைய தாகும். அதிற் பாவை யொன்று நிலை நாட்டப் பட்டிருந்தது. அரசர் செங்கோன்முறையிற் கோடினும், அறங் கூறும் அவையத்தார் நடுநிலைமையிற் பிறழினும் அப்பாவை, வாயினால் ஒன்றும் சொல்லாமல் தன்னுடைய இரு கண்களி னின்றும் நீர் வடித்து அழுவதா யிருந்தது. அதைக் கண்டு குற்றஞ் செய்தவர், அற நெறிக் கிணங்க நடக்க முயல்வர்; தாம் மன்னிப் படைதற் குரிய வழியைத் தேடுவர்; நன்னிலைமையி லிருக்க நாடுவர்.

அத்தகைய தெய்வத் தன்மை பொருந்திய மன்றங்களை யன்றிப் பூத சதுக்கம் என்னும் பெயரை யுடையதொரு நாற் சந்தி யிருந்தது. அவ்விடத்திற் பூதம் ஒன்று நிலை நிறுத்தப்பட் டிருந்தது. அச்சதுக்கப் பூதம், அந்நகரத்து நாற் காத எல்லையுங் கேட்கும்படி தன்னுடைய கடிய குரலால் தீவினையாளரைக் கூவி பதட்டி யச்சுறுத்தித், தவ வேடம் பூண்டு பலரையும் வஞ்சித்துத் தீமை புரிந்து திரிவோர்களையும், கற்பிற் பிறழும் பெண்டிர்களையும், பிறர் மனை நயக்கும் பேதைகளையும், பொய்க்கரி புகல்வோர்களையும், புறங் கூறுகின்றவர்களையும், அரசரை ஏமாற்றி யழிக்கக் கருதும் அமைச்சர்களையும் தான் தங்கியிருந்த சந்தின் வழிகளில் வரக் கண்டால், உடனே அக்கொடியவர்களைத் தன் கைப் பாசத்தாற் பிணித்து, நிலத்திற் புடைத்து உண்டு களிக்கும். பட்டி மண்டபம் முதலிய மன்றங்களிலும், பூத சதுக்கத்திலும் உரிய காலங்கள் தோறும் பலரும்,

பொங்கலிட்டுப் பலி கொடுத்துப் பூசித்து, மன்னனை வாழ்த்துதல் வழக்கம்.

முன்னர் நாம் கூறிய சோம குண்டம், சூரிய குண்டம் என்னும் இரண்டு பொய்கைகளும், கடலொடு காவிரியாறு கலக்கு மிடத்தில் நெய்தல் மலர்கள் இதழ்கள் விரிய மலர்ந்து நறுமணம் வீசிக்கொண் டிருந்த ஒரு பெருஞ் சோலையின் நடுவே இருந்தன. அப்பொய்கைகளில் நீராடி, அவற்றின் பக்கத்திலிருந்த காமன் கோயிலை யணுகி, அத் தேவனை வழிபடும் மகளிர், பிரிந்த தம் கணவரைக் கூடி இம்மையில் இன்புற்று, மறுமையிற் போக பூமியிற் போய்ப் பிறப்பர் என்னும் உறுதிப்பா டொன்றை அக்காலத்து மக்கள் மேற்கொண்டு ஒழுகி வந்தனர்.

அவ்விரு குண்டங்களையும், முன்பு சொன்ன மன்றங்களையும் கரிகால் வளவனுடைய முன்னோர், தம்முடைய தோள் வன்மையினால் இந்திரனுக்கு அசுரர்களால் உண் டான துன்பத்தைப் போக்கி, அமராவதியைக் காத்தமைக்குக் கைம்மாறாக அப்புரந்தரன் கொடுக்க மகிழ்ச்சியுடன் பெற்றனவாம்.

அத்துணைச் சிறப்புக்களையும் புதுமைகளையும் பெற்றுக் கரிகாலனுடைய ஆட்சியில் உயர்வுற விளங்கி யிருந்த காவிரிப்பூம் பட்டினத்தினுடைய பெருமைதான் என்னே! அவ்வரசனுடைய ஆளுகையில் அந்நகர மடைந் திருந்த நிகரற்ற உயர்ந்த நிலைமையைக் கொண்டாடாதார் இலர். அக்காலத்தில் அந்நகரத்தை யடைந்து, அதன் நிலைமையைக் கண்டு, அதைப் போக பூமி என்றும், பொன்னுலக மென்றும் உரையாடிய மக்கள் பல ராவர்.

இலையமுதுகூடம் என்று இப்பொழுது வழங்குகிற ஊரைப் பழைய காலத்தில் அக்காவிரிப்பூம் பட்டினத்

திற்று வெற்றிலை விற்கும் இடமா யிருந்த தாகு மென்று அறிஞர் ஆராய்ந்து சொல்லுகின்றனர். காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்து உற்றுப் பார்த்து ஆராய்வோ மாயின். இலையமுதுகூடம் என்பதைப் போன்ற வேறு பல குறிகளையும் நாம் காணலாகும்.

## பகுதி - ௩

## நலத்தவே துணை மாதல்

எண்டிசையும் புகழ மணக்க, எவ்வெவரும் வியக்கக் காவிரிப்பூம் பட்டினத்திருந்து சோணாட்டை யாண்டு வந்த கரிகாலன். தன் நாட்டு மக்கள் எல்லாரும் வேளாண்மையில் மேம்பா டடைந்து விளங்க வேண்டு மென்றும், அத் தொழில் முன்னேற்ற மடைவதற்குத் தான் தக்க உதவி புரிந்து அனைவர்க்கும் மகிழ்ச்சி யுண்டாக்க வேண்டு மென்றும், எல்லாப் பண்டங்களை நிரம்பப் பெற்றுத் தன் நாடு எப்பொழுதும் இன்பத்துடன் இருக்கவேண்டு மென்றும் மனத்திற் கொண்டான்; தன் எண்ணத்திற் கேற்றவாறு பல துறைகளிற் கருத்தைச் செலுத்திப் பாடு படலானான்; செடிகளும் மரங்களும் அடர்ந்து மேடு பள்ளமுமா யிருந்த நிலங்க ளெல்லாவற்றையும் திருத்திப் பண் படுத்தி, எளிய குடிகள் பயிரிட்டு உய்யும் வண்ணம் அவற்றைப் பகுத்து விட்டான்; ஊர்கள் தோறும் ஏரிகள், குளங்கள், ஊற்றுக் கால்வாய்கள் வெட்டுவித்துக் குடிகளுக்கு உதவி புரியத் தொடங்கினான்; குடிகளிட மிருந்து சிறிதளவே கடமை கொள்ள ஏற்பாடு செய்தான். அத் தீர்வைப் பணம் முழு வதையும் அக்குடிகளுடைய நன்மைக்கே செலவழிக்கத் தீர்மானித்தான்.

அரசன் அங்ஙனம் நல்ல வேலைகளை மேற்கொண்டு குடிகளை அன்புடன் காக்கத் தொடங்கியதைக் கண்டு சோழ நாட்டுச் சுற்றிலு மிருந்த பிறநாட்டு மக்கள் பலரும், தம்முடைய ஊர்களை விட்டொழித்துக் கரிகாலனுடைய வள நாட்டிற் குடி புகத் தொடங்கினர். அவ்வாறு தன் நாடு போந்த ஏழைகளுக்கு வேண்டுவன வற்றைக் கொடுத்து, உழுதுண்டு வாழ நிலங்களை வழங்கி, அன்னவரை அன்புடன் ஆதரித்தான் அவ்வளவன். சோழ நாட்டிற் குடியேறிப் பிழைக்க இச்சிக்கும் மற்றை நாட்டுமக்கள், முன்னர் தம்முடைய கருத்தைக் கரிகாலனுக்கு அறிவித்து, அவ் விறைவனுடைய கட்டளையைப் பெற்றுத் தாம் விரும்பும் ஊரில் தங்கியிருக்கலாம். வேண்டிய உதவி புரிந்து அம் மக்களை யாதரிக்க அரசன், தக்க ஏற்பாடுகளை அப் பொழுதே செய்து முடிக்கத் தன்னுடைய அரசாங்கப் பணியாளருக்கு ஆணையிடுவான்.

ஒவ்வோர் ஊரிலும், அவ்வவ்விடத் திருந்த மாந்தர் விரும்பிய வண்ணம் கரிகால் வளவன், கோயில்களைக் கட்டுவித்தான்; சோலைகளை வைக்கச் செய்தான்; பல சாலைகளை யுண்டாக்க உதவி புரிந்தான்; பள்ளிக்கூடங்கள் பலவற்றை வைத்துச் சிறுவர் அனைவர்க்கும் கல்வி கற்பிக்க வேண்டு மென்று வற்புறுத்தினன். அவ்வரசனுடைய பெருந்தன்மையைப் பார்த்து மாந்தர் பலரும், சோழ நாட்டிற் குடியேறத் தொடங்கவே நாளுக்கு நாள் அந்நாட்டு மக்கள் தொகை மிக்கு வரலாயிற்று. குடிகளுக்கு இடம் வேண்டி யிருந்தது. அதனல் அவ்வேந்தன், பல காடுகளை யழித்து, அவ்விடங்களில் நிலங்களையும் ஊர்களையும் புதிதாய் உண்டாக்க லானன். தன் ஆளுகைக் குட்பட்ட மக்களுடைய நல்வாழ்வைக் கருதியே எப்பொழுதும் பாடுபட்டு வந்தமையால் அவ்வளவனை, 'எவ்வுயிரையும்

காக்க இறைவன் அருளால் இம்மண்ணில் வந்து தோன்றிய இறைவனே இவனாவான்' என்று அனைவரும் சிறப்பித்துக் கூறலாயினர்; அவ்வரசனைக் கடவுளாகவே மதித் தொழுகினர்.

சோழ நாட்டில் ஒவ்வொரு நாளும் விதைத்தல், களை யெடுத்தல், அறுத்தல் ஆகிய பயிர்த் தொழில் நீங்காமல் இருந்தன. எப்பக்கம் பார்ப்பினும் பச்சை நிறத்தோடு கூடிய பயிரும், பழுப்பு நிறத்தோடு கூடிய முதிர்ந்து தலை சாய்ந்த விளையுளுமே காணப் படுவனவா யிருந்தன. எங்கும் வேளாளருடைய ஓசையே நிறைந்திருந்தது. எங் நாளும் பலவகைப் பயிர்கள் செழித் திருந்தமையால் மருத நிலங்களுக்கு அணித்தாய காடுகளில் இருந்த யானைகள், மான்கள், பன்றிகள், நரிகள் முதலிய விலங்குகள், அந்நிலங் களில் விளையும் கரும்பு, செந்நெல், கேழ்வரகு முதலிய பயிர்களை மேய்ந்து கொழுத்துத் திரிய லாயின. உணவு ஏராளமாய்க் கிடைக்கவே அம்மாக்கள் தொகையும் விரை விற் பெருக லாயிற்று. அவ்விலங்குக ளெல்லாம் இரவிலும் பகலிலும் மருத நிலங்களிலேயே தங்கி யிருந்து பயிர்களை யழிக்கலாயின. அக்கொடிய செயலைக் குடிகள் அரசனிடம் சென்று முறையிட்டு அறிவித்தனர். விலங்கினத்தை வேரறுத் தழித்துக் குடிகளுடைய குறையைப் போக்கக் கரிகாலன், மறவர் வேடுவர் இருளர் முதலியோர் எண்ணி றந்த நாய்கள், வலைகள், குறுந் தடிகள், விற்கள், அம்புகள், ஈட்டிகள் ஆகிய கருவிகளுடன் தன்னைச் சூழ்ந்து வர, அடிக்கடிக் காடுகளிற் சென்று வேட்டையாடத் தொடங் கினன்.

அன்பும் அருளும் பூண்டு குடிக ளெல்லாரையும் அங் ஙனம் ஓம்பி நல்லிசையுடன் சிறந்து விளங்கிய கரிகால னுடைய பெருமைக்குக் கேடு சூழ்விக்க, அவனுடைய

பகைவர், பன்னாட் காறும் பலவாறு எண்ணி யாராய்ந்து பார்த்தனர்; யாதொரு வழியானும் அவருடைய எண்ணம் ஈடேறுதற் கின்மையால், அகங் குலைந்து அடங்கி யிருந் தனர். அமைச்சர், அறிஞர், சுற்றத்தார், மற்றைக் குடி கள் முதலியோருக்கு அந்த அரசனிடம் வெறுப் புண்டாக் கித் தம்முடைய எண்ணத்தை முடித்துக்கொள்ளலா மெனக் கருதி அக்கொடியவர், காட்டில் வாழ் விலங்குகளைக் கரு வறுக்கச் சென்றபோது அந்த அண்ணலை யேமாற்ற ஒரு சூழ்ச்சி செய்தனர்.

கரிகாலன் வேட்டையாடச் சென்றிருந்த தொரு காட் டைச் சார்ந்த ஓர் ஊரில் ஆட்டிடையன் ஒருவன் வாழ்ந் திருந்தான். அவனுக்கு அழகில் மிக்க மகள் ஒருத்தி யிருந்தாள். கரிகாலனுடைய மூத்த தந்தையார் பயந்த தீவினையாளர், அக்கன்னியின் வீட்டை யடைந்து, இன்ப முண்டாகச் சிலவற்றைப் பேசி அப்பெண்ணை மயக்கினர்; பலவாறு கற்பித்துத் தம்முடைய சொல்லுக் கிணங்க நடக்குமாறு அவளைச் செய்தனர். அவ்விடைச்சியை நோக்கி அக்கொடியவர், "மாதரசே! தெய்வ மகளிரைப் போல் நீ மிக்க வனப்புடையவளா யிருக்கின்றாய். இடை யர் குலத்தில் நீ பிறக்கத் தக்கவளா? அரசர் குலத்திலேயே உன்னைப் போன்ற பெண் ணொருத்தியை நாங்கள் இது வரை இப்படியிற் கண்டிலேம். உன் கட்டழகைக் கண்டு எந்த அரசன்தான் உன்னை மணக்க விரும்பான்? உன்னு டைய அழகின் உயர்வை யறியாமல் நீ ஏன் இவ்வூரி லிருந்து எளிய குடியிற் பிறந்த ஓர் இடையனை மணந்து, அல்லும் பகலும் உழைத்து, வருந்தி, உன் அழகைப் பயனற்றதாகச் செய்ய வேண்டும்? சேடியர் சிலர் உன்னு டைய கைகால்களை வருடவும், சில தோழிப்பெண்கள் நீ இட்ட குற்றேவல்களைச் செய்யவும், உயர்ந்த பஞ்சணையின்

மீது வீற்றிருந்து அழகிய அரண்மனையில் இருக்கத்தக்க செல்வியளாய் நீ இருக்கின்றாய். அழகெலாம் திரண்டு ஓர் உருக்கொண்டார் போன்ற உன்னைக் கண்டு நாங்கள் மிக்க மன மிரக்கங் கொண்டோம். ஏ நங்காய்! ஏழைகளுக்கு உதவி புரிதலாகிய தொழிலை நாங்கள் மேற்கொண்டவர்களாவோம். எங்களுடைய சொல்லின்படி நடப்பா யாயின், இந்நாட்டுக்கு நீ அரசி யாகலாம். நம்முடைய நாட்டை யாளும கரிகாலன் இப்பொழுது இவ்வூருக் கருகிலுள்ள காட்டில் வேட்டையாட வந்திருக்கிறான். உனக்கு வேண்டிய அணிகலன்களையும் ஆடைகளையும் நாங்கள் இன்றே வாங்கித் தருகின்றோம். அவற்றை யணிந்து நாளைக் காலையில் உன்னுடைய ஆடுகளுடன் சென்று நீ, அம் மன்னன் வேட்டை யாடும் இடத்தில் தங்கி யிரு. உன் எழி லார்ந்த வடிவத்தைக் கண்டு அவன், உன்னை மணப்பான்; இந்நாட்டு மக்கள் எல்லாரும் வணங்கத்தக்க சீமாட்டி யாகலாம் நீ. பின்னர் எங்களுக்கும் நீ உதவி புரியலாம்,'' என்று மொழிந்து அம்மங்கைக்கு ஆசை யூட்டினர்.

சிறிளம் பருவத்தினளாய அந்த இடைப்பெண்ணும், தீயவர் உரைத்த சொற்களைக் கேட்டு அரசனை மணக்கப் பேரவாக் கொண்டாள்; அதனால் அக்கொடியவருடைய மொழிக்கிணங்க நடப்பதாய் ஒத்துக்கொண்டாள். உடனே அத்தீயவர், அப்பெண்ணின் வீட்டை விட்டு வெளியே சென்றனர்; சிறிது நேரத்திற்குள் சில ஆடைகளையும் நகைகளையும் எடுத்துக்கொண்டு அவ்வீட்டிற்குத் திரும்பி வந்தனர். அவற்றைக் கண்டு அவ்விடைச்சி, நனி யுவந்தாள்; புன்சிரிப்புடன் அவற்றைப் பெற்றுக்கொண்டாள்; மறு நாள் எவ்வாறாயினும் மன்னனைக் கண்டு மன்றல் முடிப்பதாய் உறுதிமொழி பகர்ந்தாள். அவளை அங்ஙனம் தூண்டிய வஞ்ச மனத்தினர், மறுநாள் அவளுடைய வீட்டை யடை

வதாய்ச் சொல்லி விடைகொண்டு அப்புறம் சென்றனர்; அவ்வூரிலேயே வேறோர் இடத்தில் தங்கி யிருந்தனர்.

அந்நாள் கழிய அடுத்த நாள் காலையில் அப்பெண், நீராடி மஞ்சள் பூசிச் சிவந்த தன் உடம்பு ஒளிவீசி மின்னச் செய்தாள்; முன்னாள் வஞ்சகர்பால் தான் பெற்ற ஆடை அணிகளை ஒழுங்காக அணிந்தாள்; கண்களுக்கு மை தீட்டி நெற்றிக்குக் குங்குமப் பொட்டிட்டாள்; எண்ணெய் இட்டுத் தலைமயிரைச் சீவிப் பின்னி முடித்தாள்; பூச் சூடினாள். கையில் நீண்டதொரு தடியைக் கொண்டு வீட்டுக் கருகி லிருந்த பட்டியில் மடக்கி வைத்திருந்த தன்னுடைய ஆடுகளை யோட்டிக்கொண்டு காட்டை நோக்கிச் செல்லத் தொடங்கினாள். மன்னனுடைய மாற்றலரும் அவளிடம் அணுகினர்; அவளுக்கு மகிழ்ச்சி யுண்டாக்கப் பலவாறு பேசிக்கொண்டே அவளுடன் சென்று காட்டை யடைந்தனர்; அங்குக் கரிகாலன் வேட்டை யாடிக் கொண்டிருந்த இடத்தை அம்மடந்தைக்குக் குறிப்பிட்டுக் காட்டித், தம் முடைய ஊர்ப்புறம் நோக்கித் திரும்பினர். குறிப்பிட்ட இடத்தை யடைந்து அம்மடக் கொடி, மன்னனுடைய வரவை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்து ஆடுகளை மேய்த்துக் கொண்டு நெடுநேர மிருந்தாள். அந்நாள் மாலைப் பொழுதும் அணுகிற்று.

காட்டின் நடுவிற் சென்று பல விலங்குகளை மாய்த்துத் திரும்பிய கரிகாலன், இடையன் மகள் இருந்த இடத்தை யடைய லானான். தான் காத்திருந்த இடத்திற்குச் சிறிது தூரத்தில் மன்னன் வந்துகொண் டிருந்ததை யறிந்து அவ் விடைப் பெண், தன் கையிலிருந்த கோலை ஒரு செடிக் கருகில் வீசி யெறிந்து விட்டு, மின்னற் கொடி ஒன்று பெண்ணுருவம் பெற்று உலாவுவதைப்போல் அழகுடன்

ஆடிகளின் பின் நடித்துக்கொண்டிருந்தாள். சிறிது தூரத்தில் வந்துகொண் டிருந்தபோதே அவளைக் கண்டான் அரசன்; நின்று உற்றுப்பார்த்தான்; சற்று முன் னடைந்து கண்ணிமை கொட்டாமல் நோக்கினான்; அன்னப் பேடுகளும் நாணி யொதுங்குமாறு தன் அடிகளைப் பெயர்த்து நடித்துகொண் டிருந்த இடைப் பெண்ணின் எழிலார்ந்த வடிவத்தைக் கண்க ளாரக் கண்டான்; வியப் படைந்தான்; " ஓ! இஃதென்ன புதுமையா யிருக்கின்றதே! இந்நேரத்தில் இங்குத் தனியே இருக்கின்ற இக் கட்டழகி யாவளோ அறிகின்றிலேனே! தேவ மகளிரைப் போலக் காணப்படுகின்றாளே! கால்கள் மண்ணிற் பொருந்துதலால், இம்மடமகள் மானிடப் பெண்ணாகவே இருத்தல் வேண்டும். ஆ! இவளுடைய இயற்கைப் பொலிவை, நான்முகன் எங்ஙனம் வருந்தி படைத்தானோ? ஓவியத் துறையிற் கைபோயவனும் இம்மாதின் வடிவழகைப் பார்த்து ஏட்டில் எழுதமுடியாமல் திகைப்பானே! களங்கமற்று விளங்கும் மதியன்ன முகத்தையும், கருவண்டு படிந்த செந்தாமரை யெனப் பொலியும் விழிகளையும், முத்துக்களை யொத்த பற்களையும், சிறந்த பவளத்தைப்போன்ற இதழையும், கார்மேகத்தை நிகர்த்த கூந்தலையும், திருமகட் கொழுநன் கையில் திகழும் சங்கத்தைப்போல் அமைந்த கழுத்தையும், கழை போன்ற தோள்களையும், காண்டற் கரிய சிற்றிடையையும், மெல்லிய மாந்தளிரைப்போன்ற கை கால் விரல்களையும் படைத்த இம் மங்கையர்க் கரசியின் மெல்லியலைக் கண்டு கல்லும் கரைந்துருகுமே! புல்லும் புகழுமே! காய்ந்து பட்ட மரங்களும் தளிர்க்குமே! வேட்டை யாடி நெடுநேரம் திரிந்து அலைந்து தளர்ந்த என்னுடைய உடம்பு, இந்நங்கையின் அழகைக் கண்டவுடனே ஆறுத லடைந்து மிகக் குளிர்ந்ததே! வில் லம்பினும் இவளுடைய விழியம்பே மிக்க வன்மை படைத்

தது போலும்! அஃது என் மார்பில் தைத்து மனத்தை இன்புறுத்தியதே! இவள் பக்கலில் ஆடுகள் மேய்ந்து கொண் டிருக்கின்றனவே. இம்மடக்கொடி ஒரு காப்பான் மகளாய் இருப்பாளோ? ஓ! அல்லள்! அல்லள்!! இவள் இடையர் குலத்துப் பெண் ணல்லள். இம்மங்கையின் நல்லியலுக்கும் அக்குலத்தின் தன்மைக்கும் சிறிதும் பொருத்த மிலதே! இவ் அரிவை யாவள் என்பதை இவ ளருகிற்சென்று கேட்டறிவேன்," என்று எண்ணி அவளை நோக்கிப் பரிவுடன் நடந்தான்.

இடைச்சியின் பக்கலை யணுகி அன்புடன் அவளைப் பாரதது வளவன, "ஏ பொற்பூம் பாவாய்! நாணின் கொழுந்தே!! நீணில விளக்கே!! மாந்தளிரினும் மென் மைத்தாய உடம்பை யுடைய நீ, கொடிய விலங்குகளும் வேடர்களும் திரியும் இக்காட்டகத்தில் துணை ஒருவரு மின்றி, இவ்வாடுக ளுடன் சற்றும் அச்ச மில்லாமல் உலவு கின்றனையே! நீ யாவள்? இங்ஙனம் ஈண் டிருப்பதேன்?" என்று கேட்டான். இறைவனுடைய மொழிகளைக் கேட்டு உளமிக மகிழ்ந்தாள் அம்மாது; ஆயினும், தன் உள்ளக் குறிப்பை வெளியே காட்டாமல் மிக்க நாணத்தை யடைந் தாள் போல் நடித்தாள்; காற்றால் அசையும் பூங்கொடி யைப் போலத் தன் இடையை யசைத்து அடி பெயர்த்துச் சற்று அப்புறம் விலகி நின்றாள்; தலை குனிந்து கடைக் கண்ணால் அரசனைப் பார்த்துப் புன்முறுவல் பூத்து, மற்றெ தையோ நோக்குவாள் போல் நின்றாள்; மன்னனுடைய கேள்விக்கு மறுமொழி பகர்ந்தாள் அல்லள்.

அவள் அங்ஙனம் பேசாமல் ஒதுங்கி நிற்கவே மற்றும் அவளை நோக்கி அரசன், "நலவியல் நங்காய்! என் கேள் விக்கு விடை யளிக்க உனக்கு விருப்ப மிலதோ? நாணி நகர்ந்து செல்கின்றனையே! நாணம் நங்கையர்க்குரிய தொரு

நல்லணியாகு மென்பது உண்மையே யாகும். ஆயினும், அறிவுடைப் பெண்கள் அதைச் சில விடங்களில் மட்டுப் படுத்தல் வேண்டும். தமக்குத் தீங்கு நேரா தெனத் தெரிந்த இடங்களில் மங்கையர் நாணத்தைக் குறைத் திருத்தல் நல்ல தாகாதா? முப்பெரும் புவியினும் ஒப்பிலா உன் வடி வழகைக் கண்டு உன்னிடம் அன்பு கொண்டேன் யான். என்னிடம் இவ்வாறு நீ நாணி யொதுங்கி வாய் திறவாமல் இருத்தல் அழகாமோ? இனியேனும் உன் வரலாற்றைச் சொல்ல மனம் பற்றுவாயாக," என்று பரிவுடன் வினவினான்.

வேந்தனைக் கடைக் கண்ணால் பார்த்து அப்பெண், "அன்புடைப் பெரியீர்! யான் ஓர் அரசன் மகளே யாவேன். நான் சிறிய குழந்தையா யிருந்த காலத்தில் என்னைப் பெற்றோர், தம்முடைய நாட்டி லிருந்து பகைவ ரால் துரத்தப்பட்டு இக்காட்டை யடைந்தனர்; இங்குச் சின்னாட் காறும் மறைந்து வாழ்ந்திருந்தனர். ஒரு நாள் கொடும் புலி ஒன்று, என் தந்தையை யடித்துக் கொன்று தின்று விட்டது. அதைக் கண்டு என் அன்னை, அலறி யழுது வருந்தினாள்; உயிர் விடக் கருதினாள்; என்னைப் பார்த்து ஏங்கினாள். காட்டி லிருப்பின் விலங்குகளால் கேடு சூழுமென் றெண்ணி என்னை யெடுத் தேகி இக்காட் டின் அருகிலுள்ள ஓர் ஊரில் இடைய னொருவன் வீட்டில் விட்டுச் சென்றாள். அவள் எங்குச் சென்றாளோ? இன்ன மும் உயிருடன் இருக்கின்றாளோ? ஒருகால், கணவன் இறந்தமைக்கு ஆற்றாளாய் அப்பொழுதே உயிர் துறந் தாளோ? யான் அறியேன். அந்நாள் முதல் இதுகாறும் ஓர் இடையன் வீட்டில் நான் வளர்ந்து வந்தேன். இஃதே என்னுடைய வரலாறாகும்," என்று சொல்லிக், கண்ணீர் உகுத்து ஒருவாறு முகவாட்டத்துடன் நின்றாள்.

கள்ள உள்ளத்துடன் உரையாடிய அந்தக் கன்னியி னிடம் விருப்பங்கொண்ட கரிகாலன், சேலை கட்டிய மாதரை நம்பினால் தெருவில் நின்று தியங்கித் திகைப்பரே என்னும் பெரியாருடைய சொல்லை மறந்து, அவ்விடைச்சி யின் பேச்சுக்களை நம்பினான்; அவளுடைய குலத்தையும் அழகையும் கருதி மகிழ்ந்தான்; அந்நாரியை மணக்க இச்சித்தான்; தன் ஆடையால் அவளுடைய கண்ணீரைத் துடைத்து, அவளை நோக்கி, "பொற் பூங்கொடியே! தேன் மொழிக் குயிலே!! மா மரக் கிளியே!!! நீ வருந் தற்க. சென்றவற்றை நினைத்து வருந்துதலால், நாம் யாது பயன் பெறக் கூடியவ ராவோம்? அச்செயலை அறிவுடை யார் முற்றிலும் வெறுப்பரே! இனி நடக்க வேண்டிய வற்றைப் பற்றி ஆய்ந் தோய்ந்து பார்த்து நடத்தலே நன்மைத் தாகும். உன்னைக் கண்ட வுடனே, நீ ஓர் அரசன் மகளாவாய் என்பதை யான் உணர்ந்தேன். நீ நோற்ற நோன்புக ளெல்லாம் பயன் படக்கூடிய காலம், உன்னை நெருங்கிற்று. கடவுள் அருளால் யான் இப் பொழுது உன்னைக் காண நேர்ந்ததும், நீ முற்பிறப்பிற் செய்த புண்ணியத்தின்பாலதே யாகும். மங்கையர் மாணிக்கமே! புகழ் மிகப் படைத்த சிறந்ததாய சோழர் குலத் துதித்து இந்நாட்டை யாளும் கோமான் யானே யாவேன் என்னுடைய குடிகளுக்கு இக்காட்டில் வாழ்ந் திருந்த விலங்குகளால் தீங்கு நேர லாயிற்று. அதைத் துடைக்க யான் இவ்விடத்தை யடைந்தேன்; தற்செய லாய் உன்னைக் கண்டேன்; களி கொண்டேன்; மனத் தளர்ச்சி விண்டேன்; உன் அழகின் எல்லையைக் காணுத லாய கனியை யுண்டேன்; உன்னை மணக்க உறுதி கொண்டேன்; உன் குறையை நீக்க எண்ணங் கொண் டேன்; உன் செல்வ வாழ்க்கைக் குரிய தொரு வழியைக் கண்டேன்; கயல் நெடுங் கண்ணினாய்! தானே வந்தடைந்த

ச்தேவியைத் தள்ளுவார் உளரோ ? இந்நாட்டிற் கரசியாகி உலகம் போற்ற என்னுடன் வீற்றிருத்தலாய பெறுதற் கரிய இன்பத்தைப் பெற உன்னைப் போன்ற அறிவுடை மன்னர் குலத்து மகளிர் மறுப்பரோ ? மாதராய் ! உலகத்தி லுள்ள செல்வங்க ளெல்லாவற்றிலும் உயர்ந்தது, அரசச் செல்வம் என்பதை நீ யுணர்வாய் அன்றோ ? பல்லுயிரும பல உலகங்களும் எல்லாம் வல்ல இறைவன் அருளால் உண்டாகின்றன. செயற்கரிய தவத்தைச் செய்து அவ் விறைவனுடைய பேரருளைப் பெற்றவனே, அவ்வுயிர்களை யும் உலகங்களையும் காத்தற் குரிய இறைவ னாகின்றான். அதனால் அன்றோ ' திருவுடை மன்னரைக் காணில் திரு மாலைக் கண்டேனே என்னும் ' என்று மாமறைப் பெரியார ஒருவர் அருளி யிருக்கின்றார் ? வளம்பட வேண்டாதார் ஒருவர் யாண்டும் இரார். உன் இச்சை யாதோ ? யான் அறிய அவாவுகின்றேன்," என்று இன்பம் பயப்பப் பேசினான்.

காவலனுடைய கருத்தை யறிந்து அந்நங்கை, புன் சிரிப்புடன் அவனைப் பார்த்து "நற்குல வேந்தரே ! உம் முடைய விருப்பத்தை மறுக்க யான் துணிகின்றவள் அல் லள். இன்று முதல் என்றொன்றும் உம்முடைய கருத்திற் கிணங்க நடந்து உமக்கு இன்பம் உண்டாக்கவே இச்சிக்கும் இவ்வடியாள் விரும்புவ தொன்றுண்டு. அஃது, என்னை மணப்பதுடன் என் குலத்தின் உயர்வையும், அழகின் திறத்தையும் நோக்கி, உம்முடைய அரண்மனையி லுள்ளவர், உறையின் முறையினர் முதலியோரினும் என்னைப் பெருமை யுடன் நீர் வைத் திருத்தல் வேண்டும் என்பதே யாகும்," என்று மொழிந்தாள்.

அவளுடைய வேண்டுகோளின் வண்ணம் நடப்பதாய் மன்னன் இசைந்து, தன் படைகள் தங்கி யிருந்த இடத்

திற்கு அவளை யழைத் தேகினன்; அங்கிருந்த தன் யானை யின்மீது அவளை யேற்றிக்கொண்டு படைகள் புடை சூழத் தன்னுடைய நகரத்தை நாடிச் சென்றான்; அவ்விடத்தை யடைந்ததும் அப்பெண்ணை அரண்மனையிற் கொண்டுபோய் விட்டுத் தக்கபடி நடத்தினன். நல்லதொரு நாளில், அனை வரும் கொண்டாட அம்மாதை விதி முறைக் கிணங்க அவ் வேந்தன் மணந்தான். அன்று முதல் அந்தக் காப்பான் மகள், கரிகாலனுடன் இருந்து, எல்லா இன்பங்களையும் நுகர்ந்து இனிதாக வாழ்ந்து வரலானாள்.

அடைதற் கரிய உயர்ந்த நிலைமையை யடைந்த இடை யன் மகள், சிறந்த செல்வியாய் வாழ்ந் திருந்த நாளில், மன்னனைச் சேர அவளை முன்னர் தூண்டிய வஞ்சகர், அவளுடைய கணவன் அறியாவண்ணம் அவ்வரசி யிடம் சில பாதகரை யேவி பலவற்றைப் பேச லாயினர். தம் முடைய கருத்தை முடித்துக்கொள்ள அப்பகைவர், அரச னையும், அவனுடைய சுற்றத்தினர் முதலியோரையும் இழித் துரைத்துச் சண்டைக் கிழுத்து வருத்துமாறு அம்மங்கைக் குச் செய்தி சொல்லி யனுப்பினர். சொல்பவருக்கு மதி யில்லாவிடினும் கேட்பவருக்குப் புத்தி யிருக்க வேண்டாமா என்று அனைவரும் சொல்லுவர். அஃது அந்த இடைப் பெண்ணினிடம் பழுது பட்டது போலும்! பிறர் சொல்லை நம்பி, ஆய்ந் தோய்ந்து பாராமல் ஒரு வேலையைச் செய்ய அறிவுடையார் தொடங்குவரோ? ஆய்ந் தோய்ந்து பாரா தான், தான் சாகக்கடவன் என்னும் முதுமொழிக்குமாறாக நடப்பவர் எப்பொழுதும் துன்பமே யடைவர். அறிவற்ற இடைப்பெண், தான் அடைந் திருந்த உயர்வைச் சிறிதும் எண்ணிப் பாராமல் தன் நாயகனுடைய பகைவர் சொற் களை மேற்கொண்டு அரண்மனையி லிருந்த அனைவ ரிடமும் ஒழுங்கீனமாய் நடக்கத் தொடங்கினாள்; ஒவ்வொருவரை யும் பலவாறு பழிக்க லானாள்.

புதிய அரசியின் அடாத செயல்களைக் கண்டு வேந்தனுடைய சுற்றத்தினரும், மற்றையோரும் அவ்வரசியினிடம் மிக்க சினங்கொண்டனர்; மன்னனிடமும் வெறுப்படைந்தனர். அரசன் கோயிலில் இருந்த முதியோர் சிலர் அம்மங்கையின் செயலைப்பற்றி வளவனிடம் முறையிட்டனர். 'உண்மையில் அம்மாது அரண்மனையிலிருப்பவர்க்குத் தீங்கு விளைவிக்கின்றாளா' என்பதை நேரிற் கண்டறியக் கருத்துட்கொண்டு கரிகாலன், தன் மாளிகையில் மறைந்திருந்து அப்பெண்ணினுடைய குணங்களையும் செயல்களையும் சோதித்தான். அங்ஙனம் பார்த்ததால் அந்தச் சோழன் அந்நங்கையினிடம் ஐயங்கொண்டான்; அவளுடைய தாழ்ந்த சொற்களையும் நடத்தைகளையும் நன்றாய்க் கருதிப் பார்த்து, அவள் அரசர் குலத்திற் பிறந்தவள் அல்லள் என்னும் மனத் துணிவை யடைந்தான்; தன்னை வஞ்சித்துக் கெடுக்க வந்த தொரு தாழ்ந்த குலப் பெண்ணே அவளாவாள் என்று உறுதியாக எண்ணி முடித்தான்; இன்னும் அவளை நன்றாய்ச் சோதித் தறியவேண்டுமென்று எண்ணங் கொண்டான்; அம்மாதின் பிறப்புச் செய்தியைக் கண்டறியக் கருதி முயன்றான்.

ஒரு நாள் இரவின் முற்பொழுதில் அம்மடந்தையின் படுக்கைறைக் கருகில் மறைந் திருந்து அவளுடைய குணத்தையும் பேச்சுக்களையும் கவனித்தான் கரிகாலன். அப்பொழுது, அந்த அரசியின் தோழிகளுள் ஒருத்தி, பசுவின் பாலை நன்றாய்க் காய்ச்சிக் கொண்டுவந்து அவளிடம் கொடுத்தாள். அதைக் கையிற் பெற்று அச்சீமாட்டி, தான் உயர்ந்த குடும்பத்திற் பிறந்து நிறைந்த செல்வத்திற் சிறப்புடன் வளர்ந்தவள் என்று அரண்மனையி லிருந்தவர் எல்லாரும் கருத வேண்டுமென்னும் எண்ணத்தை உட்கொண்டு, அந்தப் பாலிற் சிறிது வாயில் ஊற்றிச் சேடியை

வெறுப்புடன் நோக்கி, “அடி! இஃது என்னடி!! அறிவு கெட்டவளே! அப்புறம் செல்! ஆட்டின் பாலைக் கொண்டு வந்து எனக்குக் கொடுக்கின்றனையே! இந்த அரண்மனையில் உள்ளவர் எல்லாரும் ஆட்டுப் பாலைத்தான் பருகுகின்றனர்போலும்! அடி பேதையே! இஃது எனக்கு வேண்டாம்,” என்று செருக்குடன் கூறி, அப்பாலைக் கீழே கொட்டிப், பாலிருந்த பாத்திரத்தையும் விட்டெறிந்தாள்; பொல்லாது சொல்லி மறைந் தொழுகும் பேதை, தன் சொல்லாலே தன்னைத் துயர்ப் படுக்கும் என்னும் ஆன்றோருடைய சொல்லுக்கு இலக்கானாள். மணலில் மூழ்கி மறைந்து கிடக்கும் நுணல் தன் வாயால் கெடும் என்பதற் கேற்ப மதியற்ற அம்மாது, தன் வாய் மொழியினாலே தனக்குக் கேட்டைத் தேடிக்கொண்டாள்.

அந்த இடையர் குலப் பெண்ணினுடைய சொல்லையும் செயலையும் மறைந் திருந்து கவனித்த கரிகாலனுக்கு அடங்காச் சின முண்டாயிற்று. “இவள் மன்னர் குலத்துப் பெண்ணல்லள்; உண்மையில் இடையன் மகளாகவே இருத்தல் வேண்டும். இடையர் குலத்துக் கேற்ற குணங்களும் செயல்களுமே இவளிடம் நிரம்பி யிருக்கின்றன. அரசர் குலத்தில் உதித்தவள் என்பது உண்மையாயின், அக்குலத்திற் குரிய குணங்களிற் சிலவாயினும் இவளிடம் பொருந்தி யிருத்தல் வேண்டுமே! அக்குணங்களுள் ஒன்றையும் இவளிடம் ஒருபொழுதும் யான் கண்டிலனே! குலத்தளவே யாகுமாம் குணம் என்னும் அறிஞருடைய உரைக் கிணங்க இந்த அரண்மனையிலும் இவளுடைய குணம் மாறுபடுதலின்றி விளங்குகின்றது. இவள் யாவளோ என்னை வஞ்சித்துக் கெடுக்க வந்த கள்ளியே யாவாள். இவளுடைய பொய் யுரையையும், போலித் தன்மையையும் [அ]றியாமல் யான் மோசம் போனேன். இந் நாரியின்

உண்மை வரலாற்றை இன்னே கண்டு பிடித்தல் வேண்டும். அடித்துப் பிடுங்கினு லொழிய, மயிலே! மயிலே! என்று இறைஞ்சி நின்றால், இறகு கிடைக்குமோ? அடிமேல் அடியடித்தால், அம்மியும் நகரும் என்றன்றோ அறிவுடை மக்கள் சொல்வர்?" என்று அவ்வேந்தன் நினைந்து, உடனே தான் இருந்த விடத்தை விட்டு விரைந்து சென்று தன் அறையை யடைந்தான்; உடைவாளைக் கையிற் கொண்டான்; கடுகி நடந்து காப்பான் மகளை யணுகினான்; கொடு வரிக் குருளை யொப்ப உறுத்துச் சீறினான்; வாளை நீட்டி அம்மங்கையை நோக்கி, "அடி கொடியவளே! என்னை வஞ்சித்த கள்வியே!! நீ எக்குலத்தினள்? அரசர் குலத்துப் பெண்ணல்லள் நீ என்பதை யான் நன்கு சோதித் தறிந்தேன். உன்னுடைய வரலாற்றின் உண்மையைச் சற்றும் ஒளிக்காமல் இப்பொழுது நீ தெரிவித்தல் வேண்டும். இன்றேல், எனனுடைய வாளால இதோ உனனைச் சிதைத்துக் கொல்வேன்," என்று உள்ளங் கொதித் தோதி யதட்டி, அவளுடைய கூந்தலைத் தன் இடது கையால் இறுகப் பிடித்து, வலது கையி லிருந்த கூரிய வாளை அவளுடைய கழுத்துக்கு நேரே ஓங்கிப் பிடித்தான்.

அந்தோ பாவம்! என்ன செய்வாள் அந்நங்கை? கொண்டவ னுடைய கடு மொழிகளையும் கொடுஞ் செயலையும் பார்த்து மிக்க அச்சங்கொண்டாள்; மனங் கலங்க, உடல் நடுங்க, விதிர் விதிர்த்து அலறி, நாக்குழறத் தன்னுடைய உண்மை வரலாற்றையும், மன்னனுடைய பகைவர் செய்த செயல்களையும் உரைத்துவிட்டாள்; தான் அவனை அடைக்கல மடைந்ததாகக் கூறிக் கும்பிட்டுத் தன்னைக் கொல்ல வேண்டா மென்று இறைஞ்சினாள். "எய்பவன் எய்தால் அம்பு என்ன செய்யும்? மாற்றலருடைய கொடிய சூழ்ச்சிக்கு உட்பட்ட பேதை இவளாவாள்,"

என்று சொல்லிக் கரிகாலன், தான் கொண்ட சினத்தி னின்று தணிந்து, தன் மனைவியின் கூந்தலை விட்டுச் சரே லெனத் தன்னுடைய அறைக்கேகிப் படுத்துறங்கினான். தன்னுடைய பஞ்சணையின் மீது படுத்துத், தன் நாயக னுடைய பகைவருடைய சொல்லால் தனக்கு நேர்ந்த தீங்கை யுன்னி யுன்னி வருந்தினாள் அம்மாது. மறுநாட் காலையிலேயே அம்மடந்தையைத் தனியே ஒரு மாளிகை யிற் குடியிருக்கச் செய்து, அன்று முதல் அவளிடம் ஏற்ற வாறு மன்னன் நடந்துவர லானான். அவ்வரசியும், தன் தலைவன் ஆணைக்கு அடங்கி ஒழுங்குடன் வாழ்ந்திருந்தாள். அவ்வாறு கரிகாலன் செய்ததைக் கண்ட அவனுடைய உறவினர் பெரியார் முதலியோர், அவனிடம் அன்பு பூண்டு ஒழுகினர்.

## பகுதி - எ

## சிறப்புப் பெயர்களைப் பெறல்

வேளாண்மை வேள்வியோ டொப்பதாகும் என்னும் சான்றோருடைய சொல்லை உறுதியாக மனத்திற் கொண்டு, அவ்வேளாண் வாழ்க்கை முன்னேற்ற மடைந்து விளங்கப் பாடுபட்ட கரிகாலன், தன் நாட்டிலுள்ள விளைநிலங்கள் எல்லாவற்றையும் அளந்து, ஒவ்வொரு வேளாளரும் எவ் வெவ்வளவு நிலத்தை யுழுது பயிர் செய்கின்றனர் என்பதை யளந்து கணக்கிட்டு, ஒவ்வொருவரும் இறுக்கவேண்டிய செய்க்கடன். இவ்விவ்வளவு என்பதை வரை யறுத்துத் தெரி ரீர்வையை உரிய காலந்தோறும் தவறுத லின் றிப் பெற இச்சித்தான்; அரசியல் பணியாளரை விட்டு

எல்லா நிலங்களையும் அளந்தறிந்தான். குடிகள் எல்லாரையும் வரவழைத்து, அவரவர் உழுது பயிரிடும் நிலங்களின் அளவைக் கூறுமாறு அவன் கேட்டான். அரசனுடைய ஆணைக் கிணங்க ஒவ்வொரு வேளாளனும், தான் தான் பயிர் செய்துவந்த நிலத்தின் அளவைக் கண்டறிந்து, மன்னனிடம் சொல்லிச் சென்றான்.

ஒரு வேளாளன் ஏராளமான நிலங்களை யுழுது பயிரிட்டு, அவற்றால் விளையும் பயனைக் கொண்டு நல்வழியில் அறஞ் செய்து வந்தான். அவன், தான் பயிர் செய்யும் நிலங்களின் அளவை வேந்தனிடம் குறைத்துச் சொல்லிப் போனான். அவனிடம் ஐயங் கொண்ட அரசன், ஒரு சான்றோனை யேவி, அக்குடியானவனுடைய நிலம் முழுவதையும் அளந்து தெரிவிக்குமாறு கட்டளை யிட்டான். மன்னனுடைய ஆணைக் கிணங்க அச்சான்றோன் சென்று, குறிப்பிட்ட வேளாளனுடைய நிலங்களை யளந்து, அவை, அவன் அரசனிடம் சொன்ன அளவிற்குப் பன்மடங்கு மிக்கிருக்கக் கண்டு, "அறஞ் செய்தலையே தன்னுடைய முதன்மையான தொழிலாகக் கொண்ட இவ்வேளாளன், பலர்க்கும் உதவி செய்தற்பொருட்டு ஏராளமான நிலத்தைக் கரந்துழுது அரசனிடம் பொய் யுரைத்திருக்கின்றான். இவனுடைய செயலை மன்னனுக்கு எடுத் தியம்புவேனாயின், இவனைக் கடுமையாகத் தண்டிப்பான் அவ்வேந்தன். அதனால், இவனுடைய அறச்செயலுக்கு இடையூறு நேரும். குற்றவாளி என்று அரசனிடம் காட்டிக் கொடுக்காமல் இவனைக் காத்தலே நன்மைத் தாகும். 'நில அளவில் யாதொரு வேறுபாடும் இலது' என்று வேந்தனிடம் கூறிவிடுவேன்," என்று எண்ணிக், கரிகாற் சோழனை நண்ணித், தான் கருதியவாறே அவனிடம் உரைத்து அப்புறம்

நிலத்தை யளக்கப் போக்கிய சான்றோனுடைய சூழ்ச்சியையும், நிலத்தைக் கரந் துழுத வேளாளனுடைய செயலையும் ஒருவரு மறியா வண்ணம் ஒற்றரை விடுத்துத் தெரிந்து கொண்ட கரிகாலன், அவ்விருவரையும் தன்முன் வரவழைத்து, அவரை நோக்கி, "நீவிர் இருவீரும் கள்ளத் தன்மையால் என்னை யேமாற்றப் பார்த்தீர்! ஆதலால், உம்மைக் கொடிய தண்டனைக் குள்ளாக்க வேண்டும். இவ் வேளாளன் என்னிடம் கரந்தார்கின்ற நிலத்தின் பயனை நல்லறஞ் செய்தலிற் செலவிடுகிறான் என்பதைப் பலரால் கேட்டறிந்தேன். அவ்வறத்தை நோக்கி உம்மிருவரையும் இப்பொழுது மன்னித்தேன். இனிமேல் நீவிர் இருவரும் எதைக் கருதியும் பொய் சொல்லி யொழுகுதலை விட்டொழித்தல் வேண்டும். உற்றது சொன்னால் அற்றது பொருந்தும் என்னும் அரிய நீதிமொழியை உறுதியாகக் கடைப்பிடித்து நடப்பவரே, எங்கும் பெருமையையும் இன்பத்தையும் அடைவர்," என்றுகூறி நல்லறிவுத்தி புகட்டி அவரை அப்புறம் போகப் பணித்தான். வளவனுடைய அவ்வரிய செயலை யறிந்து அனைவரும், அவனுடைய குணத்தை மெச்சிக் கொண்டாடினர்.

தன் நாட்டுமக்கள் மேம்பாடடைதற்காகப் பலவாறு முயன்று அருஞ் செயல்கள் பலவற்றைச் செய்து முடித்த கரிகாலன், வரப் புயர நீர் உயரும், நீருயர நெல் உயரும், நெல்லுயரக் குடி உயரும், குடி யுயரக் கோனுயரும் என்னும் கட்டுரைக் கிணங்கிய அரியதோர் எண்ணத்தை மனத்துட் கொண்டான். காவிரி யாற்றின் வெள்ளப்பெருக்கால் பயிரிடும் நிலங்களுக்கு நேரும் தீமையை யொழித்து, அவ் வாற்றை வளம் படுத்தி, வேளாண் வாழ்க்கையையும் வாணிகத்தையும் மற்றும் பெருகச் செய்யக் கருதி அறிவில் உயர்ந்த அவ்வரசன், இருமருங்கினும் பொன்னிக்குக் கரை

வகுக்க எண்ணித் துணிந்தான். உடனே அவ்வேந்தன், தன் ஆட்சிக்குட்பட்ட எங்கெந்த ஊர்வழியாக அந்நதி செல்கின்றதோ, அந்தந்த ஊரிலிருந்த சிற்றரசர்களெல்லாரையும் அக்காவிரிக்குக் கரை கட்டுமாறு கட்டளை யிட்டு ஓலை யெழுதி யனுப்பினன்; ஒவ்வொரு சிற்றரசனுக்கும், அவனவன் கரை வகுக்கவேண்டிய இடத்தை யளந்து பங்கிட்டுக் கொடுக்கும்படி தன் பணியாளரைப் போக்கினன். அரசனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து எல்லாச் சிற்றரசரும், தத்தமக்குப் பங்கிட்டுக் கொடுத்த இடத்திற் செவ்வனே காவிரிக்குக் கரை யமைக்க லாயினர். முகரி என்றும் பிரதாப ருத்திரன் என்றும் பெயரிய சிற்றரசன் ஒருவன் இருந்தான். அக்குறுநில மன்னன் ஒருவன் மாத்திரம் சோழனுடைய ஆணைக்கு அடங்கி நடக்காமல் செருக்குற் றிருந்தான். அதை யறிந்த வளவன், சின மடைந்து, எதிர்த்துப் போர் புரிந்து அம்முகரியைப் பற்றி வருமாறு வீரர் சிலரை யேவினன்.

தன்னை யெதிர்த்துச் சண்டை செய்ய மன்னன் வீரரை விடுத்தான் என்னும் செய்தியைத் தெரிந்து முகரி, உடனே தன் ஊரை யொழித்து எங்கேயோ போய் அவ்வீரர்கட்கு அகப்படாமல் மறைந்து கொண்டான். முகரியை நாடி வந்த வீரர், அவனைக் காணாமையால் தம் கொற்றவனிடம் திரும்பிச் சென்று, முகரி ஒளிந்துகொண்டான் என்பதைத் தெரிவித்தனர். உடனே காவிரிநாடன், ஓவியர் சிலரை வரவழைத்து, அந்தப் பிரதாப ருத்திரனுடைய உருவத்தைப் படத்தில் எழுதிக் கொணரக் கட்டளை யிட்டான். ஓவியரும் விரைவில் முகரி வடிவத்தை யெழுதிக் கொணர்ந்து மன்னனிடம் காட்டினர். அந்தப் படத்தைப் பார்த்துச் சோழன், "ஓ! இவனுக்குக் கண்கள் மூன்று இருக்கின்றன. இம்மிகைக்கண் இருப்பதனால் என் ஆணையைப்

பொருட்படுத்தாமல் இவன் இருந்தான் போலும்," என்று சொல்லித் தன் கையிலிருந்த கூரிய வேலால் படத்திருந்த சிற்றரசனுடைய நெற்றிக் கண்ணைக் குத்தினன். அப்பொழுதே நெடுந் தூரத்திலிருந்த முகரியினுடைய கண்கள் பழுதுபட்டன. அரசன் இங்குப் படத்தில் அழிக்கவே, அங்கு உண்மையில் அக்குறு நில மன்னனுடைய கண்கள் அழிய, அவன் குருடனானன்.

காவிரி நாடன் செயலால் தன்னுடைய கண்கள் அழிந்தன வென்று உணர்ந்த முகரி, "ஓ! ஓ!! கரிகாற் சோழன் கடவுள் தன்மை பொருந்தி யுள்ளவன் போலும். அவன் ஆணையைக் கடத்தல் எவர்க்கும் கூடாததே யாகும். அவனுடைய கட்டளைக்கு அடங்கி நடக்காவிடில் இன்னும் எத்தகைய துன்பம் யான் அடைவேனோ," என்று சொல்லி யஞ்சி, அன்றே புறப்பட்டோடிச் சோழனை யணுகிக், கீழே விழுந்து அவனுடைய அடி யிணையை வணங்கித், தான் செய்த பிழையைப் பொருத்தருள வேண்டினன். அக்குறு நில மன்னனுடைய வேண்டுகோளுக்கு மனமிரங்கி, அவனை மன்னித்தான் கொற்றவன். கரிகாலனிடம் விடைகொண்டு தன் ஊர்ப்புற மடைந்து, தான் கரை யமைக்கப் பங்கிட்டு விடப்பட்ட இடத்தில் விரைவில் உறுதியாகக் கரை கட்டி முடித்துத் தன்னை மன்னித்து விடுத்த மன்னர் மன்னனுக்கு அம் முக்கண்ணன் மகிழ்ச்சி யுண்டாக்கினன்.

மேற்கூறிய முகரி என்பானுக்கு மூன்று கண்கள் இருந்தன வென்று சொல்லுதல் எங்ஙனம் பொருத்த முடைத்தோ? கண்ணைப் போன்ற வடிவம் யாதாயினும் அவன் நெற்றியில் இருந்ததோ? அன்றி, உருத்திரன் என்னும் தேவற்கு நெற்றியிற் கண்ணுண் டென்று கூறப்படுதல்

போலப் பெயர் ஒற்றுமை நோக்கி அந்தச் சிற்றரசனுக்கும், நெற்றிக்கண் கூறப்பட்டதோ ?

சிற்றரசர் எல்லாரும் தன்னுடைய ஆணையைத் தலைமேற் கொண்டு காவிரி நதிக்கு இரு மருங்கினும் உறுதியாகக் கரை கட்டிய பின்னர் சோழன், பற்பல வாய்க்கால்களையும், வடி மதகுகளையும் அந்நதியின் இரு பக்கங்களிலும் அமைத்துத், தண்ணீரை யழிவுறுமற் பாதுகாத்து உழவுக்கும் வாணிகத்திற்கும் அந்நதி பேருதவி யாமாறு செய்தான். அதனால் வேளாண் வாழ்க்கையும் வாணிகமும் மிகப் பெருகி யுயர்ந்த நிலைமையை யடைந்தன. அந்நாட்டு மக்கள் எல்லாரும் பெருஞ் செல்வ ராயினர். எகிப்து நாட்டை நயில் என்னும் நதியின் நன்கொடை என்றாற் போலச் சோணாட்டைப் பொன்னியின் நன்கொடை என்று தமிழ்ப் பெருமக்கள் புகழ்ந்து உரையாடுவ ராயினர்.

காவிரி யாற்றின் நீர் மலிவாலும் நில வளத்தாலும் அந்நாட்டிற் செந்நெல் முதலியன விதைத்த ஒன்று ஆயிரமாக விளைந்திட, அவற்றை வைத்தற்குத் தம் வீடுகளில் இடம் பற்றாமையின் கண்ட விடங்களிற் கொட்டுவ ராயினர் நிலம் படைத்த மக்கள். சோழ நாடு நீங்கப் பிற நாடுகளில் மிக வருந்திப் பாடு பட்டு விளைவிக்கும் விளையுளெல்லாம், காவிரி புரக்கும் நாட்டிற் கழனிகளில் அரிகாலின் கீழ் உகும் நெல்லுக்கும் அளவிற் சால்கிலவாம் என்று காவிரி சூழ் நாட்டின் விளையுளையும், மற்றை நாடுகளின் விளையுள்களையும் ஒப்பிட்டுக் கூறியுள்ளார் புலவர் ஒருவர். அந்நாட்டிலிருந்த வேளாளர் அனைவரும், அறத்தையே கருதித் தம் வீடுகளை நாடி வந்த விருந்தினரைக் கண் குளிர நோக்கி வரவேற்று, இனிய மொழிகளைப் பேசி, அறுசுவை உண்டி அன்புடன் அளித்துக் களித்து வாழ்ந்திருந்தனர்.

அவ்வள நாட்டில், வீடுகள் தோறும் விருந்தினர் பொருட்டுச் சோறு வாக்கிய கொழுங் கஞ்சி, ஆற்றைப் போலப் பரந்தொழுகிக் காளைகள் முதலியன சண்டை செய்வதனால் சேறாகித், தேர்கள் ஓடுவதனால் துகள் எழுந்து, கோயில்களிலிருந்த சித்திரங்களை அழுக்கடையுமாறு செய்யுமாம் என்று அறிஞர் ஒருவர் சொல்லிப் போந்தார்.

வேளாண்மை பெருகிப் பெரும் பயன் தருதற்கு வேண்டியவற்றைச் செய்து நாட்டை அங்ஙனம் வளம் படுத்திய கரிகாலனுக்குத் தவறுதலின்றிக் குடிகளெல்லாரும் இறை செலுத்தி வந்தனர். அக்குடிகள் அனைவரும், தம் கொற்றவனிடம் பேரன்பு பூண்டிருந்ததுடன் அவற்கு நன்றி செலுத்தும் கடப்பாட்டையும் உடையவராய்த் தாம் கொண்ட நன்றிக்கு அறிகுறியாய் அவ்விறைவனைக் கரிகாற் சோழன், கரிகால் வளவன், கரிகாலன் என்று வழங்கிவந்த பெயர்களை யொழித்துப் பெருவளத்தான், கரிகாற் பெருவளத்தான் என்னும் சிறந்த காரணப் பெயர்களை யிட்டு அழைக்க லாயினர். தீம்புனல் தந்து நாட்டுக்கு உயிர் என விளங்கிய காவிரி யாற்றைப் புண்ணிய நதி என்றும் பொன்னி என்றும் புகழ்ந்து கொண்டாடி அம் மக்கள், இன்பப் பெருக்கி லாழ்ந் திருந்தனர்; உறுப்பிற் சிறந்த கண்ணினும் உயர்வாகத் தம் கொற்றவனைக் கருதி யிருந்தனர்.

செல்வத்திலும் நாகரிகத்திலும் நாடு மேன்மை யடைதற்கு வாணிகமும் இன்றியமையாத தாகும் என்பதைப் பெருவளத்தான் நன்கு அறிந்தவ னவான். தன் நாட்டில் வாணிகத்துறையைப் பெருக்கப் பெரு நோக்கங் கொண்டிருந்த அவ்வறிவுடையோன், பற்பல தொழில்களில் வல்ல பிற நாட்டு மக்கள் பலர்க்கும் சோணாட்டிற் குடி புகுந்தக்க இடங் கொடுத்தான். அங்ஙனம் குடியேறியவர்,

பலவகைத் தொழில்களை மேற்கொண்டு வாணிகத்தைப் பெருக்கினர். மரக்கலங்களுடைய போக்கு வரத்துக்கு ஏற்ற வண்ணம் பொன்னி யமைந்து கிடந்ததால் அவ்வள நாடு முழுவதிலும் பலவகை வாணிபங்கள் பரவி யிருந்தன. பல்வேறு வகைத்தாய கைத்தொழில்கள் நிறைந்திருந்தன.

வளவன் ஆணையால் சீனர், யவனர், துருக்கர் முதலி யோரும், தத்தம் நாட்டுப் பொருள்களை நாவாய்களில் ஏற்றிக் கொணர்ந்து, மருவூர்ப் பாக்கத்தில் தங்கி வியா பாரஞ் செய்து சோழ நாட்டை வளமுறச் செய்தனர். சோணாட்டு வியாபாரிகள், தம்முடைய பண்டங்களையும், பிற நாட்டினர் பண்டங்களையும் ஒன்றாகவே கருதிப் பொய் பேசுதலின்றி, நடுநிலைமை யுடையவராய் வாணிபஞ் செய்து, நல்வழியிற் பொருளை ஈட்டலானார்கள்.

பிற நாட்டு மக்கள் கப்பல்களில் ஏற்றிக் கொண்டுவந்த பொருள்களை எவரும் திருடா வண்ணம் காத்தலில் ஊக்கங் கொண்டிருந்த சுங்கங் கொள்ளும் பணியாளர், கதிரவன் தேரிற் பூட்டிய குதிரைகளைப் போலச் சோம்பல் என்ப தின்றி வேற்று நாடுகளி லிருந்து துறைமுகத்தில் வந்திறங் கிய பல கோடிக்கணக்கான பண்டப் பொதிகளைக் கணக் கிட்டுப், புலி முத்திரை பொதித்து, அப்பொதிகளுக்காகப் பெறவேண்டிய சுங்கத் தொகையை உண்மைக் கிணங்க வாங்கி, அப்பொதிகளைப் பண்டசாலைகளுக்குப் போக்குவர்; அவ்வாறே உள்நாட்டி னின்றும் வேறு நாடுகளுக்குக் கொண்டுபோக வேண்டிய பொதிகளையும் கணக்கிட்டுச் சுங்கம் பெற்று நாவாய்களில் ஏற்ற விடுவர். ஏற்றுமதி இறக்குமதிகள் ஒவ்வொரு நாளும் இரவும் பகலும் ஓய் வின்றிக் காவிரிப்பூம் பட்டினத்துத் துறைமுகத்தில் நடை பெற்று வந்தன.

பயிர்த் தொழிலுடன் வாணிகமும் சிறக்கவே அவ்வள நாட்டு மக்கள் எல்லாரும், பெருஞ் செல்வராயினர். குடிகள் அத்தகைய நிலைமையி லிருந்த காலத்திற் கோமான் எத் தகைய நிலைமையில் இருந்திருப்பான் என்பது சொல்லா மலே ஒவ்வொருவருக்கும் விளங்கு மன்றோ? வாணிபத்தை வளம் படுத்த இன்றியமையாதவற்றைச் செய்து முடித்து, நாடு முற்றிலும் செல்வம் நிறைந்திருக்கச் செய்த கரி காலனைப் பெரியார் பலரும், உள்ளடங்கா மகிழ்ச்சியுடன் திருமா வளவன் என்று வாயார அழைக்க லாயினர்.

## பகுதி - அ

### நாவலந்தீவை ஒ கீழாக்கல்

பல வகையானும் சிறந்து அறநெறியினின்று சிறி தும் பிறழுத லின்றித் திருமா வளவன் செங்கோல் செலுத் திச் செம்மாந்திருந்த காலத்தில், அவனுடைய தாயா திகளாய ஒன்பதின்மரும் அழுக்கா றடைந்து, அவ்வரச னுக்கு இன்னல் புரியக் கருதிச் சோழ நாட்டிற் பல குழப் பங்களை உண்டாக்கினர். பெரு வளத்தானுக்கு வன்மை யில் மிக்க இரு கூட்டத்து வேளிர்கள், அன்பார்ந்த தண் டத் தலைவர்களாய் அமைந் திருந்தார்கள். பகைவருடைய சூழ்ச்சிகளால் தங்களுடைய அரசனுக்கு யாதொரு கெடு தியும் நேராமல் அவர்கள், கருத்துடன் அரசனைக் காத்து வந்தார்கள். மாற்றலர்களால் உண்டாகிய குழப்பங்களை அத்தண்டத் தலைவர்களை யேவி அறக் களைந்தான் கரிகா லன். தான் முன்னிய பகையை முடித்தன்றிச் சினம் தணியப் பெறாத அவ்வரசன், தன் தாயாதிகளுடைய கெட்ட செயல்க ளெல்லாவற்றையும் பார்த்து மிக வெகுண்

டான்; அக்கொடியவரைப் பிடித்துத் தக்கவாறு தண்டிக்க எண்ணங் கொண்டான். தம்மிடம் வேந்தன் கொண்ட சீற்றத்தை யறிந்து அப்பகைவர், அஞ்சிச் சேர நாட்டிற் கோடினர். அந்நாளில் மாந்தை என்னும் ஊரைத் தலை நகரமாகக் கொண்டு சேரமான் பெருஞ் சேரலாதன் என்னும் மன்னன், அந்நாட்டை யாண்டிருந்தான். அவன், வீரத்திலும் கொடையிலும் சிறந்து தன் குடிகளை அன்புடன் பாதுகாத்து வந்தவனாவான். அந்தச் சேரனை யணுகி, அவனிடம் பலவாறு பேசி, அவனுக்கும் கரிகாலனுக்கும் பெரும் பகை யுண்டாகுமாறு கலக மூட்டி விட்டனர் கரிகாலனுடைய மாற்றலர்.

பெருஞ் சேரலாதன், வளவனுடைய நுண்ணறிவையும் தோள் வன்மையையும் துணை வலியையும் குறித்து நன்றாய் ஆராய்ந்து பார்த்துப், பாண்டிய னொருவனையும், நாங்கூர் அழுந்தூர் என்னும் ஊர்களி லிருந்த இரு கூட்டத்தினராய வேளிர் நீங்க மற்றைப் பதினொரு கூட்டத்து வேளிர்கள் முதலிய குறுநில மன்னரையும் தனக்குத் துணையாகச் சேர்த்துக்கொண்டு சோழ நாட்டின் மீது படை யெடுத்து வரத் தொடங்கினான். அந்தச் சேரன் செயலை முன்னதாக அறிந்த பெருவளத்தான், சாலச் சினந்து, போர் புரிந்து அவ்வரசனை யடக்குதற் குரிய இடத்தை நாடிக், கணக்கற்ற தன்னுடைய சேனைகளைத் திரட்டிக்கொண்டு, வெண்ணி என்னும் ஊர்ப் புறத்தை யடைந்து, பெருஞ் சேரலாதனுடைய வருகையை யெதிர் பார்த்திருந்தான். வெண்ணி என்பது இப்பொழுது தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள கோயில் வெண்ணி என்னும் ஊராய் இருத்தல் வேண்டு மென்று அறிஞர் ஊகிக்கின்றனர்.

சேரமானுடைய படைகள் வெண்ணியை யணுகின. உடனே சோழனுடைய சேனைகள் அப்படைகளை யெதிர்த்

தன. இரு திறத்துச் சேனைகளும் கை கலந்து கடும் போர் புரிந்தன. எண்ணிறந்த சேனைகள் மாண்டன. மிக்க கொடுமையுடன் சண்டை நடந்துகொண் டிருந்த காலத்திற் சேரனுடைய படையைச் சின்ன பின்னமாக்கிச் சிதறி யோடக் கரிகாலனை போர்க்களத்தின் இடையில் நின்று அடித்தான். அவ்வீரனைப் பெருஞ் சேரலாதன் எதிர்த் தான். அவ்விரு மன்னரும், சிங்க மொன்றுடன் ஒன்று சீறு செருக் கெனும்படி ஒருவரை ஒருவர் எதிர்த்து விண் ணும் மண்ணும் அச்சமுற மலைந்தனர். அப்பொழுது, சோழர்குல வீரன் மிக வெகுண்டு, உழுவை கண்ட வாளு கிர் மடங்கலைப் போலச் சீறிச் சேரனுடைய மார்பைப் பிளக்கத் தன் கையிலிருந்த வடிவேலை உலகம் அதிரும்படி விட்டெறிந்தான். இராமபிரானுக் குகந்த இலக்குவனே டொப்பக் குறிப்பிட்டு அடிப்பதிற் கைதேர்ந்த வளவனுடைய கூரிய வேலால் ஐயோ, கொடுமை மிக விளைந்தது. அவ் வேல், சேரனுடைய சட்டையைக் கிழித்து, மார்பைப் பிளந்து, உடலைத் துளைத்து, ஊடுருவி முதுகின்புறத்தே வெளிப்பட்டது. பெருஞ் சேரலாதன் அடியற்ற மரம் போல் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். அவனுக்குத் துணை யாக வந்த பாண்டியன், குறுநில மன்னர் முதலியோர் எல் லாரும், அஞ்சி விதிர் விதிர்த்து வெந்நிட் டோடினர். கரிகால் வளவன் வெற்றிமாலை சூடினான். அவனுடைய படைகள் ஆரவாரித்து மகிழ்ந்தன. வேளிர் அனைவரும் வெற்றி முழக்கம் கொண்டாடித் திருமா வளவனை வாழ்த்தி னர். போர்க் களத்தில் நின்று கரிகாலன் முதன் முதலிற் செய்த சண்டை அஃதே யாகும். சேரன் பாண்டியன் ஆகிய இரு பெரு வேந்தருடைய செருக்கை யடக்கி அக் கன்னிப் போரிலேயே தன்னுடைய வீரத்தை உலக மறியத் தெளிவித்தான் கரிகாலன்.

காலனை யொத்த கரிகாலனுடைய கைவேலால் பெருந் துன்ப மெய்தி மூர்ச்சித்து மண்ணிற் சாய்ந்த சேர வரசன், சற்று நேரத்தில் ஒருவாறு மனத் தெளிவடைந்து எழுந்திருந்தான்; மிக்க வெட்கத்தையும் துக்கத்தையும் அடைந்து திகைத்தான்; வேலால் தன் முதுகில் உண்டாய புண்ணைக் குறித்து மனவருத்த மடைந்தான். "ஆ! ஆ!! தூய வீரனுக்கு முதுகின்புறத்துப் புண்ணுறுதல் கூடுமோ? மார்பிலும் நெற்றியிலு மல்லவா வன்மையில் மிக்க வீரருக்குச் சண்டையிற் பட்ட வடுவுகள் காணல் வேண்டும்? முதுகிற் புண்ணெய்தி இருத்தல் மானக்கேட்டை விளைவிப்ப தாகுமே! புறப் புண்ணுடன் யான் உயிர் வாழ்வதினும் இறத்தலே சாலச் சிறந்த தாகும். இப்புறப் புண்ணுடன் இனி, என்னுடைய நகரத்திற்கு யான் திரும்பிச் செல்லேன்; என்னுடைய குலத்தின் பெருமைக்கு இழிவைத் தேடேன்," என்று கூறி அச்சேரன், தன் கையிற் பிடித்திருந்த வாள் ஒன்று நீங்க, அரசச் செல்வம் முதலிய எல்லாவற்றையும் அப்பொழுதே துறந்து, வடக்கிருந்து, பட்டினி கிடந்து உயிர் துறந்தான். வெண்ணிப் போரில் முதுகிட் டோடிய பாண்டியன், இன்னான் என்று தெரிந்து கோடற்குப் போதிய ஆதாரங்கள் கிடைத்தில.

வெண்ணிப் பறந்தலையில் வெற்றி வாகை மிலைந்த சோழன், பகைவரிடம் தான் கொண்ட வெகுளியி னின்று தணியாதவனாய், அம்மாற்றலருடைய நகரங்களை யடைந்து, கோட்டை கொத்தளம் முதலியவற்றைக் கைப்பற்றித் தன் ஆளுகைக்குக் கீழ்ப்படுத்தினான். அதைக் கண்டு அவனுடைய தாயாதிகள் ஒன்பதின்மரும், அகங் கரிந்து, முகம் வெளுத்து மிகப் புழுங்கினர். அவ்வொன்பதின்மரும் ஒருங்கு சேர்ந்து, கரிகாலனைத் தாமே எதிர்த்து ஒரு கை பார்த்துவிடலாம் என்று எண்ணி முடித்து, மண்டிலத்

தரச ராதற்குரிய வேளாளராய ஒளியர், அருவாவடதலை யர், இடையர், வேளிர் முதலிய பலரை ஒன்று சேர்த்து, ஒரு பெரும் படையைத் திரட்ட லாயினர். அச்செய்தி யைப் பெருவளத்தான் அறிந்து, துணை வலியைப் பெறு தற்கு முன்னரே அப்பகைவரை யழிக்க நினைத்து, உடனே தன்னுடைய திரண்ட சேனைகளுடன் புறப்பட்டு, மாற்றலர் படைகளைச் சேர்த்துக் கொண்டிருந்த வாகை என்னும் ஊரை யணுகினன். அப்பகைவருடைய எண்ணம் முற்றுப் பெறுதற்கு முன்பே கரிகாலன் அவரை யெதிர்த்தமையால், அவருக்குப் பெருந் தடுமாற்ற முண்டாயிற்று. ஆயினும், அவர் கரிகாலனை யெதிர்த்துச் சண்டையிடத் தொடங் கினர். சிங்கத்தைச் சுண்டெலிகள் எதிர்ப்பதைப் போல் அம்மூடர், இணையற்ற வீரனாகிய கரிகாலனை யெதிர்க்க முன்னடைந்ததைப் பற்றி யெண்ணுந் தோறும் நகைப் புண்டாகின்றது. " யான் தனியே இருக்கும்போதும் பல வரசருடன் நீவிர் வந்து என்னை யெதிர்ப்பினும், உங்க ளெல்லாரையும் ஒரே வெட்டாகவெட்டி யொழிக்கத் துணி வேனே யன்றி யான் பின்னடைவேனோ? என் கை வேலின் பெருமைக்குச் சிறுமை தருவேனோ," என்று அப் பகைவரிடம் வஞ்சினங் கூறித் திருமா வளவன், அவரைச் சற்றும் பொருட் படுத்தாமல் வெற்றி முரசம் முழங்கப் பொரு தொழிலை மேற்கொண் டெழுந்தான்; சிறிது நேரத்திற்குள் பகைவருடைய படைக ளெல்லாம் பல திசையினும் சிதறி யோடத் துரத்தி யடித்துப் பாழாக் கித் தன் சினத்தை முடித்தான். அவ்வேந்தன் முன்னர் நின்று சண்டை செய்ய முடியாமையால், கொடிகள் குடை கள் முதலியவற்றைப் போர்க்களத்திலேயே போகட்டுப் பிடழிந்து, முதுகு காட்டி யோடத் தொடங்கினர் எதிரி கள். அவரை விடாமல் தொடர்ந்து பிடித்து வரச் சில வீரரை வளவன் விடுத்தான். அப்பகைவர் மகத நாட்டை

நாடி விரைந்தோடிக் கரிகாலனுடைய பகைவனாகிய ஓர் அரசனிடம் அடைக்கலம் புகுந்தனர்.

மாற்றலருடைய செயலைக் கண்ட சோழன், "உயிருடன் இருக்கப் பகைவரை விட்டிருத்தல் கூடாது. எனக்குத் துன்பம் விளைவிக்க அவர் வழி தேடுவர். கடனும் பகையும் எஞ்சியிருக்க ஒருவன் வைத்திருப்பானாயின், அவை அவனுடைய நல்வாழ்விற்கு கேட்டை யுண்டாக்குமென்று அறிவுடைப் பெரியார் மொழிந்திருக்கின்றார். மகத நாடு சென்ற என்னுடைய எதிரிகளை ஏற்ற வழியிற் பிடித்து அழித்தல் வேண்டும்," என்று எண்ணி, முன்னர் அருவாவடதலையரை வென்று அடக்கக் கருதி, அருவா நாட்டு மீது அணி வகுத்துச் சென்றான்.

கச்சியம்பதியைத் தலைநகரமாகக் கொண்ட தொண்டை மண்டலத்தி லிருந்த அருவா நாடு என்பது இந்நாளில் தென்னாறுகாடு என வழங்கப்படுவ தாகும். சோழ நாட்டிற்கு வடக்கி லிருந்த அஃது, அருவாவடதலை, அருவா என்னும் இரண்டு பிரிவுகளை யுடையதாயும், மா இலங்கை என்னும் மறு பெயரைப் பூண்டதாயும் இருந்தது. ஓர் இடத்தும் நிலை யின்றி யலைந்து திரிந்துகொண் டிருந்த குறும்பர் என்னும் ஒரு கொடிய சாதியினர் அந்நாட்டில் இருந்தனர். சோழ வரசன், அக்கூட்டத்தினரைத் தன்னுடைய சேனைகளைக் கொண்டு அடக்கி ஓர் இடத்து நிலை பெற்றிருக்கச் செய்தான்; அந்நாட்டைச் சீர்திருத்தி வேளாளர் பலரை அங்குக் குடியேற்றினான்; அந்த நாட்டை ஆமூர், இளங்காடு, ஈக்காடு, ஈத்தூர், ஊற்றுக்காடு, எயில், கடிகை, கலியூர், களத்தூர், குன்றபத்திரம், சிறுகரை, செங்காடு, செந்திருக்கை, செம்பூர், தாமல், படுவூர், பல்குன்றம், புலால், புலியூர், பேயூர், மனவூர், வெண்குன்றம், வேங்கடம், வேலூர் என்னும் இருபத்து நான்கு

கோட்டங்களாகப் பகுத்துப், பயிரிட்டுச் செழிப்புடன் வைத்திருக்க அக்கோட்டங்களைத் தக்க வேளாளரிடம் ஒப்புவித்தான்.

அருவாளரை யடக்கித் தன் அடிப்படுத்தி, அவருடைய நாட்டினைச் சீர்திருத்திய பின்பு அவ்வேந்தன், அந்நாட்டுத் தலைநகரமாகிய காஞ்சியை யடைந்து, ஆண்டிருந்த காமக்கோட்டத்துத் திருப்பணி செய்து வழிபட்டான்; அக்கோட்டத்துக் காவற் றெய்வமாகக் கோயில் கொண் டெழுந்தருளி யிருந்த சாத்தனாரை அன்புடன் பூசித்தான். அப்பூசையை யுவந்து ஏற்றருளிய அந்த ஐயனார், கரிகாலனுடைய வழிபாட்டைப் புகழ்ந்து, அம்மன்னனுக்குத் தம் கையிலிருந்த செண்டு என்னும் படைக்கலம் ஒன்றைக் கொடுத்து, "மன்ன! இச்செண்டால் அடிபடும் எத்தகைய பொருளும் அஞ்சிக் கலங்கி உன்னுடைய ஆணைக்கு அடங்கி நடப்பதாகும். இதைக் கையிற் பிடித்து எப்பொழுதும் பெருமையுடன் விளங்கக் கடவாய்," என்று அவனை நோக்கிக் கூறி யருளினார்.

சாத்தனாருடைய கைச் செண்டைப் பேருவகையுடன் பெற்றுக்கொண்ட வளவன், கோயிலை மும்முறை வலம் வந்து அத்தெய்வத்தைப் பணிந் தேத்தினன். சில பகல் காஞ்சிமா நகரத்தில் தங்கி யிருந்த பின்னர் அவ்வரசன், தமிழ்நாட்டு வடக்கெல்லை யாகிய திருவேங்கடத்தை நாடிச் சென்றான்; அவ்விடத் திருந்த வடுக அரசரை வென்று தன் ஆளுகைக்கு அடங்கி யிருக்கச் செய்தான். அவ்விடத்திருந்து புகழுடன் புறப்பட்டு அவ்வேந்தன், அருவா நாட்டிற்கு வடக்கி லிருந்த மலையமா நாட்டை நோக்கி நடந்தான். அந்நாடு, பெண்ணையாற்றங் கரையி லிருந்த திருக்கோவலூரைத் தலைநகரமாகக் கொண்டிருந்ததாகும். அதை யாண்டிருந்த மலையமான், கரிகாலனுடைய

கட்டளையைக் கடவாதவனுவான். திருமா வளவனை அன் புடன் வரவேற்று உவப்பித்தான் அந்தச் சிற்றரசன். வளவன் அம்மலையமானுடன் கலந்து பேசித், தன்னிடம் அவன் கொண்டிருந்த அன்பைக் கண்டு வியந்தான்; அவ னிடம் விடை கொண்டு பன்றி நாட்டை நாடிப் போனான்.

நாகப்பட்டினத்தைத் தலைநகரமாகக் கொண்டு பாண்டி நாட்டிற்கு வடக்கிருந்தது, பன்றி நாடு எனப்படுவதாகும். அந்நாட்டின் முற்றிலும் எயினர் என்னும் ஒரு வகைச் சாதியினர் வாழ்ந்திருந்தனர். அந்த எயினருள், நாகர் ஒளியர் என்னும் இரு வகுப்பினர் இருந்தனர். ஒளிநாகர் என்னும் ஒரு கூட்டத்தினர், அந்நாகருள் ஒரு பகுப்பின ராவர். அந்த ஒளிநாகரே மற்றை மண்டிலங்களுக்கு அரச ராதற்குரியவராவர். பன்றி நாட்டிலிருந்த நாகர் ஒளியர் முதலியோர் அனைவரையும் எதிர்த்துக் கொடுஞ் சமராற்றி, அப்பகைவருடைய செருக்கையொழித்துத் தன்னடிகளைப் பணிந்து, தன்னுடைய ஆணைக்கு அடங்கியிருக்குமாறு செய்து, பாண்டி நாடு சென்றான் சோழர்குலக் கோமான்.

பாண்டி நாடு அந்நாளில், தென்பாண்டி, பாண்டி என் னும் இரண்டு பிரிவுகளை யுடைத்தாயிருந்தது. முறையே இந்நாளில் திருநெல்வேலி, மதுரை என்று அவை வழங்கப் படுகின்றன. அப்பாண்டி நாட்டிற்குத் தென் மதுரை தலை நகரமாக விருந்தது. அங்கிருந்த தென்னவன் குலத்தி னரை யடக்கிப் பணிவித்துச் சோழர்குல வீரன், சேர நாட்டை நாடிப் போனான். பூழி - வட மலையாளம், குடம் - தென் மலையாளம், குட்டம் - கொச்சி, வேநாடு - திரு விதாங்கூர், கற்கா - பாலக்காடு என்னும் ஐந்து நாடுகளைத் தன்னகத்துக் கொண்டிருந்ததாகும் சேர நாடு. கற்கா என்னும் நாடு ஒன்று நீங்க ஏனைய நான்கு நாடுகளும், அரபிக்கடலோரத்தில் நிரையாக வடக்கிருந்து தென்

திசையை நோக்கி அமைந் திருந்தனவாம். வஞ்சி என்னும் பெரிய நகரம், அச்சேர நாட்டிற்குத் தலை நகரமாக இருந் தது. கரிகாலன், அந்நாட்டி லிருந்த சேரன் மரபினர் எல்லாரையும் வன்மை குன்ற அடக்கித், தனக்குக் கீழ்ப் படிந்திருக்கச் செய்தான்.

அங்ஙனம் முதன்மையான நாடுகள் எல்லாவற்றையும் வென்று தன்னுடையன வாகக்கொண்டு, ஆங்காங் கிருந்த அரசர் பலரையும் தனக்கு இறை செலுத்திவரச் செய்த பின்பு திருமா வளவன், தன் தண்டத் தலைவர்களையும் மற்றைப் படைகளையும் ஏவி, இரவு பகல் என்னும் வேறு பாடின்றிக் கடும் போர் புரிவித்துப், பெருஞ் சேரலாத னுடன் கூடி வெண்ணிப் பறந்தலையில் தன்னை யெதிர்க்க வந்த காழூர் சிற்றரசனாகிய கழுவுள் முதலிய பொதுவர் குலத்து அரசரையும், பிடவூர் வல்லம் முதலிய ஊர்களில் இருந்து தனக்குக் கேடு சூழ்விக்கக் கருதிய இருங்கோவேள் முதலிய ஐம்பெரும் வேளிர்களையும் வாட்டி யொழித்தான்; அப்பகைவர்களுடைய உறைவின் முறையினரையும் அடி யோடு சாய்வித்தான்.

தமிழ் நாடு முழுவதையும் வென்று தன்னடிப் படுத் திய பின்னரும் பெருவளத்தான், பொருதொழிலில் விருப் பங் கொண்டான்; தன்னை யெதிர்த்துச் சண்டை செய்வார் ஒருவரும் தென்னாட்டில் இலரானமையின், தான் கொண்ட இச்சையை முற்றுவிக்க வட நாட்டின் மீது படை யெடுத் துச் செல்ல நினைந்தான். வட நாட்டிலும் தனக்குப் பகை வர் எவரும் இருத்தல் கூடாதென்று மனங் கொண்டு, கொடி, குடை, வாள், வீரமுரசம் முதலியவற்றைக் கைகளில் தாங்கிய தன்னுடைய பெரும் படையுடன் நன் னாளில் வெற்றி முரசம் முழங்கப் புறப்பட்டு அந்நாட்டை நோக்கி நடந்தான்; வட நாட்டிலிருந்த தன்னுடைய பகை

வர் எல்லாரையும் எதிர்த்து அழித்தான். அதைக் கண்டு சோதுமலாளராய அரசர் பலர், கரிகாலனுடைய நட்பை நாடி, விரைவில் அவனிடம் வந்தடைந்து, அன்புடன் பேசிப் பல பொருள்களைக் கொடுத் துதவி நட்பினராயினர். முன்னரே அவ்வேந்தனுக்கு நட்பினரா யிருந்த மன்னர் பலர், அவனை அன்புடன் தம்முடைய நாடுகளுக்கு எதிர்கொண்டு அழைத் தேகி, அவனுடைய வருகையைப் புகழ்ந்து கொண்டாடிப் பலவாறு உபசாரணை செய்து உவப்பித்தனர். தன் நண்பருடன் இருந்து மகிழ்ந்த பின்பு அவ்வளவன், சண்டை செய்தலை இச்சித்து மற்றும் வட திசையை நோக்கி நடந்து பனிமலைக் கருகிற் போனான். மிக வுயர்ந்து பரந்துள்ள இமயமலை அவனுடைய எண்ணத் திற்கு மாறாகக் குறுக்கிட்டது. அம் மாமலைக்கு அப் பாலும் தன் ஆணையைச் செலுத்த இச்சித்த அச்சோழர் வீரன் அப்பொழுது, "என்னுடைய விருப்பத்திற்கு இடையூறாக இம்மலை நின்றதே! இதனுடைய செருக்கை யொழிப்பேன்," என்று சொல்லிச் சினந்து, காமக் கோட் டத்துச் சாத்தனார் கொடுத் துதவிய தன் கையிலிருந்த செண்டைக்கொண்டு அந்த மால்வரையையோங்கிப்புடைத் தான். சாத்தனாருடைய சொல்லுக்கு உயர்வை யுண்டாக்கக் கருதி அக்குல மலை, சிறிது வழி விட்டதைப் போலத் தன் னுடைய நிலையிலிருந்து ஒருவாறு சற்றுத் திரிந்து நின்றது. அதைப் பார்த்து அச்செம்பியன், "இமையவர் உறையும் சிமயமால் வரை யன்றோ இஃது? இதனுடைய தன்மை யைச் சிறிதும் எண்ணிப் பாராமல் இதனை யடித்தேனே! பண்டு நின்றபடி நிற்க இது," என்று கூறிச் செண்டால் அதைத் தைவந்து, தான் செய்த அவ்வீரச் செயலை உலகம் அறியும் வண்ணம் அவ்வெற்பின் உச்சியில் தன்னுடைய புலிக்கொடி முத்திரையைப் பொறித்துத் தென்னாட்டை நோக்கித் திரும்பினான்.

விண்டோய் விலங்கவிடத் திருந்து மீண்ட நேரிவெற்பன், பல நாடுகளையும் கடந்து சோணை யாற்றங் கரையிலிருந்த வச்சிர நாட்டை யடைந்தான். அந்நாட்டின் அரசை நடத்தி வந்த மன்னன், கரிகாலனோடு பகை நட்பில்லாத நொதுமலாளனே யாவான். ஆயினும் அவன், பொன்னித் துறைவனுக்கு நண்பனாய் இருக்க இச்சித்துத், தன் குல முதலோர் பல்லாண்டுகளாகப் பெருஞ் செல்வமாய் மதித்து வைத்திருந்த அரிய தொரு முத்துப் பந்தரைத் திறைப் பொருளாகக் கொடுத்தான். அதைப் பெற்றுக் களித்துப் புலிக்கொடியோன், அவ்விடத்தி னின்று நீங்கித் தன் தாயாதிகளாகிய பகைவர் தங்கி யிருந்த மகத நாட்டை யணுகினான்; அந்நாட் டரசனைப் போருக் கழைத்தான். அம்மகதனும் புனனாடனை யெதிர்த்து நெடு நேரம் சண்டை செய்து, தான் கற்ற வித்தைக ளெல்லாவற்றையும் கையாண்டு பார்த்தான். ஒன்றும் பயன் பட்டிலது. அபயனை வெல்லுதற்கு எட்டுணையும் நம்பிக்கை யின்மையால், அம் மகத நாடன், திகைத்தான்; மதி மயங்கிச் சோர்ந்தான். அவனுடைய சேனைகள் இமையத்தைத் திரித்த வீரனுடைய படைகளுக்கு எதிர் நின்று சண்டையிட வன்மை யின்றிப் பலவாறு சிதைந் தொழிந்தன. மகதன் அச்சமும் நாணமும் அடைந்து, செம்பியனை யணுகி, அவனுடைய அடிகளைப் பணிந்தான்; பகையை விட்டொழித்து அவ்வண்ணலிடம் நட்புக்கொள்ள விரும்பினான்; தன்னுடைய மூதாதையர் நெடுநாளாகக் கருந்தனமாய்ச் சேமித்து வைத்திருந்ததும், சாலச் சிறப்புடையதும், பேரொளிகாலும் உயர்ந்த மணிகளை இழைத்து மயன் என்னும் அசுரத் தச்சனால் செய்யப்பட்டதுமாய பட்டி மண்டபத்தை அச்சோழனுக்கு ஈந்தான். மகிழ்ச்சியுடன் அதைப் பெற்றுக் கரிகாலன், அவந்தி நகரத்தை நாடிப் போனான். அந்நாட்டரசன் பெருவளத்தானுக்குப் பழைய நட்பாள னாவான். ஆதலால்

அவன், சோழனுடைய வருகையை யறிந்து மகிழ்ந்து, எதிர்கொண்டு சென்று கரிகாலனை உவகையுடன் அழைத்து வந்து, தன் அரண்மனையில் சிறப்புடன் வைத்திருந்தான். சில பகல் சென்ற பின்னர் சோழனுடன், தன்னுடு செல்லப் புறப்பட்டான். அப்பொழுது, நுண்ணிய சிற்ப வேலைப் பாடுகளாலாயதும், உயர்ந்த மணிகளை யழுத்திச் செதுக் கியதுமாகிய அரிய தொரு தோரண வாயிலை அவ்வளவ னுக்கு அன்புடன் தந்தான் அவந்தி நாடன்.

முத்துப் பந்தர், பட்டி மண்டபம், தோரண வாயில் ஆகிய மூன்றையும் கொண்டு, எங்கும் வெற்றி முரசம் முழங்கத் தன் நாட்டை யுற்றுன் சோழ வேந்தன். அந்நாட்டு மக்கள் எல்லாரும், உள்ளடங்கா உவகையுடன் தம்முடைய கொற்றவனை யெதிர் சென்று அழைத்து மிகக் கௌரவித்தனர்; அவனுடைய வெற்றி மேம்பாட்டைப் பன்முறைச் சொல்லிப் புகழ்ந்தனர். இன்ப முண்டாகப் பேசி அம்மக்களை மகிழ்வித்துச் சோழ நாட்டி லிருந்து நாவலந்தீவை முற்றிலும் சிறப்புற அம்மன்னன் ஆண்டு வந்தான்.

பாரத நாடு முழுவதையும் வென்று தன் ஒரு குடைக் குக் கீழாக்கி, எங்கும் தன் ஆணை செல்லச் செய்து, வச்சி ரம், அவந்தி, மகதம் முதலிய நாடுகளை யாண்டிருந்த ஆரிய வரசர்பால் திறைகொண்டு தன்னுடைய நாட்டை யடைந்த திருமா வளவன், கடல்மீதினும் ஆணை செலுத்தக் கருத்துட்கொண்டான்; தான் முன்னியவாறே முடிக்கத் தன்னுடைய சேனைகளை மரக்கலங்களில் ஏற்றிக்கொண்டு இலங்கைமீது படை யெடுத்துப் போனன். அந்நாளில், முதற் கயவாகு என்னும் அரசனுக்கு முற்பட்ட சிங்கள மன்னன் ஒருவன், அந்த இலங்கை மா நகரத்தைப் புரந் திருந்தான். அவனை யெதிர்த்துப் போர் செய்து வெற்றி

பெற்றான் கரிகாலன். அந்நாட்டி லிருந்த பன்னீராயிரம் குடிகளைச் சிறைப்படுத்தி யடக்கிய பின்பு அச்சோழ வரசன், அவ்விடத்தி லிருந்து திரும்பிச் சென்று தன் நாட்டை யடைந்தான். கன்னியாகுமரி முதல் இமயமலை வரைத் தன் ஆணை செல்ல அம்மன்னர் மன்னன், மாநிலம் புரந்து செவ்வனே வாழ்ந் திருந்தான்.

## பகுதி - ௧

## ஆதிமந்தி

நாங்கூர் வேண்மாளிடம் கரிகாலனுக்குப் பிறந்த ஒரே பெண்ணாகிய ஆதிமந்தி என்பாளை, இளங் குழந்தையா யிருந்தபோதே தம்முடைய மனைக்கு எடுத்தேகி அருமை யாக வளர்த்து வந்தார் இரும்பிடர்த் தலையார். அப்புலவர், இளம் பருவத்திலேயே அந்தப் பெண்ணுக்குத் தமிழ் மொழியை நன்றாய்க் கற்பிக்கத் தொடங்கிச் சில்லாண்டு களுக்குள் அவளைச் சிறந்த புலமை வாய்ந்தவளாய் விளங்கச் செய்தார். இயற்கையாகவே பேரழகு படைத்திருந்த அந்த அரிவை இளமையிற் கல் என்னும் முதுமொழிக் கிணங்கக் கல்வி கற்றதனால் பேரறிவும் படைத்தவ ளானாள். பெண்களுக் குரிய நற்குண நற்செயல்க ளெல்லாவற்றையும் ஒருங்கே வாய்க்கப் பெற்று, மங்கையர் எல்லாரும் போற்றத் தக்க மாணிக்க மென விளங்கிய அப்பெண், யாழ் முதலிய இசைக் கருவிகளை யிசைத்து இன்னிசை பாடுதலினும் வல்லவளா யிருந்தாள். பெற்றோரும் மற்றைச் சுற்றத்தின

ரும் அவளிடம் அன்பும் அருளும் பூண்டு, தேவ மகள் என அவளை மதித்துப் பெருமை பாராட்டி மகிழ்ந்திருந்தனர். பிறைமதியைப் போலச் செவ்வனே வளர்ந்து அக்கன்னி, கடி மணத்திற் குரிய பருவத்தை யெய்தினாள்.

அத்தி என்னும் சேர வரசன் ஒருவன் இருந்தான். அவன், கல்வி, அறிவு, வீரம் முதலியவற்றில் மேம்பட் டிருந்ததுடன் அகன்ற மார்பும், உயர்ந்த தோளும், சுருண்ட கரிய குழலும், இருண்ட விழிகளும், திங்களை யொத்த முகமும் உடையவனாய் எழில் நலத்திற் சிறந்து, ஏற்றியல் நடையும் கூற்றியல் படையும் கொண்டு, தன் உடல் முழு வதும் உயர்ந்த ஆடை அணிகளைப் பூண்டு மங்கையர் மனங்களைக் கவரும் பெரு வனப்புடையவனா யிருந்தான். இன்னிசை பாடுதலினும், அப்பாடலுக்குத் தக ஆடுதலினும், யாழ், வேய்ங்குழல் முதலிய இசைக் கருவிகளை இசைத்து இன்புறுதலினுமே அவ்வரசன், தன் பொழுதைப் போக்கி வந்தான். ஆட்டத்தில் தேர்ச்சி பெற்றிருந்தமையின் அவனை, ஆட்டன் அத்தி என்று அனைவரும் அழைக்க லாயினர். ஆதிமந்தியின் அழகைப்பற்றிக் கேள்வி யுற்று அவ்வாட்டனத்தி, அவளை மணக்க விழைந்தான்; கரிகால னிடம் சென்று தன்னுடைய விருப்பத்தைப் பணிவுடன் தெரிவித்து ஆதிமந்தியைத் தனக்கு மன்றலிற் கொடுத் துதவுமாறு இறைஞ்சினான். அந்தச் சேரனுடைய தோள் வன்மை, எழில் முதலியவற்றைக் கண்டு வளவன், வனப்பிற் சிறந்த தன்னுடைய மகளுக்கு ஏற்ற கணவனாதற் குரியவன் அச்சேரனே யாவான் எனத் தேர்ந்து, நன்னாளில் தன் பெண்ணை அவனுக்குச் சிறப்புடன் மணஞ் செய்து கொடுத்தான்.

திருமணத்தின் பின்னர் ஆதிமந்தி, தன்னுடைய கண வன் மாளிகையை யடைந்து, அவனுடைய வடிவழகை

அடிக்கடி யுற்றுப் பார்த்து உவந்து, அவனையே கடவுளாக நம்பிப், பல பிறவிகள் தோறும் தான் நோற்ற நோன்பு களின் பயனால் அந்த ஆணழகன் கணவனாகத் தனக்குக் கிடைத்தான் என்று மனத்திற் கொண்டு, அவனுடைய அழகில் ஈடுபட்டு இன்புற் றிருந்தாள். பிறப்பு, குடிமை, ஆண்மை, பருவம், வனப்பு, அன்பு, நிறை, அருள், அறிவு, செல்வம் என்னும் பத்தினும் ஒத்திருந்த அவ்விருவரும், உயிரும் உடலும்போல் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரித லின்றி, அளவிடற்கரிய அன்புடன் வாழ்ந்திருந்து, உலகம் புகழ இல்லறத்தை ஒழுங்குடன் நடத்தி இன்பம் துய்த் திருந்தனர். அவ்விருவரும் மனம் ஒத்து வாழ்ந் திருந்த வாழ்க்கையின் நலம், ஈண்டு உரைப்பதற்கு அரியதாகும். ஆயினும், ஒரே சொல்லால் அவருடைய மனமொத்த வாழ்வின் தன்மையை அனைவரும் நன்கு உணரலாம். அஃது, ஆட்டனத்தி மன மகிழ்ச்சியின் மேலீட்டால் ஆடும்போ தெல்லாம் கற்புடை மகளாய ஆதிமந்தி பாடு வாள்; அங்ஙனமே அவள் பாடும்போ தெல்லாம் அவன் ஆடுவாள் என்பதே யாகும். திருமாவளவனும் அவ னுடைய இல்லாளும், அப்போதைக் கப்போது சென்று தம்முடைய மகளையும் மருமகனையும் கண்டு களித்துத் திரும்பி வரல் வழக்கம்.

ஆண்டுதோறும் காவிரியிற் புதுப் புனல் பெருக் கெடுக்கும்போது சோணாட்டு மக்கள் எல்லாரும், அந்நீரில் மூழ்கி விழாக் கொண்டாடுதலை வழக்கமாகக் கொண் டிருந்தனர். ஓர் ஆண்டு அத்திருவிழாவிற்குத் தன்னுடைய மகளையும் மருமகனையும் அழைத்து வந்தான் பெருவளத் தான். அவன், தன்னுடைய குடும்பத்தினர் அமைச்சர் முதலியோருடன் புறப்பட்டு மயூரத்திற்குக் கீழ்பாலுள்ள கழார் என்னும் ஊரின் பக்கலில் இருந்த காவிரித் துறை

யிற் புதுப் புனல் விழாவைக் கொண்டாடி நீராடச் சென்றான்; அவ்வூரை யடைந்து தான் எண்ணியவாறே திரு விழாவைச் சிறப்புடன் நடத்தினான். எண்ணிறந்த மக்கள் அவ்விடத்தை யணுகி, அரசனுட னிருந்து விழாவை நடத்திக் காவிரியில் மூழ்கி மகிழ்ந்தனர்.

அவ்வேளைப், புதுப் புனல் பெருக் கெடுத் தோடிய அழகைக் கண்டு, யாண்டும் கூத்தாடுதலிலேயே பெரு நோக்கம் உடையவனா யிருந்த ஆட்டனத்தி, அந்தக் கழார்த் துறையில் நீராடி மகிழ விழைந்தான்; நீரில் இறங்கிப் பாணில் மணி முதலியன ஒலிப்பத் தன் வல்லமையைக் காட்டித், தான் கற்ற பலவகை ஆட்டங்களை யாடி நீந்தலானான். அவனுடைய அரிய கூத்தைப் பார்த்து ஆங்கிருந்த மக்கள் அனைவரும், பெரு வியப்பும் விருப்பும் அடைய லாயினர். அவனுடைய சுற்றத்தினராய மன்னன் மன்னி முதலியோரும் களிப்பெண்ணும் வெள்ளப் பெருக்கில் ஆழ்ந்தவ ராயினர். நீர் விளையாடேல் என்னும் மூதாட்டியாருடைய மொழியைக் கருதானாய் அத்தி, அவ்வாறு நீந்தி இன்புற் றிருந்தபோது திடீரென இரு கரையும் புரளப் பொன்னியிற் பெரு வெள்ளம் பெருகிற்று. விரைந்து கடுகிச் சுழன்று வந்த அந் நீத்தம், அத்தியைப் பெயர்த்துப் புரட்டித் தள்ளி யடித்து ஈர்த்தோடியது.

மருமகன் ஆற்றாடு சென்றதை மாமன் அறிந்திலன். நீரில் மூழ்கி யிருக்கின்றான் தன்னுடைய மருமகன் என்று முதலில் அவன் எண்ணி யிருந்தான். நெடுநேரம் வரையில் அத்தி தண்ணீரின்மேல் கிளம்பி வரக் காணாமையால் கரிகாலன் ஐயங் கொண்டான். அவனுடைய மனம் திடுக்கிட்டது. "ஐயகோ! என் ஆருயிர்த் தலைவரே! அழகரே! எவ்விடம் சென்றீர்," என்று கூவி ஆதிமந்தி அழத் தொடங்கினாள். அவளைக் கண்டு சோழனும்

"ஐயோ! அப்பா," என்று சொல்லித் தேம்பித் தேம்பி யழுவா னானான். ஒரு நொடிப் பொழுதில் அத்துறையி னிடம் திருவிழாவினால் உண்டா யிருந்த மகிழ்ச்சி யொலி மாறி அழுகை யொலி நிரம்பியது. "அந்தோ! ஐயோ! அச்சோ! ஐயகோ! அப்பா! ஒப்பிலா அழகா," என்று பலரும் பலவாறு கூவி, மூலைக்கு மூலைப் பெருங் குர லெடுத்து அழுவாராயினர். ஆற்றில் மூழ்கி அச்சோனைப் பலர் தேடினர். பலர் ஆற்றங்கரை யோரத்திலேயே நெடுந் தூரம் சென்று தேடித் திரிந்தனர். தன் தலைவனை நினைந்து பலவாறு அரற்றி யழுது ஆதிமந்தி, மதிமயங்கி மூர்ச்சித்து உயிரை யிழந்தாள்போல் மண்ணிற் சாய்ந்தாள். அவ ளுடைய அறிவின் சோர்வை மாற்றத் தோழிகள் பலவாறு முயன்றனர்.

தன்னுடைய மருமகனைக் கண்டு பிடித்து வரக் கணக் கற்ற அரிப்புக்காரரை விரைவில் அழைத்து ஏவிக் காவிரி யின் எல்லாத் துறைகளிலும், மதகுகளிலும், அவ்வாற்றி லிருந்து பிரிந்தோடும் மடுக்களிலும், ஆற்றங் கரைகளி லுள்ள மரங்களின் வேர்களிடமும் தேடச் செய்தான் சோழன். காவிரியூடு சென்று கடலை யடைந்தவன் எவ் விடத்திற் கிடைக்கப் போகின்றான்? அரிப்புக்காரரும் மற்றையோரும் விரைந்து சென்று, ஆங்காங்கு நெடுநேரம் வருந்தித் தேடினர்; சேரனைக் கண்டிலர். எங்கும் தன் னுடைய மருமகன் அகப்படாததை யறிந்து கரிகாலன், அவன் நீரில் ஆழ்ந்து இறந்து பட்டான் என்று உறுதியாக மனத்திற் கொண்டு பலவாறு புலம்பி நைந்தான்; தேறுதல் கூறித் தன்னுடைய மகளை யழைத்துக்கொண்டு தன் நகர்ப் புறத்தை நாடிச் செல்லத் தொடங்கினான். அம்மங்கை, அறிவு பிறிதாகி, "என்னுடைய கணவனைக் கண்டீரோ? அவரைக் காவிரிப் புனலும் அடித்துச் செல்லவில்லை;

கடலும் கொள்ளவில்லை; அவர் எங்கேயோ ஆடப்போ
யிருக்கின்றார் போலும்! எப்பொழுது என்னிடம் வரு
வாரோ," என்று பலவாறு பலரையும் நோக்கிக் கூறித்,
தன்னுடைய தந்தையை விட்டொழித்துத் தனியே காவிரி
நதியின் கரையூடே விரைந்தோடினாள்.

தந்தையை விட்டுக் கணவனைத் தேடித் தலைவிரிக்
கோலத்துடன் மதி மருண்டு புலம்பிக் காவிரியின் கரை
வழியே சென்ற ஆதிமந்தி, அவ்வழிக் கருகிலிருந்த பல
ஊர்கள்தோறும் போய்த் தன் கணவனைத் தேடியலைந்தாள்;
ஆங்காங்குத் தன்னெதிரிற்பட்ட ஆடவரையும், மகளிரை
யும், விழா நடந்துகொண்டிருந்த இடங்களிற் குழுமி
யிருந்த மக்களையும், ஒருங்குகூடிக் களியாட்டங்களை மேற்
கொண்டிருந்த மங்கையர்களையும் நோக்கி, "என் காதல
ரைப் பார்த்தீரா? என் ஆளரைக் கண்டீரா? அவர் எங்கே
ஆடிக்கொண்டிருக்கின்றார்? எந்த இன்னிசைப் பாடலைப்
பாடிக்கொண்டிருக்கின்றார்? எப்பொழுது என்னிடம்
வருவதாய்ச் சொன்னார்?" என்று பித்தேறியவளைப்
போலவும், பேய்கோட்பட்டவளைப் போலவும் கேட்டுக்
கொண்டே பலவிடங்களிலும் அலைந்து திரிந்து, காவிரி
யாறு சென்ற வழியே போய்ச் சில நாட்களுக்குள் கடலை
யடைந்தாள்; கடற் கரையில் நின்று கதறினாள்.

காவிரியால் அடித்துக்கொண்டு போகப்பட்ட ஆட்ட
னத்தி, கடவுள் அருளால் உயிர் துறந்தான் அல்லன்.
தண்ணீர் பெருக் கெடுத்து ஈர்த்தபொழுது அவன், தன்
னுடைய தோள்வன்மை முழுவதையும் பயன்படுத்திக்
கரைக்கு வர நீந்திப் பார்த்தான்; வெள்ளத்தின் கடு விசையி
னின்று தப்பித்து வர ஆற்றலின்றி மனமுளைந்து, ஆழத்தில்
மூழ்கியும், நீரின்மேற் கிளம்பியும் தடுமாற்ற மடைந்து,
மிக வருந்தினான். தண்ணீர் அலைத்து அடித்துச் சென்று

சில நாழிகைகளுக்குள் குற்றுயிருடன் இருந்தபோது அவனைக் கடலுக் கருகிற் கொண்டுபோய்ச் சேர்த்தது. அவ் வெள்ளம் கடலுடன் கலந்தபோது நீர்ச் சுழல் ஒன்று உண்டாயிற்று. அச்சுழல், அத்தியை நிகர்த்த ஆட்டனத்தியைச் சுழற்றி யடித்துச் சென்று கடற் கரையில் வீசி யெறிந்தது. நீரின் கொடுமையி னின்று விடுபட்ட சேரன், காலன் கைக்குத் தவறிக் கடற் கரை யோரத்தில் மணற் குவியல்மீது கவிழ்ந்து விழுந்து கிடந்தான்.

அக்கடற் கரையின் அருகி லிருந்த ஓர் ஊரில் மருதி என்னும் கன்னி ஒருத்தி வாழ்ந் திருந்தாள். சேர வரசன் அங்ஙனம் தண்ணீரால் கரையில் எறியப்பட்ட வுடனே, அந்தக் கரை யோரமாய்ப் போய்க்கொண் டிருந்த மருதி என்னும் அந்தப் பாடினி, அவன் விழுந்து கிடந்த இடத்தை யடைந்தாள்; மணல்மீது படுத்துக் கிடந்த அத்தியைக் கண்டு முதலில் வியப்புற்றாள், வெருக்கொண்டாள்; சற்று நேரம் அவனுடைய நிலைமையை யுற்று நோக்கி நின்றாள்; தண்ணீரால் அலைப்புண்டு கரையில் மோதி யடிக்கப்பட்டுக் குற்றுயிருடன் அவ்வாடவன் கிடக்கின்றான் என்பதை ஒருவாறு ஊகித்து அறிந்து கொண்டாள்; அவனிடம் மிக்க இரக்கங்கொண்டு, அவனை மெதுவாகப் புரட்டிப் பார்த்தாள். அவன் அடைந் திருந்த களைப்பை மாற்றி, அவனை யுயிர்ப்பிக்கக் கருதி அப்பெண், பரிவுடன் அவனைத் தலை கீழாகத் தூக்கிப் பிடித்து, அவனுடைய வயிற்றையும் மார்பையும் பிசைந்து, அவன் குடித் திருந்த தண்ணீரை வெளிப்படுத்தினாள்; தலை பள்ளத்திலும் வயிறு மேட்டிலுமாய்க் கவிழ்ந் திருக்கப் படுக்க வைத்தாள்; தன்னுடைய முன்றானையினால் விசிறினாள்; இளைப்பி னின்று அவன் தேறுதலையும்பொருட்டுச் செய்யவேண்டியவற்றை எல்லாம் அன்புடன் விரைவிற் செய்தாள். பண்டைக்

காலத்தில் இத்தென்னாட்டிலிருந்த பெண்பாலாரும், மற்றை உயிர்களிடம் எத்தகைய அன்பும் அருளும் படைத்திருந் தனர் என்பதை மருதியின் அரிய செயலால் ஒவ்வொரு வரும் நன்கு அறியக்கூடு மன்றோ?

இரண்டு மூன்று நாழிகைகள் கழிந்த பின்பு அத்தி ஒருவாறு தெளிவடைந்து கீழ் மேலாகப் புரண்டான்; தன் பக்கலில் இருந்த கன்னியையுற்றுப் பார்த்தான்; கடற்புறத்தையும் மற்றைப் பக்கங்களையும் நோக்கினான்; பெருமூச் செறிந்தான்; எழுந்து உட்கார முயன்றான். மெதுவாக அவனைத் தூக்கி உட்காருவித்துத் தன்மீது சாய்த்துக்கொண்டு சிறிது நேர மிருந்தாள் மருதி; பொழுது பட்டமையால் அவனை மெல்லெனத் தன்னுடைய தோளின் மீது தூக்கிக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்றாள்; அங்கு, அம்மன்னனைத் தக்கவாறு பாதுகாத்து, அவன் கொண்டிருந்த சோர்வைப் போக்கி, அறுசுவை யுண்டி யமைத்திட்டுக் கருத்துடன் காத்து வந்தாள். இரண் டொரு நாள் செல்ல அவன், தான் அடைந்திருந்த துன் பத்தி னின்று தேறுத லடைந்தான்; உற்ற விடத்துச் செயற்கரிய உதவி செய்து தன் உயிரைக் காத்த மருதியின் செயலைப் பன்முறையுன்னிக் களித்து, அவளிடம் பேரன்பு பூண்டான்.

உயிரும் உடம்பும் குண மடைந்து நன்னிலைமையை யெய்தியவுடன் அவன், தன்னுடைய பழைய வன்மையை யும் வனப்பையும் அடைய லானான். மருதியின் வீட்டில் உண்டு களித் திருந்த அவன், தான் முன்னிருந்தவாறே அடிக்கடி இன்னிசை பாடி மகிழத் தொடங்கினான். அவன் வரலாற்றைக் கேட்டறிந்து பெருவியப் பெய்தினாள் மருதி. அவனுடைய வடிவழகிலும் இன்னிசைப் பாடல்களிலும் ஈடுபட்ட அவள், அவனை மணக்க இச்சித்தாள்; தன்னு

டைய விருப்பத்தை அவனுக்குத் தெரிவித்தாள். அப் பெண் தனக்குச் செய்த நன்றியைக் கருதியும், அவளுடைய ஆடல் பாடல் அழகு முதலியவற்றைப் பார்த்தும் அவளை மணக்க அவனும் இசைந்தான்; அருமறை மன்றல் எட்டனுட் சிறந்ததாய கந்தருவ மணத்தில் அவளை மனைவியாகக் கொண்டு மகிழ்ந்தான். அவ்விருவரும் ஒருமனப்பட்டு மிக்க இன்பத்துடன் அவ்விடத்திலேயே இல்லறத்தை நடத்திச் சின்னாள் வாழ்ந்திருந்தனர்.

கடற்கரையை யணுகி யழுது புலம்பிய ஆதிமந்தி, அக்கரைக் கருகி லிருந்த வூரை யடைந்து, அங்குத் தன் கணவன் தங்கி யிருந்த வீட்டுப் பக்கலில் ஓரிடத்தில் உட்கார்ந்து, தலை மயிர் மண்ணிற் புரளத் தன் கணவனை நினைந்து வாய் திறந்து, "ஐயோ! நாயக மாமணியே! நீர் எங்குச் சென்றீர்? எந்த இடத்திலும் உம்மைக் காணேனே! இனி, எங்குச் சென்று உம்மைத் தேடுவேன்? வீரத்திலும் அழகிலும் மிகுந்த அத்தியே! என்னைப் பயனற்றவ ளாக்கி எங்கே போனீர்," என்று சொல்லி அரற்றிக்கொண் டிருந்தாள். அத்திக்குரலைக் கேட்டு மருதி, தன் வீட்டை விட்டு வெளிப்போந்து, அழுதுகொண் டிருந்த நங்கையை யடைந்து, அவள் அழுது வருந்திக்கொண் டிருந்ததைப் பார்த்துப் பதை பதைத்தாள்; "ஐயோ பாவம்! இவளுக்கு என்ன துன்பம் நேர்ந்ததோ? நன்றாய் எனக்குத் தெரியவில்லையே! இவ்வாறு புலம்புகின்றாளே! இவளைத் தேற்றிச் சோறளித்துக் காப்பேன்," என்று எண்ணி ஆதிமந்தியை நோக்கி, "அம்மா! நீ ஏன் இவ்வாறு அழுது வருந்துகின்றனை? உனக்கு என்ன கெடுதி சேர்ந்தது? என்னால் கூடியவரையில் உனக்கு உதவி புரிகின்றேன். நீ யாவள்? உனக்கு நேர்ந்த துன்பம் யாது? என்னிடம் சொல்லும்," என்று கேட்டாள். அதற்கு ஆதிமந்தி, தான் பிறந்தது

முதல் கழாரில் கொழுநனை யிழந்து கண்டவிடமெல்லாம் தேடி அக்குற்றவரைத் தன் வரலாறு முழுவதையும் விரி வாய் எடுத் தியம்பினாள். அதைச் செவியுற்ற பருதி, மன மிக உருகி நைந்தாள்; தன்னிடமுள்ள அழகன் அவளு டைய கணவனே யாவான் என்பதை யூகித் தறிந்து, அம்மங்கையி னிடம் மிக்க இரக்கங்கொண்டு விரைந் தோடித் தன் இல்லத்தை யடைந்து, அவ்விடத் திருந்த ஆட்டனத்தியை யழைத்து, உடலி னின்று உயிரைப் பறித்துக் கூற்றுவன்முன் நிறுத்துதலைப் போல் அவனை அந்த ஆதிமந்தியின் எதிரில் நிறுத்தினாள்.

தன் முன்னர் வந்து நின்ற அத்தியைக் கண்ட வுடனே ஆதிமந்தி, "ஆ அழகரே! ஆளரே! என் ஆருயிர்த் தலை வரே! என்னை விட்டு எங்கே போயிருந்தீர்? இப்படிச் செய்வார் உளரோ," என்று அரற்றிக்கொண்டே எழுந் தோடி, இரு கைகளாலும் நாயகனைத் தழுவி யணைத்து, அவனுடைய தோள்மீது விழுந்து மூர்ச்சித்தாள். அவ னும் மதி மயங்கித், தன் மனைவியைத் தாங்கி யழுது கொண்டே சற்று நேரம் நின்றிருந்தான். ஆதிமந்தி மனத் தெளிவடைந்து, தன் நாதனைத் தலை முதல் கால்கள் வரை யுற்றுப் பார்த்துக் கீழே உட்கார்ந்து, அவனுடைய காலடி கள் மேற் சாய்ந்தாள். அவனும் நிலத்தில் உட்கார்ந்து தன் இல்லாளைத் தாங்கிப் பற்றினான். அவ்விருவரும், ஒருவரை ஒருவர் தழுவிக் களித்தும், ஒருவர் தோண்மீது ஒருவர் சாய்ந் திருந்தும், இறந்தவர் பிறந்த பயன் எய்தினர் கோல்லேன்னக் களிப்பின் பெருக்கால் கண்ணீ ருகுத்தும் மகிழ்ந்தனர்; ஒருவரோடு ஒருவர் அளவளாவி இன்புற் றனர்; தாம் தாம் பட்ட இன்னல்களை யுரைத்து வியந்து நெக்குருகினர்; தமக்கு நேர்ந்த இடுக்கண்க ளெல்லாம் இறைவன் அருளால் ஒழிய இருவரும் முனபோல் ஒருங்கு சேர்ந்தமைக்கு உவந்தா வித்தனர்; கடவுளைத் துதித்தனர்.

அவ்விருவருடைய செயலையும் அசைதலின்றி நெடு நேரம் பார்த்து நின்ற மருதி, மிக்க மனக் கலக்க மடைந் தாள்; பெருமூச் செறிந்தாள்; "ஆ! ஆ! கற்பிற் சிறந்த கட்டழகி யாகிய இந்த ஆதிமந்தியின் கணவரை யான் மணந் தேனே! இந்த வடிவழகியை விட்டு இனி ஆட்டனத்தி என்னிடம் இருப்பவர் அல்லர். அவருக்கு ஆட்பட்ட யான் இனிமேல் உயிருடன் இருப்பதால் யாது பயன் பெறக்கூடியவ ளாவேன்? இறத்தலே இருத்தலினும் நல மாகும்," என்று எண்ணித் துணிந்து, அவ்விடத்தை விட் டொழித்து விரைந் தேகிக் கடலிற் பாய்ந்து உயிரை விட் டாள். அந்தோ பாவம்! அவள் அங்ஙனம் செய்யலாமா? விதி வலிது என்பதற் கேற்ப நடந்தாள் போலும்.

நெடுநேரம் பேசி மகிழ்ந்த பின்பு ஆட்டனத்தி, தன் மனைவியை யழைத்துச் சென்று மருதியின் வீட்டை யடைந்தான். மருதி கடலிற் புகுந்து இறந்த செய்தி அப் பொழுதுதான் அவளுடைய வீட்டிலிருந்தவருக் கெட்டி யது. அதைக் கேட்டு அவர் எல்லாரும் கதறி யழுதனர். அவள் பெருதவி புரிந்து தன்னுயிரைக் காத்துத் தனக்கு அன்புடைக் காதலியா யிருந்து மகிழ்ச்சி யுண்டாக்கியதை எண்ணி யெண்ணி அத்தி, நெடுநேரம் அழுது புலம்பினன்; ஆற்றொணு மனவருத்த மடைந்தான். மருதி செய்த அரிய உதவியைத் தன் கொழுநன் சொல்லக் கேட்டறிந்த ஆதிமந்தியும், அம்மருதி இறந்தமைக்கு மிக அழுது வருந் தினள். இரண்டொரு நாள் அவ்வூரிலேயே தங்கி யிருந்த பின்னர் சேரன், தன் மனையாளுடன் புறப்பட்டுக் காவி ரிப்பூம் பட்டினத்தை நாடி நடந்தான்.

பூம்புகாரை யடைந்து அவ்விருவரும், அரசனுடைய அரண்மனையை யணுகினர். அவர் வரவைக் கண்டு அங்கி ருந்தவர் அனைவரும் எல்லை யற்ற மகிழ்ச்சி யடைந்தனர்.

தம் மகளையும் மருமகனையும் பல விடங்களிலும் தேடி யலைந்து, உணவு முதலியவற்றை யொழித்து இரவும் பகலும் ஓரே ஏக்கத்துட னிருந்து வருந்திய கரிகாலனும், அவனுடைய மனைவி நாங்கூர் வேண்மாளும், பெருந் துன்பத்திற் குள்ளாகித் தம்மை விட்டுப் பிரிந்த மகளையும் மருமகனையும் பார்த்து, புத்துயிர் பெற்றவரைப் போல் மகிழ்ந்தனர்; அவ்விருவரையும் பன்முறைத் தழுவிக் களித்தனர்; துக்க மொழித்தனர்; அவ்விருவரும் அடைந்த துன்பங்க ளெல்லாவற்றையும் கேட்டுத் திடுக்கிட்டு வருந்தினர்; அவருடன் நெடுநேரம் பேசி யுவந்தனர்; அவருக்கு உண்டி முதலிய வற்றை யளித்துக் களிப் புண்டாக்கினர்.

சேரன் உயிருடன் திரும்பி வந்த செய்தியைக் கேட்டு அந்நகர மாந்தர் எல்லாரும், பெருங் களிப்படைந்தனர். ஆதிமந்தியின் மன வுறுதியையும் கற்பின் திறத்தையும் பற்றிப் பலவாறு புகழ்ந் துரையாடினர். சில மாதங்கள் வரை மாமனாருடைய மாளிகையில் இனிதாக இருந்தபின் அத்தி, மாமனார் முதலியோரிடம் விடைபெற்றுத், தன் மனையாளுடன் புறப்பட்டுச் சென்று, தன்னுடைய நகரத்தை யடைந்தான்; தன் நாட்டைப் புரந்து செவ்வனே இல்லாளுடன் வாழ்ந்திருந்தான்.

---

## பகுதி - ௰

## தமிழ் மொழியினுடைய நிலைமை

பாரத நாடு முழுவதையும் தன் குடைக்குக் கீழாக்கிய கரிகாலன், தனக்கு நேர்ந்த துன்பங்க ளெல்லா மும் விரைவில் ஒழிய இனிய வாழ்க்கையிலும்,

புகழிலும், கொடையிலும் மேம்பட்டுத், தன் ஆணை எங்கும் தடையின்றிச் செல்லக் கோல் கோடாமல் அரசாண்டு நெடுங் காலம் வீற்றிருந்தான். பெரும் புலவராய இரும்பிடர்த் தலையாரைத் தனக்கு நீங்காத் துணையெனக் கொண்டு செங் கோல் செலுத்திய அவ்வேந்தன், தமிழ் மொழியிலும் தமிழ் மொழி பயின்ற புலவரிடமும் மிக்க ஆர்வ முடைய வனா யிருந்தான் என்பது பல வகையானும் நன்கு விளங்கு கின்றது. கல்வியின் அருமை பெருமைகளை அவன் நன்றாய் அறிந்திருந்தான். வேளாண் வாழ்க்கையும் வாணிகமும் மேம்பட்டுச் செல்வம் நிறைந் திருந்ததுடன் கல்வியும் நாக ரிகமும் அவன் நாட்டின்கண் அங்ஙனமே செழிப்புற்று உயர்ந்த நிலைமையில் இருந்தன.

தமிழ் மொழியைப் போற்றி உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுவர எண்ணங் கொண்டிருந்த அப்புரவலன், கற்ற அறிஞரைத் தனக்குத் துணைவராகக் கொள்ளுதலிலும், அவருடைய சொற்களுக் கிணங்க நடத்தலிலும், அவர்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து உதவி புரிதலிலும், அப் புலவர் இயற்றிய நூல்களைப் பரிசில் கொடுத்து ஏற்றுக் கௌரவித்தலிலும், தன் நாட்டிற் பல விடங்களிலும் பள்ளிக்கூடங்களை யேற்படுத்தலிலும், வறிய புலவரைக் காணின் பொருள் வழங்கி அவருடைய வறுமை நோயை யகற்றுதலிலும், மதம் குலம் முதலிய வேறுபாடுகளின்றி ஆண்மக்களைப் போலவே பெண்மக்களையும் கல்வியிற் பயிற்றுதலிலும் பெரு நோக்க முடையவனாய் இருந்தான்.

அவ்வரசனுடைய காலத்தில் பரணர், நக்கீரர், மாமூலர், உருத்திரங்கண்ணனார், முடத்தாமக் கண்ணியார், கருங்குழ லாதனார், கழாத் தலையார் முதலிய நல்லிசைப் புலவர் பலர் வாழ்ந் திருந்தனர். வேண்டுவன கொடுத்து அவர் அனைவ ரையும் நன்கு மதித்துப் பாதுகாத்து வந்தான் திருமாவளவ

வன். அதனால், தொகை நூல்களிலும் பிறவற்றிலும் அப் புலவரால் புகழ்ந்து பாடப்படும் பெருமையை அவ்வேந்தன் அடைந்தான். முடத்தாமக் கண்ணியார், உருத்திரங் கண்ணனார் என்னும் இருவரும் முறையே பொருநராற்றுப் படை, பட்டினப்பாலை என்னும் இரண்டு நூல்களை யியற்றி யுள்ளனர். அவற்றுள் கரிகாலனுடைய வீரத்தையும், செங்கோன் முறைமையையும், கொடையையும், சோழ நாட்டின் வளத்தையும், அதன் தலை நகராகிய காவிரிப்பூம் பட்டினத்தின் சிறப்பையும், காவிரி யாற்றின் வளத்தையும் பற்றி நன்கு விளக்கிக் கூறியுள்ளனர் அப்புலவர். அந்நூல் களுள் பட்டினப்பாலையைப் பாடிய உருத்திரங் கண்ண னுருக்கு மாத்திரம் பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் அளித்துக் கரிகாலன், அந்நூலை யேற்று மகிழ்ந்தான். அந்தச் சோழனுடைய மகளாகிய ஆதிமந்தியாரை யன்றி வெள்ளி வீதியார், வெண்ணிக் குயத்தியார், குறமகள் இள வெயினி, குறமகள் குறியெயினி, காவற்பெண்டு, காக்கை பாடினியார் நச்செள்ளையார், ஒக்கூர் மாசாத்தியார், குன்றி யாள், கழார்க்கீரன் எயிற்றியார், நக்கண்ணையார், நன்னாகை யார், காமக்கணிப் பாசலையார், பூங்கண்ணுத்திரையார், பொன்மணியார், பாரிமகளிர், ஒள்வையார் முதலிய பெண் மணிகளும் அம்மன்னனுடைய காலத்திற் புலமையிற் சிறந்திருந்தனர். எண்ணிறந்த பாடல்களைப்பாடி அந்நங் கையர், தமிழகத்தை அழகுபடுத்தி யிருக்கின்றனர். அக் காலத்தில் இந்நாட்டிற் பெண்கல்வி எவ்வளவு முன்னேற்ற மடைந்திருந்த தென்பதும் ஈண்டுக் கவனிக்கற் பால தாகும்.

கல்வியிற் சிறந்த புலவர்களுடைய திறமையைச் சீர் தூக்கி யறிதற்குப் பட்டி மண்டபத்தையும், பல நூல்களை யும் நன்றாய்க் கற்ற சிறந்த நல்லாசிரியர் எல்லாரும் ஒருங்கு சேர்ந்து பொருளாராய்ச்சி செய்தற்குக் கலைக் கழகங்களை

யும் அவ்வரசன் அமைத்து வைத்திருந்தான். பரிசில் பெறத் தன்னை நாடிவரும் புலவரைச் சேய்மையிற் காணும் போதே அப்புலவருடைய உடலும் உள்ளமும் குளிர நோக்கும் அரிய குணத்தைப் படைத்திருந்தான் அவ்வளவன். தன்னை நாடி வந்த புலவரை முகமன் கூறி அன்புடன் வரவேற்று, அவருக்கு உண்டியளித்து, ஆடைகளையும், பொருளையும், மணிகளையும், யானைகளையும் கொடுத்துத் தேர்மீது அவரை யேற்றிக் கொண்டுபோய் அவருடைய ஊரில் விட்டுவரத் தன்னுடைய வேலையாட்களைப் போக்குவதுடன் அவ்வேந்தன், தமிழ்மொழியினிடம் தான் கொண்டிருந்த ஆர்வத்தின் மிகுதியால் தன்னிடம் பரிசில் பெற்றுச் செல்லும் அத்தமிழ்ப் புலவர் பின் காலின் ஏழடி தூரம் நடந்து சென்று, அவரை வழிவிட்டுத் திரும்பி வரல் வழக்கமாகக் கொண்டிருந்தான். அத்தகைய பெருந் தன்மை படைத்திருந்த அந்தப் பெருவளத்தான் வாழ்நாளில் தமிழ்மொழி எத்தகைய உயர்ந்த நிலைமையை யடைந்திருக்கும்?

பாரி, ஓரி, காரி, பேகன், ஆஅய், அதிகமான், நள்ளி என்னும் கடையெழு வள்ளல்களும், திருமாவளவன் காலத்துத் தம்முடைய பெருங் கொடை முதலியவற்றால் தமிழ்மொழியை வளர்க்கும் தொழிலில் ஈடுபட்டுத் திகழ்ந்திருந்தனர். அவ்வரசனுடைய வாழ்நாளில் கபிலர், பரணர், நக்கீரர், இடைக்காடனார், மாமூலர் முதலிய தமிழ்ப் பெருமக்கள், கன்மாப் பலகை யேறித் தமிழ் ஆராய்ந்த கடைச் சங்கமும் மதுரைமா நகரில் மிக்க பெருமையுடன் செழிப்புற் றிருந்தது. அக்காலத்தில் நல்லிசைப் புலவருடைய தொகை, நானூற்றுக்கு மேற்பட் டிருந்தது. அந்தப் பெருமக்கள் பலரால் இயற்றப் பட்டனவும் தொகுக்கப் பட்டனவு மாகிய பத்துப்பாட்டு, அகநானூறு என்னும் நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பதுகலி,

எழுபது பரிபாடல், பதினெண் கீழ்க்கணக்கு, சிற்றிசை, பேரிசை, முத்தொள்ளாயிரம், கூத்து, வரி முதலிய அரிய நூல்களே தற்போது தமிழகத்திற் சிறந்த செல்வமாய் விளங்குகின்றன.

இயற்றமிழைப் போலவே இசைத் தமிழும் நாடகத் தமிழும் முதற் கரிகாலனுடைய காலத்தில் நன்னிலைமையி லிருந்தன. அந்நாளில், சிகண்டி முனிவர் இயற்றிய இசை நுணுக்கம், யாமளேந்திரரால் இயற்றப்பட்ட இந்திர காளி யம், நாரத முனிவர் செய்த பஞ்ச பாரதீயம், ஆசிரியர் அறிவ னரால் அருளப்பட்ட பஞ்ச மரபு, சங்கப்புலவர் அருளிச் செய்த பெருங் குருகு, பெருநாரை முதலிய இசைத் தமிழ் நூல்களைப் பலரும் பயின்றிருந்தனர். நால்வகை யாழ், எழுவகைப்படும் முழவு, வங்கியங்கள் முதலிய இசைக் கருவிகளைக் கற்றுத் தேர்ந்த மக்கள், எண்ணிறந்தவரா யிருந்தனர். குண நூல், கூத்த நூல், சயந்தம், செயிற்றியம், பரத சேனபதீயம், பரதம், மதிவாணனார் நாடகத் தமிழ்நூல், முறுவல் முதலிய நாடகத் தமிழ்நூல்களைப் பயின்று தேர்ச்சி பெற்றிருந்த மாந்தர் பலராவர். ஆதலால், பெரு வளத்தானுடைய காலத்தில் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழும், மிகச் செழித்து ஒப்பற்ற மேம்பா டடைந் திருந்த தென்று சொல்லுதற்குச் சிறிதும் ஐயமிலது. மேனாடுகளில் அகஸ்டஸ் என்னும் அரசன் காலத்தில் இலத்தின் மொழி செழித்திருந்ததைப் போலவும், எலிச பெத் என்னும் அரசியின் காலத்தில் ஆங்கில மொழி தழைத் திருந்ததைப் போலவும் இந்நாட்டில் திருமாவளவன் காலத் தில் தமிழ் மொழி தலைசிறந்து விளங்கி யிருந்தது.

இம்மையில் இன்புற் றிருந்ததற்குச் செய்யவேண்டிய வற்றை யெல்லாம் குறைவின்றிச் செய்து முடித்த கரிகாலன், மறுமை இன்பத்தை நாடியும் பல அரிய வேலைகளைச்

செய்தான். கற்பில் மிக்க தன்னுடைய மனைவியர் பலருடன் வாழ்ந்திருந்து அவன் இல்லற மல்லது நல்லற மன்று என்பதை யோர்ந்து, ஒவ்வொரு நாளும் அவ்வறத்தினின்று தவறாமல் ஒழுகி வந்தான்; பல நோன்புகளை நோற்றுக் கடவுளை வழிபட்டான்; அற முணர்ந்த அந்தணர்களுக் கிடையில் வீற்றிருந்து, யாகங்கள் செய்வதற் குரியவற்றை யெல்லாம் ஐயந் திரி பறக் கேட்டறிந்து, வேள்விச்சாலையில் அமர்ந்து, அம்மறையவர் சொல்லிக் காட்டப் பல வேள்விகளைச் செய்து முடித்து மகிழ்ந்தான்; அந்தணர் முதலியோர்க்குப் பலவகைத் தானங்களை எப்பொழுதும் வழங்கி வந்தான்; நாடோறும் ஏழைகளுக்கு உணவுடன் ஆடைகளையும் பணத்தையும் கொடுத் துதவிக் காத்தான்.

செயற் கரிய செயல்கள் பலவற்றைச் செய்து, மண்ணுடை யாவரினும் உயர்ந்து, இணையற்ற புகழுடன் நெடுங் காலம் இன்புற் றிருந்த அவ்வளவர் கோமான், இவ்வுலக வாழ்வை நீத்து அந்தமில் இன்பத் தறிவன் தாளிணைக்கு ஆளானான். அவன் உயிர் விட்ட செய்தியைக் கேட்டு இவ்வுலகத்தினர் அனைவரும் மிக வருந்திப் புலம்பினர். தமிழ்ப் புலவர் எல்லாரும், துயரக் கடலுக்குள் மூழ்கி நெடுங் காலம்வரைப் புலம்பி வருந்தி யிருந்தனர். அவ் வண்ணல் இறந்தமைக்கு ஆற்றொணாத் துக்கத்தை யடைந்த கருங்குழல் ஆதனார் என்னும் பெரும் புலவர் ஒருவர், பகைவருடைய அரண்களை யழிக்கும் அவ்வரசனுடைய ஆற்றலையும், பல மகளிரை வேட்டு அவன் இன்புற் றிருந்த சிறப்பினையும், பாணர் கூத்தர் முதலியோர்க்கு வேண்டுவனவற்றை யளித்துக் காத்த அவ்வேந்தனுடைய அன்பின் பெருக்கையும், அரிய வேள்விகள் பலவற்றைச் செய்து முடித்த திறத்தையும் பற்றி நன்றாய் விளக்கி வருணித்து நெடிய பாடல் ஒன்றைப் பாடிப் புலம்பி யுள்ளார்.

## பகுதி - ௰௧

## திருமாவளவனுடைய காலம்

திருமாவளவனுய முதற் கரிகாலன் அரசு வீற்றிருந்த காலத்தை வரையறுத்துக் கூறுதலைப் பற்றி அறிஞர் சிலர், தம்முள் மாறுபட்ட கருத்துக்களை யுடையவரா யிருக்கின்றனர். அவருள் ஒரு சாராருடைய ஆராய்ச்சிமுறை அனைவராலும் ஒப்புக்கொள்ளக்கூடியதே யாகும். சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு, பதிற்றுப்பத்து முதலிய நூற்களை நன்கு ஆராய்ந்து ஒப்பிட்டு நோக்குவோ மாயின், அவ்வளவனுடைய காலத்தை நாம் செவ்வனே கண்டறியக் கூடும். அந்நூற் பொருள்களையும், மேற்கூறிய ஒப்புக் கொள்ளக்கூடிய ஒரு சாராருடைய ஆராய்ச்சி முறையையும் ஒட்டி, மாணவரும் மற்றையோரும் எளிதில் அறிய அக் கொற்றவனுடைய காலத்தைக் குறித்து ஈண்டுச் சுருங்க ஆராய்வோமாக.

பண்டைத் தமிழ் மக்களுடைய பழக்க வழக்கங்களையும் மற்றைச் செய்திகள் பலவற்றையும் உண்மைக் கிணங்கக் கூறுதலிற் சிறந்த நூலாய சிலப்பதிகாரத்துத் தலைவியாகிய கற்பில் மிக்க கண்ணகிக் கோட்டம் ஒன்றை முதன் முதலிற் சேரன் செங்குட்டுவன் என்பான் கட்டுவித்தான் என்னும் செய்தி, அனைவர்க்கும் உடன்பாடாய தொன்றாகும். அக்கோயிலை வழிபட இலங்கை வேந்தனுய முதற் கயவாகு என்பான் சேரனுடைய தலை நகரமாகிய வஞ்சி நகர்க்கண் போந்து, செங்குட்டுவனுடன் சின்னுள் அளவளாவி இருந்தான் என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்வர். ஆதலால், முதற் கயவாகும் சேரன் செங்குட்டுவனும் ஒரே காலத்தின ராவர் என அறியக் கிடக்கின்றனர்.

இனிச், செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு அரசு வீற்றிருந் தான் என்று 'கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்' என்னும் பதிற்றுப் பத்தின் ஐந்தாம் பத்தால் தெரிகின்றது. கயவாகு வஞ்சி நகரம் சென்றிருந்தபோது செங்குட்டுவனுக்கு வயது ஐம்ப தாகுமென்று சிலப்பதிகாரத்தில் நடுகற்காதையால் அறியக்கூடும்.

இலங்கையிற் செங்கோல் செலுத்திய கயவாகு கி. பி. 113-125-ம் ஆண்டு வரை அரசாண்டவனாவான். அவ் வேந்தன், தன் ஆட்சியின் இடைப்பட்ட காலமாகிய கி. பி. 119-ம் ஆண்டில் வஞ்சி நகரம் சென்றிருந்தான் எனக் கொள்வோமாயின், செங்குட்டுவன் அரசு கட்டில் ஏறிய காலம் கி. பி. 64-ம் ஆண் டாகுமெனஉணரலாம். அந்தச் செங்குட்டுவனுடைய தந்தை, இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்பானாவான். அம்மன்னன் ஐம்பத் தெட்டி யாண்டு செங்கோலோச்சினன் என்று பதிற்றுப் பத்தின் இரண்டாம் பத்தால் தெரிகின்றது. ஆதலால், அந்நெடுஞ் சேரலாதன் கி. பி. 6-ம் ஆண்டில் அரிமா சுமந்த அரசணை யேறியவனாவான் என்று சொல்லல் அமையும். நெடுஞ் சேரலாதனுக்கு முன்னர் சேர நாட்டை யாண்டவன், பெருஞ் சேர லிரும்பொறை என்னும் அரசனாவான். அவன் பதினேழ் யாண்டு அரசு செலுத்தினன் என்று பதிற்றுப் பத்தின் எட்டாம் பத்துக் கூறுகின்றது. ஆதலால், இரும் பொறை அரசாளத்தொடங்கிய காலம் கி. மு. 11-ம் ஆண்டு என்று விளங்குகின்றது. அவ்விரும்பொறை என்பா னுடைய தந்தை, செல்வக் கடுங்கோ வாழியாதனாவான். அவ்வரசன் இருபத்தையாண்டு நாடாட்சி நடாத்தியவ னாவான் என்பதைப் பதிற்றுப் பத்தின் ஏழாம் பத்தால் அறியலாம். எனவே, அவ்வரசன் கி. மு. 36-ம் ஆண்டில்

அரியணை யேறியவ னாவான் என்று உணரக் கிடக்கின்றான். அந்தச் செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு முன்பு பொன் னணையில் தமர்ந்து சேர நாட்டைப் புரந்தவன், சேர மான் பெருஞ் சேரலாதன் என்னும் அரச னாவான். வெண்ணி என்னும் ஊர்ப் புறத்திற் கரிகாற் பெருவளத்தா னோடு பொருது, புறப்புண் ணெய்தி, அதற்காக நாணி வடக் கிருந்தவன் அந்தச் சேரமான் பெருஞ் சேரலாதனே யாவான் என்பது செவ்வனே விளங்குகின்றமையின், முதற் கரிகால் வளவன் கி. மு. முதல் நூற்றாண்டின் இடைப் பட்ட காலத்தில் மடங்கல் தாங்கிய மணியணை யேறி வீற் றிருந்தவ னாதல் வேண்டும்.

வெள்ளி யம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்னும் பாண்டியன், கரிகால னிடம் பெரு நட்புடையவனா யிருந் தான். அக்கரிகாலனைச் சிறப்பித்துப் பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனாரால் தொண்டைமான் இளந்திரைய னும் பாடப்பட் டுள்ளான். ஆதலால், பாண்டியன் பெரும் பெயர் வழுதியும், தொண்டைமான் இளந்திரையனும், வெண்ணிப் பறந்தலையிற் புறப்புண் ணெய்தி வடக் கிருந்த சேரமான் பெருஞ் சேரலாதனும், திருமாவளவனால் தோல்வியுற்று, அவனுக்குத் திறை அளந்தவராகிய இலங் கையில் முதற் கயவாகுக்கு முன்னர் அரசியலை யேற் றிருந்த சிங்கள வேந்தனும், வச்சிரம், அவந்தி, மகதம் முதலிய நாடுகளை யாண் டிருந்த ஆரிய மன்னரும் அத் திருமாவளவனோடு ஒரே காலத்தில் இருந்தவ ராவர் என் பதை அனைவரும் நன்றாய் உணரக் கூடும்.

பெருவளத்தான் துஞ்சிய பின்னர், அவன் வழித் தோன்றிய மைந்தன், சோணாட்டு அரசனாய் விளங்கி னான். சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி, இராச சூயம் வேட்ட பெருநற் கிள்ளி, ஆதிமந்தி, சேரன்

செங்குட்டுவ னுடைய தாயாகிய நற்சோணை முதலியோர் கரிகாலனுடைய மக்களாவர் என்று ஒரு சாரார் கூறுவர். வேறு சிலர், அத்திருமாவளவனுக்குச் சேட்சென்னி நலங் கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என்னும் ஆண் மக்கள் மூவரும், ஆதிமந்தி என்னும் நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியளாய மகள் ஒருத்தியும் இருந்தனர் எனச் சொல் லுவர்.

உலகம் புகழ உயர்மதி படைத்து வீற்றிருந்த அத் திருமாவளவன், இன்ன சமயத்தைச் சார்ந்தவ னெனத் தெளிவாய் விளங்கவில்லை. ஆயினும் அவன், எந்த மதத்தின ரிடமும் பகை பாராட்டாமல் தன் ஆளுகைக்குக் கீழ்ப்பட் டிருந்த குடிகள் அனைவரையும் ஒரே தன்மைத்தாய அன் புடன் பார்த்துக் காத்து வந்தான். அவனுடைய காலத் தில் வைணவர், சைவர், சமணர், புத்தர் முதலிய மதத்தினர், யாதோர் இடையூறு மின்றித் தத்தம் கடவுளரை வழிபட்டு இனிதாக வாழ்ந் திருந்தனர். அம்மன்னர் பெருமானுடைய வரலாற்றைப் படிப்பதால், இரண்டாயிர மாண்டுகளுக்கு முன்பு வேளாண்மை, வாணிகம், செல்வம், கல்வி, நாகரிகம் முதலியவை எத்தன்மைத்தாய நிலைமையில் இருந்தன என் பதை ஒவ்வொருவரும், உள்ளங்கை நெல்லிக்கனி யென உணரக் கூடியவ ராவர். தமிழ் நாட்டின் பண்டை நிலை மையை யறியாமற் கண்டவாறு பேசும் மக்க ளுடைய மதியீனமாகிய யானையை யடக்குதற்குக் கரிகாலனுடைய வரலாறு, கூரேற வடித்த தொரு தோட்டியாமாறு காண்க.

# நெடுஞ்சேரலாதன்

## முதற் பகுதி

### வஞ்சிமா நகரம்

கோடையே யாவற்றினும் மேம்பட்ட தெனக் கொண்டொழுகிப், பசித்து வந்தவர்க்குச் சோறிடுதலே சிறந்த அறமாகு மென ஓர்ந்து பல விடங்களிலும் சோறிடும் அறச் சாலைகளை நிலை நிறுத்தி, உண வளித்தலாய தொழிலில் உயர்ந்த குடகொங்கு நாட்டினரான சேரர், தமிழ் நாட்டைப் புரந்த முடியுடை மூவேந்தருள் ஒருவ ராவர். சோழ பாண்டியரைப் போலவே சேரரும், பழமையும் பெருமையும் வாய்ந்த மரபினர் ஆவர் என்பதைப் பண்டைத் தமிழ் நூல்களால் நன்கு அறியலாகும். அந்நூல்கள், சேர சோழ பாண்டியராகிய மும் மரபினரும் படைப்புக் காலந் தொட்டு மேம்பாடுடன் தமிழ் நாட்டை யாண்டு வந்த பழைய மரபினர் ஆவர் எனத் தெளிவாய்க் கூறுகின்றன. பாண்டியரையும் சோழரையும் போலவே சேரரும் தமிழ் மொழியை வளர்த்து மிக்க புகழ் படைத் திருக்கின்றனர். அறிவு திரு வாற்றல்களில் மற்றைத் தமிழ் வேந்தரோ டொப்பச் சேரர் குடியினரும் சிறந் திருந்தவ ராவர். அம் மரபினர், சேரர், சேரலர் எனத் தமிழிலும், கேரளர் என வட மொழியினும் வழங்கப்படுகின்றனர்.

இப்பொழுது திருச்சிராப்பள்ளி ஜில்லாவைச் சார்ந் துள்ள கருவூர் உட்படக் கோயம்புத்தூர் சேலம் நீலகிரி ஜில்லாக்களும், மைசூர் நாட்டுத் தென் பகுதியும், மேற்குத் தொடர்ச்சி மலையோரமாக வுள்ள கடற்கரைப் பக்கங்களும அடங்கிய நிலப்பரப்பே சேர நாடாகும். அந்நாடு, ஒரு காலத்தில் மிக விரிந்தும், மற்றொரு காலத்திற் குறைந்தும் இருந்ததால் அதன் எல்லை, வரையறுத்துக் கூறுதற்குக் கூடாததாயது. ஏனைத் தமிழ் நாடுகளைப்போலச் சேர நாடும், எல்லா வளப்பங்களிலும் மிக்கிருந்ததாகும். மற்றை நாடுகளினும் அந்நாட்டிற் காடுகளும் மலைகளும். செறிந் திருந்தமையால், அவ்விடங்களிற் கிடைக்கக்கூடிய யானை யானைக் கோடுகள், முத்துக்கள், பலவகை நறுமணப் பொருள்கள், மிளகு, தேன், மூங்கில் முதலியவை அந்நாடு முழுவதினும் மலிந்து கிடந்தன. வேளாண்மை, வாணிகம் முதலியவற்றினும் அந்நாடு மேம்பட் டிருந்தது.

தமிழ் நாட்டைக் காத் தளித்த மூவேந்தருள் சோழ பாண்டியர்க்கு உறையூர், புகார், மதுரை எங்ஙனம் பழைய தலை நகரங்களாக விளங்கினவோ, அங்ஙனமே சேரருக்கும் வஞ்சிமா நகரம் பழைய தலை நகரமாய்ப் பெருமையுற் றிருந்தது. தற்போது கருவூர் என்று சொல்லப்படுவதே பண்டை நாளில் வஞ்சிமா நகரம் என்னும் பெயரை யுடைத்தா யிருந்த தாகும். வஞ்சி என்னும் பெயரைப் படைத்த ஒரு வகைக் கொடிகள் நிறைந் திருந்தமையின், கருவூருக்கு அந்நாளில் வஞ்சி நகரம் என்னும் பெயர் ஒன்று உண்டாயிற்று. கருவூர் என்பதும் அந்நகரத்தின் பழைய பெயரே யாகும். மேற் கடலோரத்தி லுள்ள தொண்டி, மாந்தை, முசிரி என்னும் துறைமுக நகரங்களும் சேர மன்னர்க்குத் தலை நகரங்களா யிருந்தன. ஆயினும், வஞ்சி நகரத்தைப்போல் அவ்வளவு முதன்மையானவைக

ளாக அந்நகரங்களைச் சேரர் கொண்டிலர். முசிறி என்னும் நகரம், முற்காலத்திற் சுள்ளி என்னும் பேரியாறு கடலுடன் கலக்கு மிடத்திற் பெரியதொரு கப்பற் றுறைமுகப் பட்டினமாய் விளங்கி யிருந்தது. மேனாட்டு யவனர் முதலியோ ருடைய மரக்கலங்கள் மிளகு முதலிய பண்டங்களை யேற்றிச் செல்லுதற்கு அந்நாளில் அப்பட்டினமே ஏற்றதாய் இருந்த தென்று தமிழ் நூல்களானும், தாலமி முதலிய யவனாசிரியர் குறிப்புக்களானும் தெரிகின்றது.

தண்புனல் நிறைந்த ஆம்பிராவதி என்னும் ஆன்பொருநை யாற்றங் கரையில் அழகுடன் அமைந் திருந்த வஞ்சிமா நகரம், நெடுஞ் சேரலாதனுடைய காலத்திலும், அவன் மைந்தன் செங்குட்டுவனுடைய வாணாளிலும் சாலச் சிறந் திருந்த தாகும். அம்மூதூரின் அமைப்பு முதலியவற்றைப் பற்றி முன்னூல்கள் மிக்க சிறப்புடன் கூறுகின்றன. அந்நகரம் பெரிய தொரு கோட்டையை யுடைத்தா யிருந்தது. அக்கோட்டைக்கு வெளியிற் கடவுளர் கோயில்களும், பொது விடங்களும், சமணப் பள்ளிகளும், பெரும் பொழில்களும், பொய்கைகளும் மிக் கிருந்தன. அவ்விடங்களில் தவ முனிவரும், ஞானிகளும், கலைஞரும் எந்நேரமும் தங்கி நிறைந் திருந்தன. அந்தக் கோட்டையைச் சூழ்ந் திருந்த புறக்குடி என்னும் புறஞ்சேரியில் அரண் காவல் புரியும் படை யிருப்புக்களும், பிற நாட்டு மன்னர் தங்குதற்காக அமைத்த பல மாளிகைகளும் இருந்தன. ஆழ்ந் தகன்ற அகழி ஒன்று அக்கோட்டையைச் சூழ்ந் திருந்தது. அவ்வகழியிற் பெரு மீன்களும் முதலைகளும் நிறைந்திருந்தன. வஞ்சி மாநகரத்துட் பெருகி யோடும் கழி நீரெல்லாம் முடிவில் அவ்வகழியில் வந்து சேரும். கோட்டைக்கும் அந்த அகழிக்கும் இடையிற் காவற் காடு ஒன்று இருந்தது. பகைவர் நெருங்கி வராம

விருக்கக் காத்தற் பொருட்டு அக்கோட்டையின் நெடிய மதிற் சுவரின் மீது பல யந்திரங்கள் அமைத்து வைக்கப்பட்டிருந்தன. மிக்க வேலைப்பாடுடன் வானளாவக் கட்டப் பட்ட உயர்ந்த கோபுரங்களோடு கூடி யிருந்தது அக்கோட்டையின் வாயில். அக்கோபுரங்களின்மீது உயரத் தூக்கிக் கட்டிய கொடிகள், எப்பொழுதும் அழகுடன் அசைந்து கொண்டிருந்தன.

கோட்டையினுள் வாயிலுக் கருகில், அவ்வாயிலைக் காக்கும் காவலாளர் நெருங்கி வாழ்ந் திருந்த தெருக்களும், மீன் விலைஞர், இறைச்சி விற்போர், கள் விற்போர் குடி யிருந்த வீதிகளும், உப்பு வாணிகர், பிட்டு அப்பங்கள் விற்போர், பலவகை நறுமணப் பண்டங்களை விற்போர் உறைந் திருந்த மறுகுகளும் அமைந் திருந்தன. அத் தெருக்களுக் கப்பால், மட் கலஞ் செய்யுங் குயவர், செம்பு கொட்டிகள், வெண்கலக் கன்னார், பொற் கொல்லர், தச்சர் மட் பாவை செய்வோர், தையற்காரர், மாலை கட்டுவோர், சோதிடர், பாணர் முதலியோர் வாழ்ந் திருந்த வீதிகள் நிரையாக விருந்தன. இரத்தினப் பணியாளர் வீதிகளும், சங்கறுப்போர் வாழ்ந் திருந்த தெருக்களும், நெல் புல் முதலிய கூலவகை விற்போர் குடி யிருந்த மறுகுகளும் ஒரு சார் இருந்தன. ஒரு புறத்தில், காடகக் கணிகையர், சூதர், மாகதர், வேதாளிகர், பொதுமகளிர் முதலியோர் தனித் தனியே வாழ்ந் திருந்த தெருக்கள் பல விளங்கின. பொன் வாணிகர், ஆடைகள் நெய்து விற்போர், இரத்தின வியாபாரிகள், அரசாங்க அதிகாரிகள் உறைந் திருந்த வீதிகள் எண்ணில்வாய்க் குலவின. கோட்டையின் மத்தியில் அந்தணர் அக்கிரகாரங்களும், மன்னர் குலத்தினர் வாழ்ந் திருந்த தட நெடு மாளிகைகளை யுடைய அகன்ற பெருந் தெருக்களும் அமைந் திருந்தன. யாவரும் வந்து தங்குதற்

குரிய இடங்களும், அம்பலமும், முச்சந்தி நாற்சந்திகளும், பாய்ந் தோடும் அருவிகளை அருகிற் படைத்த அழகிய செய்குன்றுகளும், பொய்கைகளும், இளமரக் காக்களும், அறச் சாலைகளும், தவப் பள்ளிகளும், பொன்னம்பலமும் அம்மூதூரில் ஆங்காங்குக் குலவின. மிக்க அழகுடன் அமைக்கப்பட்ட பௌத்த சைத்தியம் ஒன்று அந்நகரத்தில் திகழ்ந் திருந்தது.

அப்பெரிய நகரத்தின் மத்தியிற் சேரருடைய அரண்மனையானது பொன்மயமானதொரு சிறிய மேருமலையைப் போல் விளங்கியிருந்தது. கொலுவிருக்கையும், வேத்தியல் மண்டபமும், மணி யரங்குகளும் பிறவும் அவ்வரண்மனைக்குள் அழகுடன் அமைக்கப்பட் டிருந்தன. வசந்த காலத்தில் அரசன், தன் அரசியுடன் மகிழ்ச்சியோடு தங்கி யிருத்தற்காக அமைத்த இலவந்திகை வெள்ளி மாடம் என்னும் மிக அழகிய மாளிகை ஒன்றும் இருந்தது. பொய்கைகளையும், சோலைகளையும், இளஞ் செடிகள் நிறைந்த பூந்தோட்டங்களையும் சுற்றிலும் படைத்த வேளாவிக்கோ மாளிகை என்னும் மாட கூடங்கள் நிறைந்த அழகிற் சிறந்த மாளிகை ஒன்று அந்நகரத்தின் புறத்தே கட்டப்பட் டிருந்தது. வேண் மாடம் என்னும் மற்றொரு பெயரையும் அது படைத் திருந்தது. பொதினி மலைத் தலைவனும், செங்குட்டுவனுடைய மாற்றாந் தாய்ப் பாட்டனுமாகிய வேளாவிக் கோமான் பெயரைப் பெற்றிருந்த தாதலால் அம்மாளிகை, அவன் வாழ்ந் திருத்தற்காக அமைக்கப்பட்டதோ? அன்றி, அவனால் ஏற்படுத்தப்பட்டதோ? தெரிகின்றிலது. செங்குட்டுவன் காலத்தில் அம்மாளிகை, பிறநாட்டு மன்னர் தங்குதற்குப் பயன் படுத்தப்பட்டிருந்த தாகும். அவ்வஞ்சி நகருக்குப் பக்கலில் திருமால் பள்ளிகொண்டருளிய ஆடக மாடம் என்னும் கோயில் ஒன்று, மிக்க மாண்புடன் விளங்கி

# பகுதி - உ

## நெடுஞ் சேரலாதனுடைய தந்தை

சேர மன்னர்க்குள் மிகப் பழமையானவ னுவான் உதியஞ் சேரல் என்பான். அறிவு ஆற்றல் முதலிய வற்றில் மேம்பட் டிருந்த துடன் அவன், வாய்மை என்னும் தூய்மைக்கு உறையுளாயு மிருந்தான். தன் உயிரினும் இனிதாகப் பிற உயிர்களை மதித்து, எல்லா உயிர்களிடமும் அன்பும் அருளும் உடையவனு மிருந்தான் அப் பெருந் தகையாளன். கதிரவனும் திங்களும் திசைமாறிச் செல் லினும், வேதம் நெறி பிறழினும், உலகத்தின் நிலைமை தடுமாறினும் தான் சொன்ன சொல்லி னின்று தவறாத உறுதிப்பா டுடைய வாய்மையோனுய் அவன் விளங்கினுன். குழுமூரில் பெரிய தோர் அறச்சாலையை யமைத்திட்டு அவன், யார் எந்நேரத்தில் வந்து கேட்டாலும் இல்லை யென்னுமல் உணவளித்து வந்தான். அந்தச் சோறிடும் சாலையில் இரவு பகல் ஓய்வின்றிக் கணக்கற்ற சமையற்காரர் உணவு சமைத்துக்கொண் டிருந்தனர். அவ்வாறு எப் பொழுதும் சமையல் செய்து கொண்டிருந்ததால், அவ் விடத்தில் உண்டாயிருந்த பேரோசை, பெரிய மலையிழ் அருவியின் முழக்கத்தைப் போல் எந்நேரமும் இடை யரு மல் முழங்கிக்கொண் டிருந்தது எனத் தமிழ்ப் பெருமக ஞர் ஒருவர் கூறி யுள்ளார். அச்சேரன் அங்ஙனம் அறத் தொழிலில் ஈடுபட்டு விளங்கிய காலத்திற் குருக்ஷேத்திரம் என்னும் இடத்திற் பாரதப்போர் என்னும் பெரும் சண்டை ஒன்று நிகழ்ந்தது. அச்சண்டையிற் பாண்டவர் துரியோ தனுதிய ராகிய இரு திறத்துப் படைகளுக்கும் உணவளிப் பதாக ஒத்துக்கொண்டு அந்த உதியஞ் சேரல், சற்றும் சலித்த லின்றித் தான் சொன்னவண்ணம் பல கோடிக்

கணக்கான அவ்விரு திறத்தினார் சேனைகளுக்கும் உண்டி யுதவினான். அவ்வரிய செயலைக் கண்டு உலகத்தினர் அனை வரும், அவனை மிகப் புகழ்ந்தனர்.

அச் சேரன், பிறர் நாடுகளை வென்று, அவற்றைத் தன்னுடைய குலத்திற் பிறந்தவராயிருந்த பெரியவர்க்குக் கொடுத்து, அவரைக் காத்து வந்தான்; அப்பெரியவர் எல் லாரும் துறக்க மெய்திய பின்னர், அவர்க்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடமைகள் எல்லாவற்றையும் அனைவரும் நன்கு மதிக்குமாறு சிறப்புடன் செய்து புகழ் பெற்றான். அவ்வரசன் வானவரம்பன் என்னும் ஒரு சிறப்புப் பெயரை யும் பெற்றுத் திகழ்ந்தான். அவனுடைய மரபினர் எல்லாரும், வானவர் என்னும் பொதுப் பெயரால் நூல்களில் வழங்கப் படுகின்றனர்.

அவ்வானவரம்பன் அற வழியில் நின்று கோல் கோடாமல் நாட்டைக் காத்துப் பகைவரை யடக்கி யாரும் திறமையில் வல்லவனா யிருந்தான். அவனிடம் பகை கொண்ட மன்னர் சிலர், அவனுடைய அமைச்சர் முதலி யோருக்குப் பொருள் கொடுத்து, அவரைத்தம் வயப்படுத்தி அவ்வரசனைக் கெடுக்கச் சூழ்ச்சிகள் செய்தனர். முரஞ்சி என்னும் ஓர் ஊரில் முடிநாகராயர் என்னும் தமிழ்ப் புலமை யில் மிக்க பெரியார் ஒருவர் இருந்தார். அப்புலவர் பெரு மானரை 'முரஞ்சியூர் முடிநாகராயர்' என்று வழங்குதல் மரபு. அவர் அந்தப் பெயரைப் பெற்றமைக்குக் காரணம் யாதோ? தம் முடியில் நாகத்தை யணிந்திருந்தனரோ? அன்றி, நாகத்தினை முடியில் அணிந்த சிவ பெருமானுடைய பெயர் அவருக்கு இடப்பட்டதோ, அறிகின்றிலேம்.

முடிநாகராயர், சேரனுடைய மாற்றலர் செய்துகொண் டிருந்த சூழ்ச்சிகளை யறிந்து, விரைந் தேகி, உதியஞ் சேரனு

டைய கொலுவிருக்கையை யடைந்து, அச்செழியனை நோக்கி, "மாட்சிமை பொருந்திய மன்னரே! நீர் நுண் ணறிவு படைத்தவர் என்பதில் ஐயமிலது. உம்முடைய அமைச்சர் முதலியோர் உம்மிடம் அன்பு திரியாதவராய் இருக்கும்படி செய்து நீர் என்ஞான்றும் இனிதாக வாழ்ந் திருப்பீராக," என்று குறிப்பாகச் சொல்லி, அவ்விடத்தை விட்டகன்றார்.

உதியஞ் சேரல் மிக்க புத்திக்கூர்மை படைத்தவ னுவான். புலவருடைய மொழிகளைச் செவி யுற்ற அவன், தன் பகைவர் யாதோ தனக்குக் கேட்டைச் சூழ்விக்கத் தொடங்கி யுள்ளார் என்பதையும், தான் அக்கேட்டிற்கு உட்படாமல் கருத்துடன் இருத்தற் பொருட்டுப் புலவர் பெருமானார் அங்ஙனம் சொல்லிச் சென்றார் என்பதையும் விரைவில் ஆராய்ந்து உணர்ந்தான். உடனே அச்சேரலன், நாடு முதலியவற்றைக் கொடுத்தும், ஏனாதி, காவிதி முதலிய பட்டங்களை வழங்கியும் தன்னுடைய ஐம்பெருங் குழுவை யும் எண் பேராயத்தையும் மகிழ்வித்துத் தன் வயமாக்கிக் கொண்டான். அதனால், அவனுடைய மாற்றலர் செய்து கொண்டிருந்த சூழ்ச்சிகள் பயன்பட்டில வாயின. எல்லா அரசரினும் அச்சேரன், துணைவன்மையினும் செல்வத்தி லும் மிக்கோனுனன்; வட நாட்டு மன்னர்களாலும் நன்கு மதிக்கப் பெற்றான்.

வெளியம் என்னும் நகரத்திற்கு உரியவனுன வெளி யன் வேண்மான் என்பான் ஒருவன் இருந்தான். அவன் பெற்ற நல்லினி என்னும் பெயரை யுடைய மகள் ஒருத்தி, கடிமணத்திற் குரிய பருவத்தை யடைந் திருந்தாள். அவளைக் குல முறைக் கிணங்க உதியஞ்சேரல் மணந்தான். அம்மாது, தன் பெயருக் கேற்ப இனிய தன்மையும், பேரழகும், கற்பும் உடையவளாய்த் தன் கணவன் விருப்

பத்தைக் குறிப்பால் அறிந்து, அவன் இன்புறும் வண்ணம் செய்து, அவனோடு இன்பத்துடன் வாழ்ந் திருந்தாள். சில்லாண்டுகள் செல்ல அம்மங்கை, ஒருவர்பின் ஒருவராக இருவர் மைந்தரைப் பயந்து மகிழ்ந்தாள். அவளும், அவளுடைய கொழுநனும் அப்பிள்ளைகளை அன்புடன் பாராட்டிச் சீராட்டி வளர்த்து வந்தனர். செவ்வனே வளர்ந்து அப்பிள்ளைகள், கல்வி கற்றனர்; தங் குலத்திற் குரிய படைக்கலப் பயிற்சியிலும் கைதேர்ந்தவராய்த் திகழ்ந்தனர். கல்வி, அறிவு, நல்லொழுக்கம், வீரம் முதலியவற்றிற் சிறந் திருந்ததுடன் அம்மைந்தர், தந்தைக்குப் பின் மைந்தர் என்பதற்குத் தகத் தம் தந்தையைப் போலவே அறஞ் செய்தலிலும் ஆழ்ந்த நோக்க முடையவராய் இருந்தனர். அவ்விருவருள் மூத்தோன் நெடுஞ் சேரலாதன் என்னும் பெயரை யுடையவ னவான்; பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்னும் பெயரைப் படைத்தவ னவான் இளை யோன்.

## பகுதி - ௩

## நெடுஞ் சேரலாதன் அரிய செயல்கள்

உதியஞ்சேரலுக்குப் பின்னர் அரசியலை யேற்றுச் சேர நாட்டை நெடுஞ் சேரலாதன் அறவழியிற் புரந் தான். உம்பற்காடு என்பது முதலிற் சேரருக்கு உரியதா யிருந்தது. பின்னர் அதை வேற்றோர் அரசன் கவர்ந்து, தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டான். நெடுஞ் சேர லாதனுடைய தம்பியாகிய பல்யானைச் செல்கெழு குட்டு வன், தன் வன்மையினால் அந்த உம்பற்காட்டை வென்று, அவ்விடத்திற் குடியிருந்து, அதை யாண்டு வந்தான்.

ஒப்பற்ற வீரத்தைப் படைத்திருந்த அவன், தன்னுடைய மூத்தோனிடம் அடக்கமும் அன்பும் உடையவனு யிருந்த துடன், தன் குலத்துப் பிறந்த முதியோர் மாட்டும் மிக்க தண்ணளி படைத்திருந்தான். நாட்டில் தமக்குப் பங் கின்றி யலைந்துகொண் டிருந்த அம்முதியோரை யழைத்துத் தழுவித், தன்னுட்டை அவர்க்குப் பகுத்துக் கொடுத்து, அவரை மகிழ்வித்தான் அவ்விளையோன்.

நெடுஞ்சேரலாதன், பெரும்பிழைசெய்த தன் பகைவ ரிடமும் அருவருப்புக் கொள்ளாமல் இரக்கங் காட்டும் பெருந்தன்மை படைத்தவனு யிருந்தான். தன்னை யெதிர்த்து வந்த பகைவரைப் பார்த்து அவன், "ஐயோ! இவர் வீணே சண்டை செய்து அழியத் துணிந்தனரே! இவருடைய உயிர்க்குத் துன்ப முண்டாக்காமல் இவரை வெருட்டி யனுப்பிவிடல் வேண்டும்," என்று எண்ணி மன மிரங்கி, முதலில் தன் வீர முரசத்தை முழக்கிக் காட்டு வான். அதற்கு அப்பகைவர் அஞ்சி யகன்றால் வெறிதே அம்மன்னன் திரும்பித், தன்னிட மடைவான். பகைவர் தன்னுடைய வீர முரசத்தின் முழக்கத்திற்கு அஞ்சிப் போகாமல் போர் வேட்டு எழுவ ராயின், அவரை மடக்கிப் பொருது அடக்கி, அவருடைய நாடுகளைக் கைக் கொள் வான்; அந்நாடுகளிற் கிடைக்கக் கூடிய பொன், மணி, அணி முதலியவற்றைக் கவர்ந்து தன்னுடு போந்து, அப் பொருள்களைக் கடவுளர் கோயில்களுக்குக் கொடுத்துத், திருவிழாக்கள் நடத்தி மகிழ்வான்.

கடவுளிடமும், மக்களிடமும், மற்றை உயிர்களிடமும் பேரன்பு பூண்டிருந்த அந்நெடுஞ் சேரலாதனுடைய ஆட்சியில் எவ்வுயிரும் எத்தகைய இடையூறு மின்றி இன் புற் றிருந்தது. கடவுள் ஆணையால் அவ்வேந்த னுடைய நாட்டில் முள்ளுடைய முருக்கு மரமும், தன் மீது சாய்ந்த

வரைக் குத்தி வருத்தி யறியாது. அவ்வரசனுடைய நாட்டைச் சார்ந்த காடுகளில் இருந்த மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான்களும், அச்ச மின்றித் துள்ளித் திரிந்து, ஆடிக் களித் திருந்தன. ஓர் அறிவு படைத்த உயிராகிய முண்முருக்கும் பிற உயிர்களை வருத்திய தில்லை என்றால், சிங்கம் புலி முதலிய கொடிய விலங்குகளால் எவ்வுயிருக்கும் யாதொரு துன்பமும் நேர்ந்திராது என்பது சொல்லாமலே விளங்கு மன்றோ? புலியும் ஆடும் ஒரு துறையில் தண்ணீர் குடிக்கவும், மாதர் அருகூட்டும் பைங்கிளியும் ஆடற் பருந்தும் ஒரு கூட்டில் வாழவும் அச்சேரன், செங்கோ லோச்சித் தன்னாட்டைக் காத்தான்; வழிகளின் பக்கங்களிலும், சாலைகளின் ஓரங்களிலும் மறைந் திருந்து, அவற்றாடு செல்லும் வணிகர் முதலியோரை மடக்கித் துன்புறுத்தத்தக்க ஆறலைக் கள்ளர் முதலிய கொடியவர் தன்னாட்டில் எவ்விடத்தும் இராமற் செய்தான்; வணிகர், வேளாளர் முதலியோர்க்கு வேண்டியவற்றைச் செய்த துடன் காடுகளையும் பாழான விடங்களையும் சீர்திருத்தி, ஊர்களையும் நகரங்களையும் புதிதாக உண்டாக்கி, அவ்விடங்களில் மக்கள் பலரைக் குடி யேற்றினான்.

மன்னுயிரைத் தன்னுயிராக மதித் திருந்த நெடுஞ்சேரலாதன், சண்டை செய்து பல உயிர்களையும் கொல்லும் செயலில் விருப்பங் கொண்டிருந்தவன் அல்லன்; ஆயினும், தன்னை யெதிர்த்து வந்த பகைவரை வெறிதே விடுவானும் அல்லன். மாற்றலரை யெதிர்த்துப் போர் புரிந்து வெற்றியடைதலில் மிகச் சிறந்த வீரனாவான் அவன். தமிழ் நாடு முழுவதையும் வென்று தன் கோல் செல்லுமாறு ஆண்ட அவ்வரசன், தன் பகைவரை யடக்க வட நாட்டு மீதும் படை யெடுத்துச் சென்றான்; அங்கிருந்த ஆரிய வரசர் எல்லாரையும் வென்று, தன்னடிகளை வண

கட்டி வருமாறு அவரைச் செய்தான். குமரி முதல் இமயம் வரை வென்று தன்னடிப் படுத்திய பின்பு அவன், தன் வெற்றிக்கு அறிகுறியாமாறு இமய மலையின் கொடு முடியில் தன்னுடைய வில் அடையாள முடைய இலச்சினையை-முத்திரையைத் தீட்டித் தன் நகரமாகிய வஞ்சியை நோக்கித் திரும்பினான். குமரிக்கும் இமயத்திற்கும் இடைப்பட்ட நிலம் முழுவதையும் அவன் புரந்தான். உலகத்தினர் பலரும் அவ்வேந்தனை இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்று புகழ்ந்து அழைக்க லாயினர்.

தமிழ் நாட்டிற்கு மேற்றிசையி லிருந்த யவன வரசர், இமயவரம்பனிடம் பகை கொண்டிருந்தனர். அவருடைய செருக்கை யொழிக்கக் கருதி இமயவரம்பன், திரண்ட படைகளுடன் சென்று, அவ்வரசரை யெதிர்த்துக் கொடும் போர் புரிந்து, அவரைப் பிடித்து, அக்கால வழக்கின்படி அவருடைய கைகளைப் பின்கட்டாகக் கட்டி, அவர் தலை களில் நெய்யைப் பெய்து, அவரிடத் திருந்த விலை யுயர்ந்த அணிகலன்களையும், வயிரம் முதலிய அரிய மணிகளையும் தண்டப் பொருளாகப் பெற்றுத் தன்னுடைய தலை நகரா கிய வஞ்சிக்குக் கொணர்ந்து, யாவர்க்கும் வரை யின்றி அவற்றை யெல்லாம் கொடுத் துதவினான்.

வெற்றியில் மிக்க அச்சேரலாதன், கடலிடையே தீவொன்றில் வாழ்ந்திருந்த தன் பகைவர் மேற் கப்பற் படையுடன் சென்று, அவருடைய காவன் மரமான கடம் பையை வெட்டி யெறிந்து, அப்பகைவரைப் போரில் தொலைத்து வெற்றிமுரசம் முழங்கச் செய்தான். அந்த இமயவரம்பன், தனக்குப் பகைவரா யிருந்த ஏழு அர சரை வென்று, அவருடைய முடிகளைக் கொண்டு மாலை யொன்றைச் செய்து, அதைத் தன் மார்பில் அணிந்து மகிழ்ந்தான்.

பகைவரை வென்று அடக்குதலில் நிகரற்ற வன்மை படைத்திருந்த அவ்விமய வரம்பன், கொடையிலும் இணையற்றவனாய் விளங்கினான்; தமிழ் மொழியினிடம் மிக்க ஆர்வங்கொண்டு, அம்மொழியைக் கற்ற புலவரிடம் எல்லையற்ற அன்புடையவனா யிருந்தான். தன்னை நாடி வந்த புலவரை முகமன் கூறி வரவேற்று, அவருக்கு வேண்டியவற்றை யாதொரு தடையு மின்றிக் கொடுத் தனுப்பும் சிறந்த தன்மை அவனிடம் எந்நாளும் குடிகொண்டிருந்தது. யாவரினும் தமிழ்ப் புலவரை உயர்வாக மதித்துத், தான் பெற்ற அரிய பொருள்களை முன்னர் அப்புலவர்க்கே ஈந்து இன்புற் றிருந்தான் அவ்வள்ளியோன். குமட்டூர்க் கண்ணனார் என்னும் அந்தணர் குலத் துதித்த பெரும் புலவர் ஒருவர், பதிற்றுப்பத்து என்னும் நூலில் இரண்டாம் பத்தைச் சேர்ந்த பத்துப் பாடல்களால் அவ்வேந்தனைப் பற்றிப் பாடியுள்ளார். கண்ணனார் அக்கோவையைப் பாடி இமயவரம்ப னிடம் கொடுக்க, அதைப் பெற்றுப் படித்து மகிழ்ந்து அவன், தன்னாட்டி லிருந்த உம்பற்காட்டில் ஐந்நூறூரைப் பிரமதாயமாகக் கொடுத்ததோடு முப்பத்தெட்டு யாண்டுகள் வரைத் தென்னாட்டு வருவாயில் ஒரு பாகமும் அப்புலவருக்கு அளித்தான். அந்நூலில் அச்சேரனுடைய வீரம்கொடைமுதலியவை தெற்றென விளங்கக் காணலாம்.

---

## பகுதி - ௪

## இமயவரம்பனுடைய மைந்தர்

திகழொளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் மணக்கிள்ளி என்பானுடைய மகளாகிய நற்சோணை என்பாளையும், வேளாவிக் கோமானான பதுமன் என்பானுடைய மகள் ஒருத்தியையும் இமயவரம்பன்

மணந்து இன்பத்துடன் இல்லறத்தை நடத்தி வந்தான். நற்சோணையி னிடம் அவனுக்குப் பிறந்த மைந்தர் இருவ ராவர். அவருள் மூத்தவன், செங்குட்டுவன் என்னும் பெயரைப் பெற்றான்; மேம்பட்ட ஒழுக்க முடையோனு யிருந்த இளையோன், இளங்கோ வென்னும் பெயரை யடைந்தான். அவ்விருவரும் நன்றாய் வளர்ந்து கல்வி பயின்று வந்தனர். இமயவரம்பனுக்குப் பதுமன் மகளி டம் தோன்றிய மக்கள், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனு மாவர்.

குடக்கோ நெடுஞ் சேரலாதன் ஒருநாள், தன்னுடைய மூத்த மனைவி பயின்ற மைந்தர் இருவருடன் கொலு விருக் கையில் வீற்றிருந்தான். அவ்வேளை, வருவது கூறவல்ல சோதிடன் ஒருவன், அவ்வத்தாணி மண்டபத்தை யடைந்து ஓரிடத்தில் அமர்ந்தான். அவன், நெடுஞ் சேரலாதனுடைய புதல்வர இருவரையும் அடிமுதல் முடிவரை யுற்று நோக்கி, மன்னனைப் பார்த்து, "கொற்றவரே! உமக்கு விரைவிற் போர்க் களத்தில் மரண முண்டாகக்கூடும். நீர் விண்ணுல கம் சென்ற பின்பு உம்முடைய மக்கள் இவ்விருவருள், இளையோனே இந்த அரசாட்சிச் செல்வத்திற்கு உரியவ னுவான். ஆதலால், இவ்விளையோனுக்கு இப்பொழுதே முடி சூட்டி மகிழ்வீராக," என்று கூறினன். அம்மொழி களைக் கேட்டு அந்த அவைக்கண் இருந்தவர் அனைவரும் திடுக்கிட்டனர்.

சோதிட னுரைத்த சொல்லைக் கேட்டுச் செங்குட்டு வன் மன முளைந்து, அவனிடம் சினங் கொண்டு உறுத்துப் பார்த்தான்; தன் தம்பியி னிடம் கரை கடந்த பொறாமை கொண்டான்; கண்ணெரி தவழத் தம்பியை நோக்கிப் பாம் பைப் போலச் சீறிப் பெருமூச் செறிந்தான். அதைக் கண்ட இளங்கோ, நிமித்திகனைப் பார்த்து, "நீ யாது

கூறினை? இவ்வரசாட்சியை முறைகேடாகக் கொண்டு யான் ஆள்வேனே? உன்னுடைய கலைத்திறம் மிக நன்று யிருக்கின்றது,'' என்று உள்ளக் கொதிப்புடன் கூறி, "கல்வியிலும் ஞானத்திலும் மிக்கோனாய் இருப்பதற்கு விரும்பினேனே யன்றி இந்நாடாட்சியைப் பெறக் கனவிலும் யான் இச்சித் தறியேன். ஒருவனுக்கு வலிமையும் இனிய வாழ்க்கையும் மனமொத்த அவனுடைய உடன் பிறந்தவரால் உண்டாதல் வேண்டும். மனமொத்த உடன் பிறப் பில்லாதான் தோள்வன்மை பயன் படுவதில்லை. இராமபிரான் அன்புடைத் தம்பியரால் இன்ப மடைந்ததும், துரியோதனன் தமையன் தம்பிமாருடன் பகைத்து அழி வடைந்ததும் உலக மறிந்தனவே யாம். என்னுடைய தமையனும் யானும் இன்பத்தையும் நல்லிசையையும் அடைதற் பொருட்டு யான், அவனிடம் மாறு கொள்ளாமல் இருப்பேன். அவனே அரசியலை யேற்று இவ்வுலகத்தை யாண்டு வாழ்வானாக. அவனுடைய எண்ணத்திற்கு மாறுபா டின்றி நடந்து யான், விண்ணுலகத்தின் அரசை யேற்று வாழ்வேனாக,'' என்று மொழிந்து, அப்பொழுதே ஆங்கிருந்தவர் எல்லாரும் அறிய இவ்வுலகப் பற்றைத் துறந்து, அந்தமில் இன்பத்தை யுடைய வீட்டுலகத்தை யாள்வதற் குரிய வேந்தனானான்; உடனே அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுக் கருவூரின் கீழ்பா லிருந்த திருக்குணவாயில் என்னும் இடத்தை யடைந்து, சமண சமயத்தைத் தழுவிய துறவியாய் ஓர் அருகன் கோயிலில் தங்கி யிருக்கலானான். செங்குட்டுவனே சேர நாட்டு அரசியலை யேற்றற் குரியவனானான்.

தன் தம்பியினுடைய நுண்ணறிவையும் அரிய செயலையும் கண்ட செங்குட்டுவன், தான் அந்த இளவலிடம் கொண்ட கெட்ட எண்ணத்திற்காக மனம் வருந்தித் தன்

லைத் தானே நொந்து கொண்டான்; தம்பியி னிடம் வரம்பு கடந்த அன்பு பூண்டவ னுனன். துறவெய்திய பின்னர் அந்த இளங்கோ, இளங்கோவடிகள் என்னும் அரிய பெய ரைப் பெற்றான். பேரன்பு கொண்டு செங்குட்டுவன், எந் நேரமும் இளங்கோவடிகளிடமே தங்கி யிருக்கலானுன். அவ்வடிகளுடன் கலந்து ஆராய்ந்து பார்க்காமல் அச்செங் குட்டுவன் எதையும் செய்திலன். இளங்கோவடிகளுடைய சொல்லை எல்லாம் வல்ல இறைவனுடைய அருள் மொழி யாகக் கொண்டு அரசு புரிந்தவனே யாவான் அச்செங் குட்டுவன். அவ்விருவரும், தம் ஆயுட் காலம் வரையில் ஒருவரை யொருவர் விட்டுப் பிரித லின்றியும், எட்டுணை மன வேறுபா டின்றியும் அன்புற்று இன்புற் றிருந்தனர். இளங்கோவடிகள், ஐம்பெருங் காப்பியங்களுள் இரண்டாங் காப்பியமாகிய சிலப்பதிகாரம் என்னும் அரிய நூலை யியற் றித் தம்முடைய தமையன் பெயரை உலகுள்ளளவும் நிலைத் திருக்கச் செய்தார்.

---

## பகுதி - ௫

## கொடைக்காக வருந்திய குற்றுயிர்

ஒருவராலும் வருணித்துச் சொல்லுதற்கு அரிய பேரழகையும் ஒளியையும் பொருந்திய சிறந்த தொரு முத்து மாலை இமயவரம்பனுக்குக் கிடைத்தது. அதை மிக்க மகிழ்ச்சியுடன் அவன், தன் கழுத்தில் அணிந்திருந் தான். சோழ நாட்டை யாண் டிருந்த வேற்பஃறடக் கைப் பெருவிறற்கிள்ளி என்பான் இமயவரம்பனைச் சண்டைக் கழைத்தான். அச்சோழனை யெதிர்த்துப் போர் புரியப் போதற்கு முன்னுள் இமயவரம்பன், தனக்குக் கிடைத்த முத்து மாலையைக் கழுத்தில் அணிந்து தன்

னுடைய கொலு விருக்கையில் அழகுடன் வீற் றிருந்தான். அப்போது, கழாத்தலையார் என்னும் புலவர் ஒருவர் அந்த அவைக்களத்தை யடைந்தார். அத்தமிழ்ப் புலவர், கபிலர் முதலிய தமிழ்ப் பெரு மக்களும் வியந்து போற்றத்தக்க அழகிய பாக்களைப் பாடுவதில் தேர்ந்த கல்வி யறிவு படைத் தவரா யிருந்தார். மற்றும், போர்க்களத்தைக் குறித்தும், சண்டையில் வீரத்தைக் காட்டி வீழ்ந்த வீரரைப்பற்றியும் புகழ்ந்து பாடுதலிலும் அப்புலவர் பெருமானார், இணையற்ற வன்மை படைத் திருந்தார். சாவவும் வாழவும் பாடவல்ல பெருமை பொருந்திய நாக்கைப் படைத் திருந்த பெரியா ரும் அவ ராவர். அவையை யணுகியவுடன் அந்தப் பெரும் புலவர், நெடுஞ் சேரலாதனைப் புகழ்ந்து சில பாடல் களைப் பாடினார்.

கழாத்தலையாரை அன்புடன் வரவேற்று முகமன் கூறி, அவருடைய பாடல்களைக் கேட்டு உளமிக மகிழ்ந்த சேரன், அவருக்கு ஏராளமான பொருளைக் கொடுத்தான். அப்படிக் கொடுத்தும் அந்த அரசன், மன மகிழ்ச்சி யடைந்தான் அல்லன். தான் கொடுத்த பொருள் சிறிதளவே யாகு மென்றும், கழாத்தலையா ருடைய பெருமைக்கு அது போதிய தாகா தென்றும் அச்சேரலாதன் உட் கொண்டு, அப்புலவரைப் பார்த்து, "அருள் மிகப் படைத்த பெரியீர்! உம்முடைய அரிய பாடல்களுக்கு எத்துணைப் பொருள் கொடுப்பினும், போதாததே யாகும் என்பதை யான் அறிவேன். ஆயினும், நான் இதோ கழுத்தில் அணிந் திருக்கும் இவ்வரிய முத்து மாலையை உமக்கு ஈவேனாயின், என் மனம் ஒருவாறு இன்புற் றிருக்கும். சோழன் பெரு விறற் கிள்ளியை யெதிர்த்து நாளைப் போர் தொடங்கப் போகின்றேன் யான். அந்தச் சண்டையிற் சோழனை வென்று திருமகளார் அருளைப் பெற்றுக் களிக்கும்போது

யான் அணிந் திருக்கும் இந்த முத்து மாலையை உமக்குத் தர இச்சிக்கின்றேன். ஆதலால், என்னை அந்தப் போர்க் களத்தை யணுகி நீர் பார்ப்பீராக," என்று பரிவுடன் மொழிந்தான்.

நெடுஞ் சேரலாத னுடைய சொற்களைக் கேட்டுக் கழாத்தலையார், "வேந்தர் குல விளக்கே! நீர் நுண்ணறிவு படைத்த மன்ன ராவீர். உமக்குப் புதிதாக யான் ஒன்றும் சொல்லுதற்குத் தக்கோன் அல்லேன். சோழனை யெதிர்த்து நீர் நாளைக்குச் சண்டை யிடப் போகின்றீர். அப்போரில் யார் வெற்றி யடைவாரோ யான் அறியேன். ஒருகால், மானியாகிய நீர் நாளைப் போரில் தோற்றுப் போவீ ராயின், மறுபடியும் உம்முடைய உயிருடன் இவ்வூர்ப் புறம் திரும்பியும் பார்க்கமாட்டீர். அப்பொழுது, சிறிது நேரத் திற்கு முன்பு உம்முடைய முத்து மாலையை எனக்குக் கொடுப்பதாய்ச் சொன்ன உறுதி மொழி வீணாய்ப்போகும். மாலையிற் படுத்தவன் மறு நாட் காலையில் எழுந் திருப்பான் என்று நம்புதற்கில்லை. மேலும், காலைச் செய்வோம் என்று அறத்தைக் கடைப் பிடித்துச் சாலச் செய்வாரே தலைப் படு வார் என்று அறிஞர் கூறி யுள்ளார். அறங்களை யுடனுக் குடனே காலம் வாய்த்தபோது செய்தலே சாலச் சிறந்த தாகும். ஏற்ற காலத்தி னின்று அறஞ் செய்யத் தவறுவோ மாயின், மறுபடியும் அவ்வறத்தைச் செய்தற் குரிய புண் ணியம் கிட்டா தென்றும் அறிவுடை மக்கள் சொல்லுவர். ஆதலால், உமக்கு அறஞ் செய்ய விருப்ப மிருக்கு மாயின், இப்பொழுதே உம்முடைய முத்து மாலையை எனக்குக் கொடுப்பீராக. அதைப் பெற இச்சித்து யான் இங்ஙனம் பேசுகின்றேன் என்று நீர் நினைக்க வேண்டாம். உம் முடைய மொழியை நீர் காத்து நல்வினைப் பயனை படைதற் காகவே யான் இதுகாறும் பேசலானேன்," என்று அவ் வரசனை நோக்கிச் சொன்னார்.

புலவருடைய மொழிகளைச் செவி யுற்ற சேரன், அவ ரைப் பார்த்து, "அற முணர்ந்த ஐயரே! நீர் கூறியவை யனைத்தும் நல்லனவே யாம். ஆயினும், இந்த முத்து மாலை என்னுடைய மார்பிற் புரண்டு விளங்க யான் போர் புரிய இச்சித்துள்ளேன். ஆதலால், நாளைத் தவறாமல் நீர் போர்க் களத்தை யடைவீராயின், யாதொரு தடையுமின்றி இம் மாலையை உமக்கு அளிப்பேன்," என்று சொல்லி, அவையை நீத்து அரண்மனைக் கேகினான். அற்றைப் பொழுதும் போயிற்று.

மறு நாள் இமயவரம்பன், காவிரிக் கரையில் இருந்த ஓர் ஊராகிய போஓர் என்னும் இடத்திற் சோழனை யெதிர்த்து நெடு நேரம் கொடும் போர் புரிந்தான். அச் சேரனுடைய முத்து மாலையைப் பெறக் கழாத்தலையார் இச்சித்தவர் அல்லர். ஆயினும், அம்மன்னனுடைய கட்டளையை மறுக்கக் கூடாதென்று கருதி அவரும், அன்று அப்போர்க் களத்தை யடைந்தார். அச்சண்டையிற் சேர சோழராகிய இரு வரசருடைய படைகளுட் பல வழிந்தன. சேனைத் தலைவர்களும் சாய்ந்தார்கள். வெற்றி இன்னாருடையதென்று சொல்லுதற் கில்லை. இரு திறத்துப் படைகளும் பட்ட பின்னர், அக்காலத்து வீர வழக்கத்திற் கேற்பச் சேர சோழ ரிருவரும், கையில் வேலைத் தாங்கி ஒருவரை ஒருவர் எதிர்த்து அமராற்றினர். அவ்விருவரும், ஒருவர் கை வேலால் ஒருவர் மருமத்திற் புண்ணுற்றுக் குற் றுயிருடன் மண்ணிற் சாய்ந்தனர். அச்செய்தி அவ் விருவருடைய மனைவியர்க்கும் எட்டியது. அவ்விரு மங்கை யரும் விரைவிற் போர்க் களத்தை யடைந்து, தத்தம் கணவருடைய மார்பினைப் புல்லிப், புரண் டழுது, தம் நாயகருடன் உயிர்விடத் துணிந் திருந்தனர்.

சேரன் குற் றுயிருடன் விழுந்ததைக் கண்டு கழாத் தலையார், அளவிறந்த துக்கத்தை யடைந்தார்; அவ்வரச

னுடைய வீரம், கொடை முதலியவற்றைக் குறித்து எண்ணி யெண்ணி மன முருகிப் பலவாறு சொல்லிப் புலம்பினர். தன் கழுத்திலிருந்த முத்து மாலையைக் கழாத் தலையாருக்குக் கொடுப்பதன் முன்னர் உயிர்விட நெடுஞ் சேரலாதனுக்கு விருப்ப மிருந்திலது. அம்மாலையை யெடுத்துப் புலவரிடம் கொடுப்பதற்கும் வன்மை யற்றவனு யிருந்தான். ஐயோ பாவம்! என்ன செய்வான் அம் மன்னன்? குற்றுயிருடன் துடி துடித்துக்கொண்டே இருந் தான். அவனுடைய முகத்தைப் பார்த்துப் பார்த்துக் கழாத்தலையார் அழுது வருந்திக்கொண்டே இருந்தார். அச் சேரனும் புலவருடைய முகத்தை நோக்கி நோக்கி துக் கித்து வருந்தினன். வாய் திறந்து பேச அம்மன்னனால் முடியவில்லை. அவனுடைய உயிரும் நீங்கிற்றிலது.

அவ்வள்ள லுடைய உள்ளக் கருத்தைக் குறிப்பால் ஒருவாறு உணர்ந்தார் கழாத்தலையார். உடனே அவர், அச்சேரனுடைய உயிருக்கு உதவி புரியவும், சொன்ன சொல்லி னின்று தவறாத வாய்மையையும் பெருமையையும் அவன் பெற்றுப் புனிதனாய் விளங்கச் செய்யவும் எண்ணி, அவ்வண்ண லுடைய கழுத்தி லிருந்த மாலையைக் கழற்றிக் கொள்ள, அப்பொழுதே அவ்வள்ளல் உயிர் நீத்தான். உடனே நற்சோணையும் அவன்மேல் வீழ்ந்து உயிர் துறந் தாள். சோழனுடைய மனைவியும், அவ்வாறே தன்னுடைய கொழுநன் மார்பின்மீது கிடந்து இறந்தாள். செங்குட்டுவ னும் இளங்கோவடிகளும், தம்முடைய பெற்றோர் இறந்த மைக்கு ஆற்றொணாத் துயர மடைந்து, அழுது புலம் பினர். தன்னுடைய தாய் தந்தையர்க்குச் செய்யவேண்டிய இறுதிக் கடமைகள் எல்லாவற்றையும் முறையே பெரும் புகழுடன் செங்குட்டுவன் செய்து முடித்தான். அவன், தன் இரு முதுகுரவரை அடிக்கடி நினைந்து பன்னாட்காறும் மன முருகி வருந்தினன்.

என்னே புதுமை! எத்துணை வியப்பு!! சொன்ன சொல்லி னின்று தவறாமற் காத்துக்கொள்ள உயிர் விடும் போதும் முயன்ற இமயவரம்பன் நெடுஞ் சேரலாத னுடைய பெருந் தன்மையையும், கொடையின் திறத்தை யும், மன வுறுதியையும் என்னென்று சொல்லலாம்! அம் மம்ம! பெருவியப்பு!! கொடையைக் கருதி உயிர்விட விருப்ப மின்றிக் குற் றுயிருடன் கிடந்து வருந்திய புனித னாய அச்சேரலாதனைப்போன்ற வள்ளியோன் ஒருவனை எந்நாட்டிலும், எப்பொழுதும், எவரும் கண்டிலர். அவ் வள்ளலைப் பெற்றுத் திகழ்ந்த சேர நாட்டுச் சிறப்பே சீரிய தாகும். அச்சேரனுடைய கொடையின் உயர்வை யார்தாம் மெச்சிக் கொண்டாடாம லிருப்பார்? அப்பெருந் தகை இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்து ஐந்நூறு ஆண்டு களுக்கு முன்பு ஐம்பத் தெட்டு ஆண்டுகள் சேர நாட்டில் வீற் றிருந்தவ னாவான். அந்நெடிய வாணாளின்கண் அவன் வழங்கிய கொடைக்கு அளவே இராது. ஆயினும், அவன் இறந்தபொழுது வழங்கிய கொடைக்கு எதுவும் இணை யாகாது. அவ்வரசனுக்குப் பின்னர் அவ்வனுடைய மகனா கிய செங்குட்டுவன், பெரு வீரனாய்ச் சேர நாட்டை யாண் டிருந்தான்.

என்றும் இன்பமே விளைவதாக

ROYAL PRINTING WORKS, MOUNT ROAD, MADRAS. 1935.

# சிலப்பதிகார விளக்கம்

[ஆர். பி. சேதுப்பிள்ளை பி.ஏ., பி.எல். எழுதியது]

இது ஒரு சிறந்த ஆராய்ச்சி நூல். சிலப்பதிகாரக் கதை, சிலப்பதிகார ஆராய்ச்சி ஆகிய இரண்டு பாகங்களை யுடையது. இந்நூலின் இரண்டாம் பாகம் நூலாசிரியர் பெருமை, அரச நீதியும், அரசியலும், ஆரிய அரசரும் தமிழ் அரசரும், கண்ணகியின் கற்பின்திறம், வினையின் பயன், பண்டைக்காலத் தமிழ் மக்கள் நாகரிகம், சிலப்பதிகார நூல் நயம் ஆகிய எழு வியாசங்கள் ஆராய்ச்சி முறையில் எழுதப்பட்டுள்ளன. விலை ரூ. 1-8-0.

---

# தமிழ்நாட்டு நவமணிகள்

[ஆர். பி. சேதுப்பிள்ளை பி.ஏ, பி.எல். எழுதியது]

இது, உலகத்தில் உத்தமிகளான பெண்கள் இகத்துக்கும் பரத்துக்கும் சாதனமாக அநுஷ்டித்து வரும் எல்லா விரதங்களிலும் பதிவிரதமே மிகச் சிறந்தது என்பதை வற்புறுத்திக் கூறுகின்றது. இதில், தமிழ்நாட்டில் உதித்துச் சிறப்புப் பெற்ற ஒன்பது பெண்மணிகளின் சரிதைகள் உள்ளன. ஆதிரையார், விசாகையார், மருதியார், கோப்பெருந்தேவியார், மணிமேகலையார், கண்ணகியார், புனிதவதியார், மங்கையர்க்கரசியார், திலகவதியார் முதலிய ஒன்பது பெண்களும் கற்பு நிலைமையை தமது பூஷணமாகக் கொண்டு அதனின்று சிறிதும் வழாமல் பிறந்த குலத்துக்கும் புகுந்த குலத்துக்கும் புகழுண்டாகும் வண்ணம் நடந்து மோக்ஷத்தை யடைந்தார்கள். ஒவ்வொரு பெண்ணும் படிக்கவேண்டியது அவசியம். விலை அணா 8.

---

ஒற்றுமை ஆபீஸ்,

சைதாப்பேட்டை, மதறாஸ்.

# ஒற்றுமை ஆபீஸ் பிரசுரங்கள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | ராஜராஜன் ... ... | 1 | 8 |
| 2. | சிலப்பதிகார விளக்கம் ... | 1 | 8 |
| 3. | சிலப்பதிகாரக் கதை ... | 0 | 8 |
| 4. | வள்ளிநாயகி ... ... | 1 | 8 |
| 5. | தமிழ்நாட்டு நவமணிகள் ... | 0 | 8 |
| 6. | தமிழகம் ... ... | 2 | 4 |
| 7. | கோக்ஹேல் சரிதை ... | 0 | 10 |
| 8. | சர் தாமஸ் மன்ரோ ... | 0 | 12 |
| 9. | கிறிஸ்து சரிதை ... ... | 0 | 5 |
| 10. | சுந்தரர் ... ... | 0 | 10 |
| 11. | இந்தியத் தலைவர்கள் ... | 0 | 4 |
| 12. | அன்பின் மாட்சி ... | 0 | 8 |
| 13. | பத்துப்பாட்டு வசனம் ... | 1 | 0 |
| 14. | காளிதாசன் ... ... | 0 | 12 |
| 15. | நன்னெறி நீதிக் கதைகள் ... | 0 | 5 |
| 16. | ராஜாராம் மோகன்ராய் ... | 0 | 10 |
| 17. | ஒரு குதிரையின் கதை ... | 0 | 4 |
| 18. | மூன்று பெண்மணிகள் ... | 0 | 6 |
| 19. | மகளிர் ஒழுக்கம் ... ... | 0 | 6 |

ஒற்றுமை ஆபீஸ், சைதாப்பேட்டை, மதருஸ்.